மாளிடம் பஞ்ச ஸம்ஸ்காரங்களைப் பெற்று ஸ்ரீவைஷ்ணவ ராகி வந்து நிற்க, மறுபடியும் குமுதவல்லியார், 'மற்று மொரு விரதமுண்டு; அது நிதமும் 1008 ஸ்ரீவைஷ்ணவர் களுக்கு அமுது படைத்து அவர்களுடைய ஸ்ரீபாத தீர்த்த மும் தளிகை ப்ரசாதமும் கொள்ளவேணும்; அப்படிச் செய் தால்தான் உம்மைக் கணவனாக ஏற்பேன்'' என்று சொல்ல, திருமங்கையாழ்வாரும் உடன்பட்டுக் குமுதவல்லியாரை மணம் செய்துகொண்டார்.

நிதமும் ஆயிரத்தெட்டு ஸ்ரீவைஷ்ணவர்களை அமுது செய்வித்து அவர்கள் ஸ்ரீபாததீர்த்த ப்ரஸாதங்களை ஏற்றுக் கொண்டு வநதார். இதனால் அரசனுக்குக் கட்டவேண் டிய கப்பப்பண மெல்லாம் கரைந்துவிட்டது. அரசன் பகுதிப் பணம் கேட்டு ஆளனுப்ப இன்று, நாளை, காலை, மாலை என்று சொல்லித் திருப்பிக் கொண்டிருந்தார். பிறகு அரசன் நீலரைப் பிடித்து வரும்படி சேனையை அனுப்பினான். ஆழ் வாரும் 'ஆடல்மா' என்னும் தன் குதிரையேறி வெற்றி கண் டார் பிறகு அரசனே சைன்யத்துடன் வந்து பொருதான். அவனாலும் வெற்றி காண முடியவில்லை. பிறகு ஆழ்வாரு டைய பராக்ரமத்துக்கு ஆநந்தப்பட்டுத் தந்திரமாகப் பேசி அருகே அழைத்து, ''உம்முடைய இந்த வீரச் செயலை மெச்சி னோம்: அதனால் உம்மை மன்னித்தோம்; எனினும் கப்பத் தைக் கட்டிவிடும்'' என்று மந்திரியிடம் அவரை ஒப்ப டைத்து விட்டு அரண்மனை திரும்பினான். மந்திரியும் பணம் தருமவரை கோயிலில் சிறை வைத்தான். ஆழ்வாரும் அச் சிறையில் உணவுண்ணாது பெருமாளைத் தியானித்துக்கொண்டி ருந்தார் பிறகு நான்காவது நாள் பேரருளாளன் (காஞ்சிப் பெருமாள்) அவர் கனவில், 'காஞ்சிக்கு வாரும்; கப்பப் பணம் தருகிறோம்' என்று உரை செய்தான். அதன்படி பணம் காஞ்சியில் தருவதாக மந்திரியிடம் சொல்ல, மந்திரி யும் தகுந்த பாதுகாப்போடு காஞ்சிக்கு அழைத்துப் போனான் அங்கு எங்கு தேடியும் பணம் கிடைக்கவில்லை. ஆழ்வார் மனம் குழம்பினார். பேரருளாளர் மறுபடியும் கன வில் ஆற்றங்கரையில் தனமிருக்கிற இடத்தை அடையாளங் காட்டி அங்கு வரும்படி நியமித்தார். அதன்படி ஆழ்வார் அவர்களை அழைத்துப் போய் அவ்வாற்றங் கரையில் தன மெடுத்து அரச பணத்தைக் கொடுத்துவிட்டு மீதத்தைத் தம் ததீயாராதனைக்கு வைத்துக்கொண்டார். அவர்களும் அக்கப்பப் பணத்தை அரசனிடம் கொடுத்து ஆழ்வாருக்குப் பெருமானின் அநுக்ரஹத்தையும் சொன்னார்கள். அரசனும்

விபந்து, 'இவர் சாதாரணமானவரல்ல; மஹா பாகவதர்; அதனால இந்த தரவயத்தைப பொககிஷததில் சேர்க்கக் கூடாது என்று எணணி ஆழவாரிடம பிழை பொறுபபித்துக் கொண்டு வெகுவாகச சனமானங்கள் செயதான

ஆழவாருககுக கையிலிருந்த தனமெலலாம தீாநதுவிட டது, ததியாராதனைககுப பணமிலலை அதனால கொளளை யடித்தேனும ததியாராதனம் நடத்தவேணடும என்று தீாமா னிததார் 'வழி பறிபபதும தனக்கென றிலலாமல ஸ்ரீவைஷ ணவாகளுக்காகவே யாகையால், இவா இறுதியான பேற் றிலே நிறபவா' என்று பெருமாள் எணணினா அதனால எம் பெருமான இநநிலையையே காரணமாகக கொணடு அவரைக் கைககொளள வேணடுமென்று முடிவு செயதாா ஆழவாா வழிபபறி செயகைககுத தக்கவாறு தமமவரோடு திருமணங் கொலலையிலே திருஅரசின மேலே கொடிவைததுத தம ஆட களோடு பதுங்கியிருககிற வழியிலே வயலாலி மணவாளன் மணவாளக கோலததோடு பிராட்டியோடு தோன்ற ஆழவாரும் அவாகளைத தம ஆடகளோடு வளைததுககொணடு எலலா வறறையும பறிததுக்கொணடு காலாழியைக கழறற முடி யாமையாலே பலலால் கடித்துக கழறறினாா இது கணடு மணவாளன, 'நம கலியனோ!' என்றாா

பிறகு ஆபரணங்களையும தனததையும் கடடி வைதத மூடடையை எடுககபபுக, எடுக்க முடியாமையாலே வய லாலி மணவாளரை நெருக்கி, 'மநதிரம செயதாயோா என்ன, 'ஆம, அதைச சொலலுகிறேன, வாரீா!' என்ன ஆழவாரும வாள வலியால நெருககிப பெருமாளின கடா க்ஷததாலே மடியொதுக்கி மனமடககி வாய புதைதது ஒன்ன லார் கறை குளிதத வேலணைதது நிறக, மாலான வயலாலி மணவாளரும ஆழவாா வலச செவியில திருமநதிரததை உபதேசம செயதருளினன பிறகு பிராட்டியோடு கூடிப் பெரிய திருவடி மீதூாநது தம திவய மஙகள விகரஹததைக் காடடி மயாவற மதிநலம அருளினன

ஆழவாரும தககு ஞானக் கணகளாலே கணடநுப விதது அநத அநுபவம் உளளடஙகாமையால பெரிய திரு மொழி திருககுறுநதாணடகம, திருநெடுநதாணடகம, திரு வெழு கூறறிருககை சிறிய திருமடல, பெரிய திருமடல் எனகிற ஆறு பிரபநதஙகளை வெளியிடடருளினாா மாறன் பணிதத தமிழ மறைககு மஙகையாகோன ஆறஙகம கூறினா ரெனப

இவ்வாழ்வார் திவ்ய தேசங்கள் தோறும் சென்று மங்களாசாசனம் செய்து வந்தார். அப்படி வரும்போது செய்தவைதாம் பெரிய திருமொழி. அந்த யாத்திரையில் ஆழ்வார் சோழநா டடைந்தபோது, ''நாலு கவிப் பெருமாள் (ஆசு, மதுரம், சித்திரம், விஸ்தாரம் என்னும் நால் வகைக் கவி வல்லுநர்) வந்தார்; நம் கலியன் வந்தார்'' என்று பல விருதுகளைச் சொல்லிப் போக, சம்பந்தப்பெருமான் என்பாரின் சீடர்கள் இவ்விருதுகளைச் சொல்லக்கூடாதென்று தகைந்து, அதன் வழியாக ஆழ்வாருக்கும் சம்பந்தருக்கும் கவிப்போட்டி ஏற்பட்டு ஆழ்வார் வென்று விருதூதிச் சென்றார்.

பிறகு திருவரங்கத்தில் மதிள் கைங்கர்யம் செய்தார். அது செய்யும்போது பணப் பற்றுக்குறை யுண்டாக, அதனைப் பெறுதற்கு நாகப்பட்டினத்தில் ஸ்வர்ணத்தால் புத்த விக்ரஹம் இருப்பதை அறிந்து அதைக் கொணர்ந்து எல்லாக் கைங்காயங்களையும் முடிக்க எண்ணுர். ஆனால் அந்த விக்ரஹம் யந்த்ரத்தாலே நிர்மாணிக்கப்பட்டிருந்தது. அதன் ஸூக்ஷ்ம மறிய அதை ஆக்கினவ னிருக்குமிடத்துக்கு மரக்கலமேறிச் சென்று அறிந்துகொண்டு மீளும்போது, பாக்கு ஏற்றிய மரக்கலத்தில் பாதிப் பாக்கு எனது எனத் தோலா வழக்கால் பாதிப் பாக்கைப் பெற்றுச் செல்வமாக்கிக் கொண்டு நாகப்பட்டினத்தில் யந்த்ரத்தை அறுத்துப் புத்த விக்ரகத்தை எடுத்துக்கொண்டு வர, விக்ரகத்துக்கு உடையவரும் துரத்திவர, வழியில் உழுநிலத்தில் புதைத்து வைத்து நிலத்தானோடு முறை பேசி யனுப்பி, இருட்டினதும் எடுத்துக் கொண்டு ஸ்ரீரங்கம் அடைந்து கைங்கர்யத்தைத் தொடர்ந்தார். புதத விக்ரஹத்தார் கேட்டபோது, தவணை சொல்லி நாள் குறிப்பிட்டு அந்நாளில் வந்தால் சுண்டுவிரல் குறையாமல் தருகிறேன்' என்று எழுதிக் கொடுத்தனுப்பினார். அவர்கள் வந்தபோது அவ்விக்ரஹத்தின் சுண்டு விரலைக் கொடுத்தார் அவர்கள் மறுத்து வழக்காட, 'எழுதிக் கொடுத்தபடி செய்துவிட்டார்; குற்றமில்லை' என்று தீர்ப்புக் கூற, வந்தவர்கள் வாய் திறவாது திரும்பினர். ஆழ்வாரும் மதிள் கட்டும்போது தொண்டரடிப்பொடியாழ்வாரின் திருநந்தவனம் வர, அதை யொதுக்கி மதிள் கட்டுவித்தார்.

பிறகு பெரியபெருமாள் அநுமதி கொண்டு ஆழ்வார் திருநகரியிலிருந்து நம்மாழ்வாரை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வந்து மார்கழி மாத ஏகாதசி தொடங்கித் திரு

வாய்மொழி உத்ஸவம் நடத்தியருளினார். இப்படிப் பல கைங்கர்யங்களைச் செய்து மங்களாசாஸனபரராய் எழுந்தருளியிருந்து உலகை வாழ்வித்தருளினார்.

**மதுரகவியாழ்வார் :** இவர் திருக்கோளூரில் ப்ராமண குலத்திலே சித்திரை மாதத்தில் சித்திரா நக்ஷத்திரத்தில் ஸ்ரீ குமுதகணேசாம்சராய் அவதரித்தார். இவரும் வேதாத்யயனம் முதல் எல்லா சாஸ்த்ரங்களிலும் வல்லவராய் வைராக்ய சீலராய் வாழ்ந்து வந்தார். பிறகு வடதேச யாத்திரையாகப் பெருமாள்களைச் சேவித்துக்கொண்டு அயோத்யையை அடைந்து அங்கு சிலநாள் நித்யவாசம் செய்துகொண்டிருந்தார்.

**நம்மாழ்வார் :** இவர் தாம்ரபரணி நதியின் கரையிலுள்ள திருக்குருகூரில் ஏழாட்காலும் பழிப்பிலாத வைணவக்குடியில் நான்காம் வருணத்தில் காரியாருக்கும் உடையநங்கையாருக்கும் குமாரராகத் திருக்குறுங்குடி நம்பியின் அருளால் சேனை முதலியார் அம்சமாக பகுதான்ய வருஷம் வைகாசி மாதத்தில் விசாக நக்ஷத்திரத்தில் அவதரித்தருளினார்.

ஆழ்வார் அவதரிக்கிறபோது ஆத்ம ஞானத்தை மறைக்கிற சடம் என்னும் காற்றுத் தம்மை நெருங்க, அதனைக் கோபித்துப் போகவிட்டார். அதனாலே சடகோப ரென்கிற பெயருண்டாயிற்று. எனவே ஆழ்வார். பிறந்தபோதிலிருந்து பாலுண்ணாமலும் அழாமலும் சிரிக்காமலும் வளர்ந்து வந்தார். இந்த உலகியலுக்கு மாறிய நிலைகண்டு பெற்றோர், 'நம்பிக்கு என்ன குறை செய்தோமோ!' என்று வேதனையும், உடல் வளர்ச்சிக்கும் ஏதுவானவை யில்லாமலேயே வாட்டமில்லா வளர்ச்சி கண்டு வியப்பும் அடைந்து பன்னிரண்டாம் நாள் பொலிந்துநின்ற பிரானை வணங்கி, அங்கு ஆழ்வாருக்காகவே முன்னமே வந்து திருவநந்தாழ்வான் திருப்புளி மரமாக வளர்ந்திருக்க, அம்மரத்தடியில் தொட்டில் கட்டி, 'மாறன்' என்று திருப்பேரு மிட்டு அங்கேயே விட்டுப் போனார்கள். இவ்வாழ்வாரும் தவழ்ந்து சென்று திருப்புளியாழ்வாரின் குகை போன்ற பொந்தில் நிஷ்டையாக இருந்து கொண்டு பதினாறு வருஷங்களைக் கழித்தார்.

இவ்வளவில் திரு அயோத்யையில் வாழ்ந்திருக்கும் மதுரகவியாழ்வார் ஜலவிசர்ஜனத்துக்காக (சிறுநீர் கழிக்க) வெளியே வரத் தெற்கே பெரிய தேஜஸ் தெரியக் கண்டார். அத்தேஜசு இரண்டு மூன்று நாள்களும் தெரியவே அதைக்

கண்டறியவேணுமென்று அதையே குறியாக இரவெல்லாம் நடந்து திருக்குருகூரை யடைந்தார். அதன் பிறகு தேஜசு தெரியாமையால், அவ்வூரில் விசேஷம் என்னவென்று அங்கு விசாரிக்க நம்மாழ்வாரின் நிலைகளை விவரித்தார்கள். அது கேட்டு மதுரகவிகள் திருப்புளியாழ்வா ரடியில் வீற்றிருக்கும் ஆழ்வாரைச் சேவித்தார். ஆழ்வார் கண்களைத் திறவாமலே இருந்ததால், அவருக்கு உணர்ச்சியுள்ளதா என்று அறிய ஒரு கல்லை யெடுத்து ஆழ்வாரின் முன்பு ஓசை யுண்டாம்படி போட, ஆழ்வாரும் தம் கண்களை மலர விழித்தார். அதைக் கண்டு மதுரகவிகள், பேசுவரோ என்றறியவேண்டுமென்று திருமந்த்ரார்த்தத்தை உள்ளீடாகக் கொண்டுள்ள, "செத்தத்தின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்று கேட்க, "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்!" என்று அதே அர்த்தத்தை உள்ளீடாகக் கொண்ட பதிலை யருளினார் ஆழ்வார். உடனே மதுரகவிகள், 'இவர் எல்லா மறிந்தவர்; இவரை அடைந்து உஜ்ஜீவிக்க வேணும்' என்று கீழே விழுந்து வணங்கி அவருக்குத் தொண்டு பூண்டிருந்தார். எம்பெருமானும் கருடாரூடனாய்ப் பிராட்டியோடு சேவை சாதித்து மயர்வற மதிநல மருளித் தப்முடையவை யெல்லாம் காணவைத்தான் ஆழ்வாரும் அநுபவித்து அநுபவம் வாய் வழிய மூன்று வேத சாரமாகத் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்கிற ப்ரபந்தங்களை யருளினார். பின் சாமவேத சாரமாகத் திருவாய்மொழியை அருளினார். அப்போது சில திவ்ய தேசத்துப் பெருமான்கள் திருப்புளியாழ்வாரடியிலே வந்து ஆழ்வாருக்குச் சேவை தந்து மங்களாசாசனம் பெற்று உளரானார்கள். அத்திருவாய்மொழியைப் பட்டோலை (ஓலையில் எழுதுவது) கொண்டார் மதுரகவிகள் அச்சமயங்களில் பெருமானின் சௌலப்ய சௌசீல்ய (எளிமை, நீர்மை முதலான) குணங்களில் ஆழ்ந்து ஆழ்வார் மூர்ச்சித்துப் போக, அருகிருந்து மதுரகவிகள் சைத்யோபசாரங்கள் செய்து தெளிவித்து வந்தார். இப்படி ப்ரபந்தங்களை அருளி உலகை வாழ்வித்து அவா அற்று வீடு பெற்றூர் நம்மாழ்வார்.

மதுரகவியாழ்வாரும் ப்ரபந்த ஜனங்களுக்கு மூல புருஷராயும், தமக்கு ஆசார்யராயுமுள்ள ஆழ்வாரைத் தவிர வேறு தெய்வம் அறியாதவராகக் "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்கிற ப்ரபந்தத்தை யருளிச்செய்து முமுக்ஷுக்களுக்கு ஆசார்ய நிஷ்டையை வெளியிட்டார். பிறகு ஆழ்வாரின் அர்ச்சா திருமேனியை ஏறியருளப் பண்ணி, நித்ய

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# குரு பரம்பரை வைபவம்

## ஸ்ரீமந் நாதமுனிகள் ப்ரபாவம்



ஆழ்வார்கள் அவதாரம் முடிந்த பின்னர் காலப்போக்கில் அவர்கள் அருளிச்செய்த ப்ரபந்தங்களும் இவ்வுலகில் வழக்கில் இல்லாமல் மறைந்துபோயின. இப்பெருங் குறை தீர ஸ்ரீமந் நாராயணன் மறைந்து போன ஆழ்வார்களின் தேமதுர ப்ரபந்தங்களை வெளிக்கொணர்ந்து உலகை வாழ்விக்க எண்ணினான். அதற்காக வேண்டித் தன் பரிகரங்களை 'உண்டியே உடையே'

(40-ம் பக்கத் தொடர்ச்சி)

பக்ஷ மாஸ வருஷ உத்ஸவங்களை யெல்லாம் செய்துகொண்டு வந்தார். அப்போது ஆழ்வாரின் பெருமைகளை விருதூதப் பொறுத சங்கத்தார், 'விருதுகள் சொல்லக்கூடாது; சங்கம் ஏறுத கவி' எனத் தடுக்க, மதுரகவிகளும் ஆழ்வாரைப் ப்ரார்த்திக்க, ஆழ்வாரும் "அண்டகோளத்தாரணு" என்று தனிச் செய்யுளை அருளி அச்சங்கத்தார்க்கும் தம் ப்ரபந்தங்களின் பெருமையை நிலைநாட்டினார். மேலும் "கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்!" என்று சிறு துணுக்குக்குச் சங்கப் பலகை இடங் கொடுத்து மற்றவர்களைக் கீழே தள்ள, சங்கத்தார்கள் வியந்து நம்மாழ்வாரைக் கவிகளால் பாராட்டினார்கள். ஆழ்வார்கள் வைபவம் முற்றிற்று.

என உகந்து ஓடுகின்ற இவ்வையகத்தாருக்கு உறு பொருள் இதுவெனத் தெளிவிக்கும்படி மறுபடியும் நம் ஆசாரியர்களாக அவதரிப்பித்தான்.

அவ்வண்ணம் அவதரித்தவர்களுள் குரு பரம்பரையின் ஆசார்யர்களில் முதல்வராக ஸ்ரீமந் நாதமுனிகள் வீரநாராயணபுரத்தில் ப்ராமண ஜாதியில் சொட்டைக் குலத்தில் சோபகிருது வருடம், ஆனி மாதம், அநுஷ நக்ஷத்திரத்தில், சுக்கிலத் திரயோதசியில் கஜாநநர் (யானை முகத்தர்) அம்சமாகப் பிறந்தார். இவருடைய தகப்பனார் ஈசுவர பட்டாழ்வார். புத்திரர் ஈசுவர முனிகள். இம்மூவரும் வீரநாராயணபுரத்தில் எழுந்தருளியுள்ள மன்னனார் என்கிற பெருமானுக்குத் தொண்டு செய்துகொண்டு வாழ்ந்து வந்தனர். நாதமுனிகள் திவ்விய தேச யாத்திரையை முன்னிட்டு மன்னனார் அநுமதி கொண்டு வடநாட்டுத் திருப்பதிகள் யாவற்றையும் சேவிக்கப் புறப்பட்டுக் கிரமமாகச் சேவித்துக்கொண்டு ஸ்ரீகோவர்தனபுரத்தில் யமுனைத்துறைவனை (கண்ணனை)த் தரிசித்துச் சில நாள்கள் அங்கு தங்கினர். அப்போது மன்னனார், "வீரநாராயணபுரத்துக்கு வாரும்!" எனக் கனவில் ஆணையிட்டான். உடனே நாதமுனிகள் கோவர்தனபுரத்தினின்றும் புறப்பட்டு இடைப்பட்ட திவ்விய தலங்களையெல்லாம் சேவித்துக்கொண்டு வீரநாராயணபுரம் சேர்ந்தனர். மீண்டும் பழையபடியே திருநந்தவனம் திருத்தித் தொண்டு பூண்டு ஒழிந்த காலமெல்லாம் சாஸ்த்ரார்த்தங்களை உபதேசித்துக்கொண்டிருந்தனர்.

## நாலாயிரம் பெறச்செய்த ஆராவமுதப் பதிகம்

அச்சமயம் சில ஸ்ரீவைஷ்ணவர்கள் மன்னனாரைத் தரிசிக்க வீரநாராயணபுரம் வந்தனர். அவர்கள் பெருமாளைச் சேவிக்கும்போது ஐந்தாம் பத்து எட்டாம் திருவாய்மொழியில் முதல் பதிகமான "ஆராவமுதே!" என்னும் பதிகத்தைப் பாடித் துதித்தனர். அதைச் செவியுற்ற நாதமுனிகள், "நீங்கள் 'ஆயிரத்துள் இப்பத்தும்' என்று சேவிக்கின்றீர்களே, இந்த ப்ரபந்தம் முற்றவும் உங்களுக்கு வருமா?" என்று அவர்களை வினவினர். அவர்களும், "எங்களுக்கு இவ்வளவே வருவது" என்று பதில் கூறினர். அவர்களுக்குத் தீர்த்தம் முதலியன நல்கி அநுக்ரஹித்து அனுப்பினர்.

அன்று முதல் திருவாய்மொழி ஆயிரத்தையும் பெற வேண்டுமென்னும் பேரவா நாதமுனிகள் சிந்தனையில் ஓங்கி

நின்றது. அதற்காக வேண்டி அனவரதமும் முயற்சி செய்து வந்தார். முடிவில் திடமனத்தராய் மன்னனை வணங்கி விடை பெற்றுக்கொண்டு நம்மாழ்வாரின் அவதார ஸ்தலமான திருநெல்வேலியை அடுத்துள்ள திருக்குருகூருக்கு எழுந்தருளினார் நாதமுனிகள். அங்கு விசாரித்ததில் அந்த ப்ரபந்தம் யாருக்கும் வராது என்று தெரிந்துகொண்டார். எனினும் தான் கைக்கொண்ட பணியில் சற்றும் பின்வாங்காது மேன்மேலும் முயற்சி செய்துவந்தார்.

## "கண்ணிநுண் சிறுத்தாம்பு" கொண்டு நாலாயிரம் அடைதல்

அதன் பலனாக முடிவில் ஓர் உபாயம் ஏற்பட்டது. மதுரகவி ஆழ்வார் சம்பந்தம் பெற்ற பராங்குச தாசர் என்பவரிடம் 'கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்கிற ப்ரபந்தத்தை உபதேசிக்கப் பெற்று அதை நம்மாழ்வார் திருமுன்பு ஒரே ஆசனத்திலிருந்து பன்னீராயிரம் உரு ஜபித்தார். அதன் பின்னர் நம்மாழ்வார் ப்ரத்யக்ஷமாகி, நாதமுனிகளைத் திருவிலச்சினை (சங்கு சக்கரங்களைத் தோளில் அணிதல்) முன்னாக புண்ட்ராதிகளையும் அநுக்ரஹித்து, திவ்ய ஞானமும் அருளித் திருவாய்மொழி ஆயிரம் மட்டுமல்லாமல், தாம் அருளிச்செய்த மற்ற ப்ரபந்தங்களையும் ஏனைய ஆழ்வார்கள் அருளிச்செய்த ப்ரபந்தங்களையும் தாமே உபதேசித்தருளினார். ஆக பன்னிரு ஆழ்வார்களின் (நாலாயிர) ப்ரபந்தங்களையும் பெற்ற பெரு மகிழ்ச்சியில் நாதமுனிகள் சில காலம் அங்கேயே பகவத் குணாநுபவம் செய்துகொண்டு இருந்தார்.

மீண்டும் மன்னனின் விருப்பப்படி நாதமுனிகள் வீர நாராயணபுரம் திருமன்னார் பெருமானின் நியமனப்படி ப்ரபந்தங்களை வரிசைப்படுத்தி இயலும் இசையுமாக்கித் தம் மருமக்களான மேலையகத்தாழ்வான் கீழையகத்தாழ்வான் முதலானோர் மூலமாக நாடெங்கும் பரப்பினார். ஆழ்வார்களுக்குப் பிறகு நாதமுனிகளாலேதான் திவ்ய ப்ரபந்தங்கள் திக்கெட்டும் பரவலாயின.

## நாதமுனிகள் தேவகானத்தை விளக்குதல்

ஒருசமயம் அத்தேசாதிபதியான ராஜேந்த்ர சோழன் அவையில் இரண்டு தேவதாசிகள் மனித கானத்தையும் தேவ கானத்தையும் தம்தம் கானமே சிறந்ததென்று விவாதித்துக் கானம் வல்லார்களைக் கூட்டிப் பாடினர். அந்த சதஸ்ஸில்

தேவ கானத்தை எவரும் அறிந்திராமையால் மனித கானமே பாடினவள் சிறப்பிக்கப்பட்டாள் தேவ கானம் பாடின அப்பெண் வீரநாராயணபுரம் வந்து மன்னனுரைத் தேவ கானத்தாலே பாட, நாதமுனிகள் அவளை மிகவும் கொண்டாடினார் உடனே அவள் அந்தச் சோழனிடம் சென்று தேவ கானம் அறிந்தவர் நாதமுனிகள் என்னும் விஷயத்தைத் தெரிவித்தாள் உடனே அரசன் பல்லக்கு முதலியவற்றையனுப்பி நாதமுனிகளை ராஜ சதஸ்ஸுக்கு அழைத்தான்.

'தேவ கானத்தைத் தேவரீர் அறியும்படியை நாங்கள் அறிவது எப்படி?'' என்று அரசன் கேட்டான் நாதமுனிகளும் நூறு தாளங்களை ஒரே சமயத்தில் தட்டச்செய்து அவற்றின் ஓசை நயத்தாலே தனித்தனியே ஒவ்வொரு தாளத்தின் எடையைச் சொன்னார் அரசனும் 'எடை போட்டுப் பார்த்தான் எடையில் கூடுதல் குறைதல் இல்லாமையைக் கண்டு நாதமுனிகளுக்கு வெகுமதிகள் பல கொடுக்க விரும்பினன் நாதமுனிகள் அவற்றை வேண்டாமென்று சொல்லி வீரநாராயணபுரத்திற்குத் திரும்பி வந்து வழக்கப்படி பெருமாளுக்குக் கைங்கர்யங்களைச் செய்து கொண்டு யோகத்தில் ஆழ்ந்திருந்தார் நாதமுனிகளின் யோக நிலையைக் கேள்வியுற்ற ராஜா தானும் மனைவியுமாக அவரைச் சேவித்து விட்டுத் திரும்பினன் அப்போது யோக நிலையிலிருந்தும் விழித்த நாதமுனிகள் வந்துபோன அரச தம்பதிகளைக் கண்ணனும் கோபிகளுமாகக் கருதி அவர்களைப் பின் தொடர்ந்து சென்றார் இதனை யறிந்த அவர் சிஷ்யர்களான உய்யக்கொண்டார், குருகைக்காவலப்பன் முதலானோர் தேற்றித் திரும்ப அழைத்து வந்தனர்

மற்றொரு சமயம் மன்னனுரைச் சேவிக்க வந்த அரசன் தன் மெய்க்காவலர் தலையின் மீது அடி வைத்து யானையின் மேல் ஏறுவதைப் பார்த்து நாதமுனிகள் ஸ்ரீமந் நாராயணன், பிரமா, ருத்திரா முதலானோரின் தலையில் அடியிட்டுக் கருட வாகனத்தில் ஏறுவது போலவே!' என மோகித்தார் சில காலத்திற்குப் பிறகு, நாதமுனிகள் யோக ரகஸ்யத்தைக் குருகைகாவலப்பனுக்கு உபதேசித்தார் உய்யக்கொண்டார்; 'பிணம் கிடக்க மணம் புணரலாமோ?'' என்று அதை ஏற்க மறுத்து சாஸ்த்ரார்த்தங்களையும், திராவிட வேதங்களையும் நாடும் நகரமும் நன்கறியப் பரப்பினார் நாதமுனிகளுக்கு எண்மர் சிஷ்யர்கள் அவர்களுள் குருகைக்காவலப்பனும் உய்யக்கொண்டாருமே முதன்மையானவர்கள்

## நாதமுனிகள் சிஷ்யர்களுக்கு இட்ட ஆணை

முன்னர் ஸ்ரீரங்கத்தில் திருமங்கை ஆழ்வார் காலம் தொடங்கி நடந்து வந்த அத்யயன உத்ஸவம் எனப்படுகின்ற "திருவாய்மொழித் திருநாள்" இராப்பத்து உத்ஸவம் வெகு காலமாகவே (ஆழ்வார்கள் ப்ரபந்தம் வழக்கிழந்த காலம் முதல்) நின்றுபோய் இருந்தது. அதை நாதமுனிகள் ஆரம்பித்துவைத்து மேலும் மற்றைய ஆழ்வார்களின் ப்ரபந்தங்களையும் நம்பெருமாள் திருச்செவி சாத்தியருள வேண்டுமென்று (காதில் கேட்கவேண்டுமென்று) பகல் பத்து உத்ஸவத்தையும் இராப்பத்து சாற்றுமறைக்கு மறுநாள் இயற்பா சாற்றுமறை ஒரு நாள் உத்ஸவத்தையும் ஆரம்பித்து இன்று வரையும் நடந்து வரும்படி ஏற்பாடு செய்தருளினார்.

நாதமுனிகள் தம் குமாரரான ஈசுவர முனிகளைப் பார்த்து, "உனக்கு ஒரு குமாரன் பிறப்பான்; அவனுக்கு யமுனைத்துறைவன் என்று பெயரிடும்" என்று நியமித்தார். உய்யக்கொண்டாரை அழைத்து, "யமுனைத்துறைவரை அனுசரித்தேனும் நாம் உபதேசித்த அர்த்தங்களையெல்லாம் உபதேசிக்கவேணும்" என்று நியமித்தார். யமுனைத்துறைவருக்கு யோக ரசஸ்யத்தை உபதேசிக்கும்படி குருகைகாவலப்பனுக்கும் நியமனம் செய்தார்

சில நாள்கள் கழிந்ததும் ஒருநாள் வேட்டையாடி விட்டுச் சேனையோடு ராஜா வந்து போக அதனை யோகத்திலிருந்து மீண்ட நாதமுனிகளிடம் அவருடைய பெண்கள், "ஐயா! நம் அகத்துக்கு ஒரு குரங்கும் இரண்டு வில்லிகளும் ஒரு பெண்பிள்ளையுடன் வந்து, "நாதமுனிகள் எங்கே என்று தேடிப் போனார்கள்?" என்றார்கள். நாதமுனிகளும் அவர்களை ஹநுமானும் இராம லக்ஷ்மணர்களும் சீதையுமாகப் பாவித்து வழி பாறக் கேட்டுக்கொண்டே சோழபுரம் வரை சென்றார். அங்குள்ளோரைக் கேட்டபோது நாங்கள் கண்டிலோம் என்றவாறே அம்மூவரும் தோன்றித் தோன்றி மறைந்ததால் கீழே விழுந்து மூர்ச்சித்துப் பரமபதித்தருளினார்.

## உய்யக்கொண்டார்

இவர் பராபவ வருடம், சித்திரை மாதம், சுக்கில ப்ரதமை, கிருத்திகை நக்ஷத்திரத்தில் திருவெள்ளறையில் அவதரித்தார். ஸ்ரீமந்நாதமுனிகளின் திருவடிகளை யடைந்து திவ்ய ப்ரபந்தங்களை உரையோடும், மற்றும் விசிஷ்டாத்

வைத சித்தாந்த ரஹஸ்யங்களையும் பெற்று வாழ்ந்திருந் தார். நாதமுனிகள் தம் அந்திம தசையில் யோக ரஹஸ் யத்தை அறிந்து கொள்வீரென்ன, உய்யக்கொண்டார், "பிணம் கிடக்க மணம் புணரலாமோ?" (வீட்டில் பிணம் கிடந்தால் கல்யாணம் நடத்தாதாற் போல, ஊரெல்லாம் பிணம் போல இறை ஞானமற்றவர்களாய்க் கிடக்க யோக மார்க்கத்தால் தனியொருவன் இறையோடு இன்புறுவது தகுமா?) என்று யோக ரஹஸ்யத்தைப் பெற மறுத்து சாஸ்த்ரார்த்தங்களையும், திராவிட வேதங்களையும் நாடும் நகரமும் நன்கறியப் பரப்பிவந்தார். தம் ஆசார்யரான நாதமுனிகள், "நமக்கு ஒரு பேரன் பிறக்கப்போகிறார்; அவ ருக்குச் சகல அர்த்த விசேஷங்களையும் போதித்து நம் சித் தாந்தத்திற்குத் தக்கவராக்கும்" என ஆணையிட்டுச் சென் றதை நினைவு கூர்ந்து ஈசுவர முனிகளுக்கு (நாதமுனியின் குமாரருக்கு) ஒரு புத்திரன் பிறப்பதை எதிர்பார்த்திருந் தார்: தமது அந்திய காலம் வரை பிறவாமையால் தம் ஆசார்யரின் கட்டளையை நிறைவேற்றும்படி தம் சிஷ்யரான மணக்கால் நம்பிக்குக் கட்டளையிட்டுத் திருநாட்டுக் கெழுந் தருளினர்.

## மணக்கால்நம்பி

இவர் விரோதிகிருது வருடம், மாசி மாதம், சுக்கில சதுர்த்தி, மக நக்ஷத்திரத்தில் மணக்கால் எனும் ஊரில் அவ தரித்தார். இவர் உய்யக்கொண்டாருடைய சிஷ்யர். 12 வருடங்கள் தம் ஆசார்யரைப் பிரியாது அடிமை செய்து வந்தார். உய்யக்கொண்டாரின் தேவிகளான ஆண்டாள் பரமபதித்த பிறகு, தம் ஆசார்யருடைய வீட்டுக் காரியங் களையெல்லாம் தாமே கவனித்துக்கொண்டார். ஒரு நாள் தம் ஆசார்யரின் பெண் குழந்தைகள் இருவரையும் நீராட்டி அழைத்து வரும்போது வழியில் வாய்க்கால் சேறா யிருந்த தனல் அதைக் கடப்பதற்குக் குழந்தைகள் தவித்தனர். அது கண்டு மணக்கால் நம்பியும் அந்தச் சேற்றில் படுத்துப் படியாய்க் கிடந்து தம் முதுகில் அக்குழந்தைகளை அடி வைத்துத் தாண்டும்படி செய்தார். இதையறிந்த உய்யக் கொண்டார், "இப்படியும் செய்ததே!" என்று மிகவும் கொண்டாடித் தம் திருவடிகளை அவர் முடிமேல் வைத்து அநுக்ரஹித்தார். மேலும் "உமக்கு என்ன செய்யவேண்டு வது?" என்று கேட்டார். நம்பியும் "உற்றேன் உகந்து பணி செய்து உனபாதம் பெற்றேன்; ஈதே யின்னம் வேண்டுவது எந்தாய்!" என்று பிரார்த்தித்தார். இதனல் மேலும் களிப்

புற்ற உய்யக்கொண்டாரும் மறுபடியும் நம்பிக்கு த்வயார்த் தத்தை உபதேசித்தார். உய்யக்கொண்டார் திருநாட்டுக்கு எழுந்தருளிய பிறகு, அவர் ஆணைப்படி தரிசனத்தை (ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்த சமயத்தை) மணக்கால் நம்பி தாமே நடத்தி வந்தார். மற்றும் நாதமுனிகளின் ஆணையை நிறைவேற்றும் சமயத்தையும் ஆவலுடன் எதிர்நோக்கிக் கொண்டிருந்தார்.

## ஆளவந்தார் அவதாரம்



இவ்வாறு மணக்கால் நம்பிகள் தம் சிஷ்யர்களுடனும் ஸ்ரீவைஷ்ணவர்களுடனும் ஸ்ரீவைஷ்ணவ சமய ரகஸ்யார்த்தங்களையும் திவ்ய ப்ரபந்த வியாக்கியானங்களையும் உபதேசம் செய்து கொண்டு வாழ்ந்து வரும் காலத்தில் நாதமுனிகளின் திருக்குமாரரான ஈசுவர முனிகளுக்குத் தாது வருடம், ஆடி மாதம், பௌர்ணமி, உத்திராட நக்ஷத்திரத்தில் ஒரு குமாரர் அவதரித்தார். இதையறிந்த மணக்கால் நம்பிகள் வீரநாராயணபுரத்துக்கு விரைந்து சென்று நாதமுனிகள் விருப்பப்படி அக்குழந்தைக்கு யமுனைத்துறைவர் எனத் திருநாமம் இட்டார்.

யமுனைத்துறைவரைச் சிறுவயதிலேயே பெற்றோர் வேதாத்யயனம் (வேதம் ஓதுதல்) செய்ய ஆசிரியரிடம் அனுப்பிவைத்தனர். முதல் நாள் சென்று ஓதி வந்தபின், மறுநாள் ஓதப் போனபோது முதல் நாள் சொன்னதையே சொல்லக் கேட்டு வீடு திரும்பினார் யமுனைத்துறைவர். அதைக் குறித்துத் தகப்பனார் கேட்டபோது, "ஓதின பாடத்தையே மீண்டும் ஓதுகின்றார்கள்!" என்று பதில் சொன்னார். "அவ்வாறாயின், நீர் ஓதினதைச் சொல்லும்" என்ன, யமுனைத்துறைவரும் முறை தப்பாமல் சொல்லலானார். அதைக்

கேட்டு, "இது ஒரு மேதாவிலாசமே!" என்றிருந்தனர்; பிறகு முறைப்படி வேதாத்யயனம் செய்வித்துத் திருக்கல்யாணமும் செய்வித்து வாழ்ந்திருந்தனர். சிலகாலம் சென்ற பின்னர், ஈசுவர முனிகளும் திருநாடலங்கரித்தனர்.

## யமுனைத்துறைவர்—ஆக்கியாழ்வான் வாதப்போர்

பின்னர் யமுனைத்துறைவர் மஹாபாஷ்ய பட்டர் என்னும் வித்வானிடம் சாஸ்திரங்களைப் பயின்று தேர்ந்தார். அச்சமயத்தில் அரச புரோகிதனை ஆக்கியாழ்வான் என்பவன் ராஜபலத்தால் ஏனைய வித்வான்களிடம் கப்பம் பெற்றுத் தானே தலைவனென இறுமாந்து இருந்தான். அது போலவே கப்பம் கட்டும்படி மஹாபாஷ்ய பட்டருக்கும் ஆணை யனுப்பினன். அது கண்டு அவர் மிகவும் வேதனைப் பட்டபோது யமுனைத்துறைவரும் விவரமறிந்து, அந்தஆணை யோலையைக் கிழித்துப் போட்டு ராஜதூதனைத் திருப்பி யனுப்பிவிட்டார்.

ஆக்கியாழ்வான் இதைக் கேட்டு சினங் கொண்டான். "அவரென்ன கவியா? அல்லது சாஸ்த்ர விற்பன்னரா?" என்று கேட்டனுப்பினன். அதற்கு, "வெறுங் கவி மட்டுமல்ல; வெறும் சாஸ்த்ர வித்வான் மட்டுமல்ல; ப்ரதிவாதிகளாகிற யானையினுடைய கொட்டம் அடக்கும் சிங்கம்" என்று பதில் அனுப்பினர் யமுனைத்துறைவர். இதை ஆக்கியாழ்வான் அரசனுக்குச் சொல்ல, அரசன் ராஜசபைக்கு வரும்படி ஆணை யனுப்பினன். அதனையும் யமுனைத்துறைவர் கிழித்தெறிந்தார். பிறகு ராஜா,' இவர் ஒரு தன்னிகரற்றவர்!" என்று கருதிப் பல்லக்கு முதலான விருதுகளோடு வரவழைத்தான்.

அரசசபையில் எல்லா வித்வான்களின் முன்னிலையில் ஆக்கியாழ்வானுக்கும் யமுனைத்துறைவருக்கும் வாதம் தொடங்கிற்று. அவ்வமயம் அரச பத்னி யமுனைத்துறைவரின் முக விலாசத்தைக் கண்டு அதிசயித்து அரசனிடம் இந்தப் போட்டியில் இவர் (யமுனைத்துறைவர்) தான் ஜயிப்பார் என்றார். அரசனும் "ஆக்கியாழ்வான் தோற்று இவர் ஜயிப்பாராகில் எனது ராஜ்யத்தில் பாதியை இவருக்குத் தந்துவிடுகிறேன்" என்றான்.

வாதத்தின் ஆரம்பத்தில் ஆக்கியாழ்வான் யமுனைத் துறைவரை, "இவர் சிறுபிள்ளைதானே!" என்று அலக்ஷிய

மாகக் கருதி யமுனைத்துறைவரைப் பார்த்து, "உலகியலில் இல்லை என்பதை 'ஆம்' என்றும், உண்டு என்பதை 'இல்லை' என்றும் நாம் சாதிப்போம். ஜயித்தவன் தோற்றவன் தலையில் தாடனம் பண்ணக்கடவன்" என ஆணவத்தோடு கூறினான். யமுனைத்துறைவர் அதற்குச் சம்மதித்த பின் வாதம் தொடங்கியது.

சிறு பருவத்தினரான யமுனைத்துறைவர் ஆக்கியாழ்வானைப் பார்த்து, "உம் தாய் மலடி யல்லள்; ராஜா சார்வ பௌமன்; ராஜபத்நி பதிவ்ரதை!" என்று கூறினார். இதைச் செவியேற்ற ஆக்கியாழ்வான் ஆச்சரியங் கொண்டவனாய்ப் பதில் எதுவும் கூறமாட்டாமல் தயங்கினான். தான் இருக்கும் போது தன் தாயை மலடி என்று எப்படிக் கூறுவது? ராஜா ஸார்வபௌமன் (சக்ரவர்த்தி) அல்லன்; ராஜபத்நியும் பதிவ்ரதை அல்லளென்றால் தலை யறுப்பனரே வருமென்று எண்ணி, யமுனைத்துறைவரின் கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாமல் தோல்வியை ஏற்றுக்கொண்டான். யமுனைத்துறைவரும் ஆக்கியாழ்வானைப் பார்த்து ஜயித்தவன் செய்யவேண்டியதான தாடனம் செய்வதை நீர் மூத்தவரானபடியால் நான் செய்ய விரும்பவில்லை என்றார்.

## யமுனைத்துறைவர் வாக்கத்தின் பொருளை விளக்குதல்

பிறகு, ராஜா யமுனைத்துறைவரைப் பார்த்து, 'நீர் சொன்னவைகளையே ஆக்கியாழ்வான் உம்மைக் கேட்டிருந்தால் அதற்கு நீர் என்ன பதில் சொல்லுவீர்?' என வினவினன். அதற்கு யமுனைத்துறைவர் பின்வருமாறு கூறினார்.

(1) தாய் மலடியல்லள் என்பதற்கு 'ஒரு மரம் தோப்பு ஆகாதது போல ஒரு பிள்ளையைப் பெற்றவள் பிள்ளைகளைப் பெற்றவளாகக் கருதுதல் இல்லையாகையால் ஒரு பிள்ளை பெற்ற தாய் மலடியே' என்று பதிலாகும்.

(2) ராஜா ஸார்வபௌமன் என்பதற்கு, "ஸார்வபௌமன் என்றால் பூமிப் பரப்பை யெல்லாம் ஆள்பவன் என்று பொருளாகையால் ஒரு சிறு அளவு பூமிக்கு நாயகனான அரசன் ஸார்வபௌமன் அல்லன்" என்று பதிலாகும்.

(3) ராஜபத்நி பதிவ்ரதை என்பதற்கு, "பெண் தன் கணவனை அடையும் முன்னரே மந்திர வகையால் தேவதைகளாலே தீண்டப்படுகிறாள் எனச் சாஸ்திரம் சொல்வதால் பாதிவ்ரத்யத்தில் குறையுடையவள் என்ற யுக்தியினால் ராஜபத்நி பதிவ்ரதை இல்லை" என்பது பதிலாம்.

## யமுனைத்துறைவர் ஆளவந்தாராதல்

யமுனைத்துறைவருடைய அற்புதமான பதிலைக் கேட்ட அரசனும் மற்ற யாவரும் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தனர். அவரை யானையின் மேலேற்றி ஊர்வலம் செய்து வரும்போது ராணி, "என்னை ஆளவந்தீரே!" என்று அவரை அன்புப் பெருக்கினால் அணைத்துக்கொண்டாள். அன்று முதல் யமுனைத்துறைவருக்கு ஆளவந்தார் என்னும் திருநாமம் உண்டாயிற்று.

அரசனும் அரசியிடம் வாக்களித்தபடி பாதி ராஜ்யத்தை ஆளவந்தாருக்குத் தந்தான். ஆளவந்தாரும் அந்த ராஜ்யத்தை நிர்வகித்து வந்தார். இதைக் கேள்வியுற்ற மணக்கால்நம்பி ஆனந்தமடைந்து தம் ஆசார்யரின் கட்டளையை நிறைவேற்றத் தக்க சமயம் வாய்த்ததென்று எண்ணி ஆளவந்தாரைக் காண வந்தார். அப்போது ஆளவந்தார் அரசருக்குரிய அரண்மனை ஆடம்பரங்களுடனும் கட்டுக் காவலுடனும் இருந்ததால், சுலபமாக உள்ளே சென்று அவரைக் காணமுடியாமற் போகவே கவலை கொண்டார். பின்னர், ஆளவந்தாருக்குத் தூதுவேளைக்கீரை மிகவும் விருப்பம் என்பதை விசாரித்துத் தெரிந்துகொண்டு ஒவ்வொரு நாளும் அக்கீரையைச் சமையலுக்குக் கொண்டு வந்து கொடுத்து வந்தார். இவ்வாறு ஆறு மாதங்கள் கடந்தன. ஆளவந்தாரிடமிருந்து எந்தவித மாறுதலும் தெரியவில்லை. அதனால் இரண்டு மூன்று நாள்கள் கீரையைக் கொடுப்பதைத் தவிர்ந்தார்.

## ஆளவந்தார் துறவறம் ஏற்றல்

தினசரி உணவில் இருக்கும் தூதுவேளைக்கீரை சில நாள்களாக இல்லாததைக் கண்ட ஆளவந்தாரும் சமையற்காரர்களைக் கூப்பிட்டு, 'வழக்கம்போல தூதுவேளைக்கீரையை ஏன் சமைக்கவில்லை' என்று கேட்டார். அதற்குச் சமையற்காரர்கள், 'ஆறு மாத காலமாக ஒரு பிராமணர் கொண்டு

வந்து கொடுத்துக்கொண்டிருந்தார்; இரண்டு நாளுண்டு தவிர்ந்தது' என்றார்கள். 'ஆயின் அவர் மறுபடியும் வந்தால், என்னிடம் அழைதது வாருங்கள்' எனப் பணித்தார்.

மணக்கால்நம்பிகளும் மறுபடியும் கீரையைக் கொண்டு போய் சமையற்காரரிடம் கொடுத்தபோது ஆளவந்தாருடைய கட்டளைப்படி அவரை ஆளவந்தாரிடம் அழைத்துச் சென்றனர். நம்பிகளைப் பார்த்த ஆளவந்தார் நமஸ்கரித்து, "தங்களுக்கு என்ன வேணும்? பணம் வேணுமா? பசு வேணுமா? கிராமம் வேணுமா?" என வினவினர். நம்பியும் "எமக்கு எதுவும் வேண்டாம்; தங்கள் முன்னோர் எம்மிடம் சேமித்து வைத்துப்போன நிதியைத் தங்களிடம் நான் ஒப்படைக்குந்தனையும் தடையின்றித் தங்களைக் காணும்படி செய்யவேண்டும்" என்றார். அப்படியே அவரும் செய்ய, நம்பியும் ஆளவந்தாருக்குக் கீதையின் செம்மைப் பொருள் தெரியும்படி பல நாள்கள் உபதேசித்து இறுதியில் சரமச்லோகார்த்தத்தையும் பரக்க உபதேசித்தார். இதைத் தெளிந்த ஆளவந்தாரும் பால் முற்ற முற்றத் தலை சாயும் பயிர் போலக் கீதையின் பொருள் நெஞ்சில் படப்பட ஆணவம் தலை சாய்ந்து உலகியலில் பற்று நீங்கி, வெறிதே அருள் செய்யும் மஹோபகாரகனை பெருமாளைச் சேவிக்கவேணுமென்னும் ஆசை மிகக் கொண்டார். மணக்கால்நம்பியும் இரண்டாற்றின் கரையில் ஆயிரந் தலைப் பாம்பினால் காக்கப்படும் பெருநிதியைக் காண வாரீர் என்று அவரை அழைத்துக்கொண்டு ஸ்ரீரங்கம் சென்று பெரியபெருமாளைக் காட்டிக் கொடுத்து, "இவரே நும் முன்னோர் தேடி அடியேனிடம் சேமித்து வைத்துப் போன நிதி!" என்றார். அரங்கநாதனும், "கரியவாகிப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரியவாய கண்களோடு" சேவை சாதித்து ஆளவந்தாரை ஆட்கொண்டார். அத்திருமேனியைச் சேவித்து அதுவே தமக்குத் தஞ்சமாகவும் பேறாகவும் கொண்டு எல்லாவற்றையும் துறந்து துறவறத்தை மேற்கொண்டு காஷாய த்ரிதண்டங்களை ஏற்றுக்கொண்டார். ஆளவந்தார், மேலும் திராவிட வேதங்களை நம்பிகளிடமிருந்து பெற்றுத் திருவரங்கம் திருப்பதியே உறைவிடமாகக் கொண்டு சிஷ்ய ஸம்பத்துடன் சமயத்தை வளர்த்துக் கொண்டிருந்தார். பின்னர் மணக்கால்நம்பி, 'யோக ரகஸ்யத்தைக் குருகைகாவலப்பனிடம் தெரிந்துகொண்டு உம்மைப் போலவே சமயம் வளர்ப்பார் ஒருவரை நீர் உண்டாக்கி இத்தரிசனத்தைப்

பேணவேணும்'' என ஆளவந்தாருக்கு ஆணையிட்டுத் திரு நாட்டுக்கு எழுந்தருளினார்.

## ஆளவந்தார யோக ரஹஸ்யம் பெற முயற்சித்தல்

ஆளவந்தாரும் யோக ரஹஸ்யத்தைப் பெறுவதற்காகக் குருகை காவலப்பனிடம் சென்றார். அப்போது அவர் யோகத்தில் இருந்தார் ஆளவந்தார் அவரது யோகத்துக்கு ஊறு வராமல் இருக்க மறைவிடத்தில் இருந்தார். சற்று நேரத்தில் யோகத்திலிருந்த குருகைகாவலப்பன், ''சொட்டைக் குலத்தார் ஆரேனும வந்தாருண்டோ?'' எனக் கேட்டார். உடனே ஆளவந்தாரும், ''அடியேன் வந்துள்ளேன்'' என்று சொல்லி எதிரே சென்று வணங்கி மணக்கால்நம்பிகள் சொல்லிப்போனதை விண்ணப்பித்தார்.பின்னர் தமக்கு அந்த யோக ரஹஸ்யத்தை உபதேசிக்கும்படி வேண்டினார். குருகைகாவலப்பனும் ஒருநாளைக் குறித்துத் தந்து, 'அந்த நாளில் வந்து தெரிந்துகொள்ளும்' என்று சொல்லியனுப்பினார் பிறகு ஆளவந்தார், ''யோகத்திலிருந்த தேவரீர் அடியேன் சொட்டைக் குலத்தான் வந்ததை அறிந்தவாறு எங்ஙனம?'' என வினவினார். காவலப்பனும், ''நானும் பெருமானும் லீலாரஸத்தை அநுபவிக்கும்போது பிராட்டி குறுக்கிட்டாலும பொருட்படுத்தமாட்டாத பெருமான் என் தோள்களை அழுத்திப் பிடித்துக்கொண்டு எட்டி எட்டிப் பார்த்தான்; அவனுக்கு மிகவும் வேண்டியவர்கள் சொட்டைக் குலத்தாராகையாலே கேட்டேன்'' என்றார். பிறகு ஆளவந்தாரும் திருவரங்கம் திரும்பி ரஹஸ்யார்த்தங்களையும் உபய வேதாந்தங்களையும் சிஷ்யர்களுக்குப் போதித்துக் கொண்டிருந்தார்.

ஆளவந்தாருக்குத் திருவரங்கப்பெருமாளரையர் தெய்வத்துக்கரசு நம்பி, பிள்ளையரசு நம்பி, சொட்டை நம்பி என நான்கு குமாரர்கள் இருந்தனர் ஆளவந்தாரிடம் பெரிய நம்பி, திருக்கோட்டியூர் நம்பி பெரிய திருமலை நம்பி, திருமலையாண்டான் திருவரங்கப்பெருமாள் அரையர், திருக்கச்சிநம்பி, மாறனேரி நம்பி முதலானோரும் மற்றுமுள்ள அனேகரும் சிஷ்யர்களாகக் கூழுமியிருந்தனர்.

## ஆளவந்தார் அனந்தபத்மநாபனைச் சேவித்தல்

சிலகாலம் கழிந்த பின்னர், ஒருநாள் பெருமாள் திருவோலக்கத்தில் (பெருமாள்கோஷ்டியில்) திருவரங்கப்பெருமா

ளரையர் பெருமாள் முன்பு விண்ணப்பம் செய்யும்போது ஆளவந்தாரைப் பார்த்துக்கொண்டே, "நடமினோ நமர்களுள்ளீர் படமுடையரவில் பள்ளி விரும்பினான் பாதம் காண நடமினோ நமர்களுள்ளீர், நடமினோ நமர்களுள்ளீர்" என்று திரும்பத் திரும்ப விண்ணப்பம் செய்தவாறே, ஆளவந்தாரும் பகவானுடைய திருவுள்ளம் இதுவென்று திருவனந்தபுரம் புறப்பட்டனர். போகும்போது தமது சிஷ்யரான தெய்வவாரியாண்டானை மடத்தில் இருத்திச் சென்றார்.

ஆளவந்தார் சென்றதிலிருந்து தெய்வவாரியாண்டான் நாளுக்குநாள் மெலிந்து வந்தார். இதுகண்ட மற்றவர்கள், வைத்தியரிடம் காட்டினர். வைத்தியரும், "இது உடலால் வந்த நோயல்ல; மன வேதனையால் வந்தது, மனவேதனை தீர்ந்தால் இளைப்பு நீங்கும்" என்றார். முதலிகள் தெய்வவாரியாண்டானை 'உமக்கு என்ன ஆசை?' என்று கேட்க, அவரும் ஆசார்யனைப் பிரிந்த துயரம்தான் என்றுரைத்தார். உடனே மற்றவர்களும் அவரைப் பல்லக்கில் வைத்து ஆளவந்தாரிடம் அழைத்துச் சென்றனர். ஆளவந்தாரைச் சேவிக்கப் போகிறோமென்ற ஆனந்தம் நெஞ்சில் ஊற ஊற உடல் மெலிவும் சிறுகச் சிறுக நீங்கி நடந்து செல்லும் நிலை உண்டாயிற்று. தெய்வவாரியாண்டானுக்கு அனந்தபத்மநாபனைச் சேவித்துத் திரும்பும் வழியில் ஆளவந்தார் தெய்வவாரியாண்டானைச் சந்தித்து அவர் நிலைக்கு இரங்கி கருணை உள்ளங் கொண்டார். இச்சமயத்தில் யோக ரஹஸ்யம் தெரிந்து கொள்வதற்குக் குருகைக்காவலப்பனைக் குறித்துத் தந்த நாளும் வந்தது. 'அந்தோ குருகைக்காவலப்பனிடம் சென்று யோக ரஹஸ்யம் அறிந்துகொள்ள ஒரு புஷ்பக விமானம் இல்லையே!" எனக் கலங்கினார். அதனால் இந்தச் சித்தாந்தத்திற்கு அன்று முதல் யோக மார்க்கம் விடுபட்டுப் போயிற்று.

## ஆளவந்தார் ஆம் "முதல்வன்!" என அநுக்ரஹித்தல்

ஆளவந்தார் கீதார்த்த ஸங்க்ரஹம், சித்தித்ரயம், ஸ்தோத்ரரத்னம், ஆகம ப்ராமாண்யம், சதுச்ச்லோகீ முதலான நூல்களை இயற்றி வாழ்ந்துவரும் காலத்தில் தமக்குப் பின் சமயத்தை வளர்ப்பதற்கு உரியவர் யாரென்று ஆலோசித்துக் கொண்டிருக்கும் சமயத்தில் காஞ்சீபுரத்தினின்றும் வந்தவர்கள் இளையாழ்வாரைப் பற்றிப் ப்ரஸ்தாபித்தனர். அச்செய்தியைக் கேட்டது முதல் அவரைக் காணவேண்டு

மென்ற பேரவா தோன்றியது. உடனே ஆளவந்தார் தம் சிஷ்யர்களுடன் புறப்பட்டுக் காஞ்சீபுரம் அடைந்து, திருக்கச்சி நம்பிகளால் சேவிக்கப்பெற்று அவர் மூலம் இளையாழ்வாரைக் கண்டு, "ஆம் முதல்வன் இவன்!" என்று கடாக்ஷித்தார். பேரருளாளன் சந்நிதியை யடைந்து, "இளையாழ்வாரைச் சமயம் வளர்ப்பவராக ஆக்கித் தரவேண்டும்" என்று விண்ணப்பித்துக்கொண்டு ஸ்ரீரங்கம் எழுந்தருளினர்.

## ஆளவந்தார் மாறனேரி நம்பியை அநுக்ரஹித்தல்

சிறிது காலத்திற்கெல்லாம் ஆளவந்தாருக்கு முதுகில் ராஜபிளவை என்னும் நோய் உண்டாயிற்று. ஒருநாள் காலக்ஷேப கோஷ்டியில் தன் சிஷ்யர்களுக்கிடையே "இந்த நோயை ஏற்றுக்கொள்வார் யாரேனும் உண்டோ?" என்று ஆளவந்தார் வினவினர். சிறிது நேரம் அமைதிக்குப் பிறகு, உடனே மாறனேரி நம்பி எழுந்து அடியேனுக்குத் தந்தருள வேண்டுமென்று மிக்க வினயமுடன் பிரார்த்தித்தார்.

இந்த மாறனேரி நம்பி தாழ்ந்த குலத்தில் பிறந்தவர். விவசாயத்தைத் தொழிலாகக் கொண்டவர். ஒரு சமயம் நிலத்தை உழுது கொண்டிருக்கும்போது ஆளவந்தார் அவ்வழியாகப் போய்க்கொண்டிருந்தார். அப்போது மாறனேரி நம்பி குவளையில் சேற்றைக் கரைத்துக் குடித்துக்கொண்டிருந்தார். ஆளவந்தார் அதைக் கண்டு மிக்க ஆச்சரியமடைந்து அவரைக் காரணம் யாதெனை வினவினுர். "கஞ்சிக்குக் காத்திருந்தும் வரவில்லை; இந்த மண் சுவருக்கு (உடம்புக்கு) மண்ணிட்டேன்!" என்று பதில் கூறினுர் மாறனேரி நம்பி அவருடைய விசித்திரமான பதிலைச் செவி மடுத்த ஆளவந்தாரும் அவருடைய வைராக்கியத்தை வியந்து அவரைத் திருத்திப் பணி கொண்டார். அன்று முதல் மாறனேரி நம்பியும் ஆளவந்தாரிடம் அளவற்ற அன்பும் ஆசார்ய பக்தியும் கொண்டு ஒழுகி வந்தார். அத்தகைய உயர்ந்த உத்தம குணசீலராகிய மாறனேரி நம்பி தமது ஆசார்யரிடம் கொண்ட பக்தியின் காரணமாக அந்த ராஜபிளவையை ஆசார்ய ப்ரசாதமாக ஏற்றுக்கொண்டார்.

பிறகு, ஆளவந்தார் நோய் நீங்கப்பெற்றதும் தாம் ஆம் முதல்வன் எனக் கடாக்ஷித்த இளையாழ்வாரைத் தம்பால் அழைத்து வரும்படி பெரியநம்பிகளைக் காஞ்சீபுரத்திற்கு அனுப்பினுர், பெரியநம்பிகள் காஞ்சீபுரம் சென்று இளையாழ்வாருடன் ஸ்ரீரங்கத்துக்கு எழுந்தருளுவதற்கு

முன் இளையாழ்வாருக்கு எல்லா ரகஸ்யங்களையும் அருளிச் செயல்களையும் சொல்லும்படியாகத் தம் சிஷ்யர்களான திருக்கோட்டியூர் நம்பி, திருமாலையாண்டான், திருவரங்கப் பெருமாள் அரையர் முதலானோரிடம் கூறித் திருநாட்டுக் கெழுந்தருளினார்.

பின்னர், ஆளவந்தாரைப் பள்ளி படுத்தும் சமயம் பெரியநம்பிகளும் இளையாழ்வாரும் அங்கு எழுந்தருளினர். ஆளவந்தாரைத் தரிசித்து அவரிடம் சீரிய உபதேசங்களைப் பெறவேண்டுமென்னும் தம் பேரவா நிறைவேறும் முன்னரே அவர் காலமாகியது குறித்து இளையாழ்வார் மிகவும் வேதனைப்பட்டார். ஆளவந்தாரின் திருக்கையில் மூன்று விரல்கள் முடங்கியிருப்பதைக் கண்டு "குறை தீர்ப்பேன்" என இளையாழ்வார் அருளியவுடன் விரல்கள் பழையபடியே நிமிர்ந்தன. பிறகு ஆளவந்தார் சம்பிரதாய முறைப்படி பள்ளி படுத்தப்பட்டார்.

## எம்பெருமானார் திருவவதாரம்

ஆளவந்தாரின் சிஷ்யரான பெரிய **திருமலை நம்பிக்கு** இரண்டு சகோதரிகள் இருந்தனர். அவர்களுள் பெரியவளான **பூமிப்பிராட்டி** என்கிற காந்திமதி அம்மையை ஸ்ரீபெரும்பூதூரில் ஹாரீத வம்சத்தைச் சேர்ந்த **கேசவசோமயாஜி** என்பவருக்கும் இளையவளான பெரியபிராட்டியை மழலைமங்கலத்தில் (மதுரமங்கலத்தில்) கமலநயன பட்டர் என்பவருக்கும் மணம் செய்வித்திருந்தார். சென்னைக்கு அடுத்து சுமார் 25 மைல் தூரத்திலுள்ள ஸ்ரீபெரும்பூதூரில் கேசவ சோமயாஜி—காந்திமதி என்னும் அத்தம்பதிகள் வாழ்ந்து வந்தனர். அவர்களுக்குப் பிங்கல ஆண்டு சித்திரை மாதம் சுக்ல பக்ஷம் பஞ்சமி திதி, வெள்ளிக்கிழமை கூடிய திருவாதிரைத் திருநாளில் உலகம் செய்த தவப்பயனாய்க் கலி இருள் நீங்கிக் கிருதயுகம் போல சாதுதாமம் தழைக்க மிகுந்த ஒளியோடு விளங்கும் ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. ஆதிசேஷனே இக்குழவியாய் அவதரித்தார்.

குழந்தை பிறந்த செய்தியை அறிந்த அக்குழந்தையின் தாய் மாமனாகிய பெரிய திருமலை நம்பிகளும் திருமலையிலிருந்து ஸ்ரீபெரும்பூதூருக்கு எழுந்தருளி, பத்து நாள்களும் கடந்து இரண்டாம் நாள் ஜாத கருமம் முதலானவை செய்வித்து, சர்வ லக்ஷணங்களும் ஒருங்கே அமைந்த அக் குழந்தைக்கு **இளையாழ்வார்** (ராமானுஜன்) என்று திருநாம

மிட்டுப் போந்தார் இளையாழ்வாரும் இளமைப் பருவத்தி லேயே முறைப்படி கல்வி பயின்றும் வேதாத்யயனத்திலும் (வேதம் கற்பதில்) சிறந்தும் விளங்கினார்

## இளையாழ்வார் வேதாந்த சிரவணம் செய்தல்

அக்காலத்தில் காஞ்சீபுரத்தை யடுத்துள்ள திருப்புட் குழி என்ற ஊரில் **யாதவப்ரகாசர்** என்னும் அத்வைத வேதாந்தி வசித்து வந்தார் அவர் தம் சிஷ்யர்களுக்கு அத்வைத வேதாந்தம் பயிலவித்து வந்தார் அதையறிந்த இளையாழ்வார் யாதவப்ரகாசரிடம் சென்று தாமும் வேதாந்தம் பயின்று வந்தார் அப்போது மழலைமங்கலத்தில் கமலநயன பட்டருக்கும் பெரியபிராட்டியாருக்கும் குரோதன வருடம், தை மாதம், பௌர்ணமி, திங்கட்கிழமை கூடிய புனர்வசு நக்ஷத்திரத்தில் தேவாம்சமாய ஒரு குழந்தை பிறந்தது பெரிய திருமலைநம்பி அக்குழந்தைக்கு **கோவிந்தன்** என்த் திருநாமம் இட்டார் கோவிந்தன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கியதோடு இளையாழ்வாரு டன் சேர்ந்து தானும் யாதவப்ரகாசரிடம் வேதாந்தம் பயின்று வந்தார்

அத்வைதம் என்றால் இரண்டற்றது என்று பொருள் **(த்வைதம் என்றால் இரண்டுடையது)** அதாவது பிரமம் (பரம் பொருள்) ஒன்றே உண்மை, மற்றவைகளெல்லாம் பொய்த் தோற்றம் என்ற கொள்கையை யுடையது அத்வைதம் வேதத்தில் பரம்பொருள் வேறு மற்றவையான அறிவு டைப் பொருளும் அறிவிலாப் பொருளும் வெவ்வேறு எனப் பொருள்படும் வாக்கியங்களும், அப்பரம்பொருள் எல்லாப் பொருள்களையும் தன்னுள் கொண்டுள்ளமையால், பரம் பொருள் ஒன்றே எனப் பொருள்படும் வாக்கியங்களும் இருக்கின்றன இவற்றைப் பேதசுருதி என்றும், அபேதசுருதி என்றும் கூறுவர் இவ்விரண்டினுள் அபேத வாக்கியங்களை (பிரிவுபடாத நிலையை அறிவிக்கிற வாக்கியங்களை) மட்டும் முடிந்த கொள்கையாகக் கொண்டு அதற்கேற்ப, மற்ற பிரிவுபடக் கூறுகின்ற வாக்கியங்களுக்கும் பொருளைத் திரித்துக் கூறுவது அத்வைத மரபு

அதனால் யாதவப்பிரகாசரும் வேத வாக்கியங்களுக்குத் திரித்துப் பொருள் கூறும்போதெல்லாம் இளையாழ்வாரும் **மறுத்து, "செம்மைப் பொருளிருக்க வலிந்து பொருள்**

கொளளவேணடாமே'' எனறு உணமைப பொருளைத் தெளிவுபடுததி வநதார அதைக கேடடுச சீறறங கொணட யாதவபரகாசர தான சொலகிறபடி கேடபதானால கேளும, இலலையேல இங்கு வரவேணடாமென இளையாழவாரைக கடிநது வநதார

## இளையாழவாரைக கொலல யாதவபரகாசர சூழசசி

அதனால பினனர யாதவபரகாசர தனககுளளே சிந திககலானார ''இவரால நம மதம அழிநதுவிடும எனவே இவரை உயிருடன விடுவது சரியலல கஙகையில மணிகா ணிகா என்ற கடடம ஒனறுளது அதில விழுநது இறநதா லும நறபேறு பெறலாம அதில விழுமபடி செயவதறகும புணணியமுணடு அதனால அங்கு இளையாழவாரை அழைத துப போய கஙகையில தளளிக கொலலவேணடும'' என முடிவு செயதார

அதனபடி யாதவபரகாசர கஙகா யாததிரை புறபபடுவ தாகச சொலலி சிஷயாகளுடன புறபபடடார இடையில கோவிநதரையும இளையாழவாரையும எபபோதும சேர விடாமல கவனிததுககொணடே விநதியக காடு வரை போனார இளையாழவாரைக கொலவதறகுச சதி செயயவே இநத சஙகா யாததிரை எனபதைக கோவிநதர மறறவாகள மூலமாக அறிநது மிகக வேதனையடைநதார எவவாறே னும இவவிஷயததை இளையாழவாருககுத தெரிவிகக வேணடுமெனத துடிதுடிததுத தககசமயததை எதிரபாரத திருநதார மாலை நேரததில அஙகோரிடததில சிறுநீர கழிக கத தாழநதார அநத நேரததில, ' இநத யாததிரை உம மைக கொலவதறகாகவே, நீர திருமபிவிடும எனறு மண ணில எழுதி வைததுச சிஷயாகளுடன சோநதுகொணடார கோவிநதர

## எமபெருமான பிராடடியுடன வேடுவன, வேடுவிசசியாகி இரக்ஷிததல

இளையாழவார இதை வாசிததுத தெரிநதுகொணடு அஙகேயே இடம மாறித தஙகிக காஞசீபுரம நோககிப புறப படடார காடு ஆகையால வழி தெரியவிலலை பொழுதும சாயநது இருளும சூழ ஆரமபிததது வழி தெரியாது திகைத தார ''வழி திகைதது அலமருகினறேன காபபார ஆர? ஆவாரார துணை?'' எனறு கலஙகி நினறபோது அவர கலங

கத்தைப் போக்க ரக்ஷகனான எம்பெருமான் பிராட்டியுடன் வில்லியும் வில்லிச்சியுமாய் அவர் முன் தோன்றினான். அந்த காட்டில் அவர்களைக் கண்டதும் சற்று மனம் தேறி அவர்களை யாரென வினவினார் இளையாழ்வார். ''நாங்கள் காட்டில் திரியும் வேடுவனும் வேடுவிச்சியும் ஆவோம், காஞ்சீபுரம் போகப் புறப்பட்டோம்'' என்றனர். அதைக் கேட்டு மகிழ்ச்சியுற்றவராய் இளையாழ்வார், ''நானும் அங்கு தான் போக வேண்டும்; உங்களுடனே என்னையும் அழைத்துப் போவீர்களா?'' என வினவினார். அப்படியே என்றனர் அவர்களும்.

இளையாழ்வார் அவர்களுடன் வழி நடந்தார். இருள் சூழ்ந்ததும் மூவரும் ஒரு மரத்தடியில் உறங்கினர். அர்த்த ராத்திரியில் வில்லியின் மனைவி, தாகமாய் இருக்கின்றதால் தண்ணீர் வேண்டுமெனக் கேட்டாள். ''பொழுது விடியட்டும்; அருகிலிருக்கிறது கிணறு; தண்ணீர் கொண்டு வந்து தருகிறேன்'' என்று வில்லி பதில் சொன்னான். இதைக் கேட்ட இளையாழ்வார், ''ஐயோ! மஹோபகாரிகளான இவர்களுக்குத் தாகம் தீர்ப்பதற்குக் கூட நான் உபயோகப் படவில்லையே!'' என வேதனையோடு உறங்கிப்போனார்.

பொழுது விடிந்தது; புள்ளினங்கள் கூவின; கிணறுகளில் நீர் இழுக்கப்படும் ஓசை செவியில் விழுந்தது. அயர்ந்து தூங்கிய இளையாழ்வார் விழித்தெழுந்து மரத்தினடியில் வில்லியைத் தேடினார்; காணவில்லை. குரல் கொடுத்தார்; பதில் இல்லை. சற்று நடந்து சென்றார். ஊர் ஒன்று காணப் பட்டது. அங்கே பெண்கள் பலர் கிணற்றில் நீர் எடுத்துக் கொண்டு இருந்தனர். இளையாழ்வார் அதைக் கண்டு வியப் புற்றார். ''இது என்ன ஊர்?'' என்று வினவினார். அவர்கள், ''பிராமணராய் இருக்கின்றீரே! இது தெரியவில்லையா? அதோ புண்யகோடி விமானம் தோன்றுகிறதே! பேரருளாளன் சந்நிதி கண்டும் இது பெருமாள் கோயில் (காஞ்சி) என்பதை உணரவில்லையோ!'' என்று கேட்டனர்.

சற்றேறக்குறைய, 150 மைல் தூரத்தில் யாதவப்ரகாசரைப் பிரிந்த இளையாழ்வாரின் நிலை எவ்வாறு இருக்குமென்பதை நாவினால் உரைக்கவோ, நெஞ்சால் நினைக்கவோ இயலாது. வழி தெரியாத விந்தியக் காட்டில் வழி நடத்தியவர்கள் பெருமாளும் பிராட்டியும் என்றுணர்ந்து, ''ஐயோ, அறியாமையால் அவரை இழந்தோமே'' எனத் தவிப்பும், 'வழிநடத்தினரே' என்று அவர் கருணைக்கு வியப்பும் ''என்

யால் இவ்வளவு செயதாரே' என ஆனநதமும் ஒருஙகே அடைநதாா தாயாரின தாகவிடாயையும தணிககமுடியா தவனுயப போனேனேயெனறு நொநதுகொணடு தம வீடு சோநது நடநதனவறறை யெலலாம அனனையாருககும் திருககசசிநமபிகளுககும கூறினாா பினனா, திருககசசிநமபி களின நியமனபபடி தினநதோறும சாலைக கிணறறிலிருநது பெருமாளுககுத திருவாராதனைககுத தீாததம கொணடு வநது கொடுததுக கொணடிருநதாா

## கோவிநதா, 'லிஙகம உளளஙகை கொணாநத நாயனாா' ஆதல்

சஙகா யாததிரை போன யாதவபரகாசா இளையாழ வாரைக காணவிலலை யெனறு அறிநது உளளுககுள மகிழச சியும மேலுககு வருததமும கொணடவராய யாததிரை யைத தொடாநதாா சில நாளகளில யாவரும கஙகையை யடைநது நீராடினா கோவிநதா கஙகையில மூழகி எழுநத போது அவா கையில லிஙகம ஒனறு படடது அது கணடு கோவிநதா வியநதவராய யாதவபரகாசரிடம அதைக காட் டினாா அதைக கணட யாதவபரகாசா வியபபுறறு "கஙகா ஸநான பலம கைபுகுநதது, கஙசாதரனே கைபுகுநதான" எனறு அவரைக கொணடாடினாா லிஙகம கை கொணாந் தது காரணமாக லிஙகம (உளளஙகை) கொணாநத நாயனாா எனறு கோவிநதருககுப பெயரிடடாா மறறுமுளளோரும கொணடாடினாா சில நாளகளுககுப பினனா, யாததிரை முடிநது யாவரும காஞசீபுரம திருமபி வநஙகால வழியி லுள்ள கோயிலகளை வணஙகி வருமபோது கோவிநதரும தம ஊரில அநத லிஙகததைப பரதிஷடை செயது வநவதாகப போய அவவாறே செயத தாமும சைவராக மாறிபபோனாா. காளஹஸதிநாதனும தன அடியாா மூலமாக அநத உள் ளஙகை கொணாநத நாயனாரைத தன ஸதலததுக்கு அழைத் துககொணடாா அவரும காளஹஸதியிலேயே முகயஸத ராக நிததியவாசம செயதுகொணடிருநதாா

யாததிரையிலிருநது திருமபிய யாதவபரகாசா காஞ் சியை யடைநதபோது இளையாழவாரைக கணடு வியநது போனாா விலலியும விலலிசசியுமாகப பெருமாள வழி நடத திக் காஞசீபுரம சோதத விவரமறிநது இளையாழவாரிடம் பெருமதிபபு ஏறபடடது யாதவபரகாசருககு மறுபடியும

தன்னோடு இளையாழ்வாரைச் சேர்த்துக்கொண்டு பாடம் நடத்திவந்தார்.

ஒரு நாள் இளையாழ்வார் யாதவப்ரகாசருக்கு எண்ணெய் தேய்த்துக்கொண்டிருந்தார். அவ்வமயம் யாதவப்ரகாசர், "தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீக மேவ மக்ஷிணீ" என்ற வேத வாக்யத்துக்குப் பொருள் கூறினார். இந்த ச்ருதிககு, "அந்த பிரமத்துக்குச் சூரியனால் அலர்த்தபபடுகிற தாமரை போன்ற கண்கள்" என்று பொருளாகும். இப்படிக் கூறினால் அந்த பிரமத்துக்கு உருவம் உண்டென்றும் குணங்கள் உண்டென்றும் பொருள்படும். உண்மையும் அது தான். ஆனால், அத்வைத சித்தாந்தத்தில் பிரமத்துக்கு உருவமும் குணமும் இல்லை யாகையால், பொருளைத் திரித்துக் கூற வேண்டி யிருந்தது. அதனால் பிரமத்துக்கு உருவமில்லையாகையால், "பிரமத்துக்குச கண்கள், கடயாஸம் - குரங்கின் பிருஷ்டம் (பின்புறம்) போல இருக்கிறது என்று வேதம் பரிகாசம் செயகிறது" என்று பொருள் கூறினார். இதைச் செவியேற்ற இளையாழ்வார் நெஞ்சு வேதனையுற்றுக் கண்ணீர் உகுத்தார். அக்கண்ணீர் யாதவப்ரகாசருடைய துடையில் விழுந்தது அக்கண்ணீர் துக்கக் கண்ணீர் ஆகையால் நெருப்பைப் போல் சுட்டது. யாதவப்ரகாசர் துடித்து நிமிர்ந்து இளையாழ்வாரை நோக்கினார். அவர் கண்களில் நீர் வழிவதைக் கண்டு காரணம் வினவினார். அதற்கு இளையாழ்வார், (கம் + பிபதி = கபி:) "கம்' என்றால் ஜலம், 'பிபதி என்றால் அதைப் பானம் செய்கிறான் என்றும், கபி: என்பதற்குச் சூரியன் என்றும் பொருளாகும். கப்யாசம் = சூரியனால் அலர்த்தப்படுகிற தாமரை போன்ற கண்கள் என்று உண்மைப் பொருள் இருக்கப் பரபிரமத்தை இப்படி தகாத பொருள் கூறி இழிவுபடுத்துவதே எனத் துக்கமுண்டாயிற்று" என்று பதில் சொன்னார். இங்கு இவ்வாறிருக்க,

## ஆளவந்தார் இளையாழ்வாரைக் கடாக்ஷித்தல்

இச்சமயம் இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் காஞ்சியிலிருந்து பெரிய கோயிலுக்கு (ஸ்ரீரங்கம்) வந்தவர்கள் ஆளவந்தாரைக் கைகூப்பி வணங்கினர், இளையாழ்வார் யாதவப்ரகாசரிடம் வேதார்ந்தம் பயில்வதையும், வேதங்களில் அத்வைதக் கருத்துக்களை மறுத்து, விசிஷ்டாத்வைதக் கருத்துக்களைச் சொல்வதையும், மற்றும் நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் விவரமாகத் தெரிவித்தனர் ஆளவந்தாரிடம்.

அவை யாவையும் கேடட ஆளவநதார், ''நெருபபுச் சட்டியில நெருபபே போல அஸததுககளே மலிநதுள்ள இந திலவுலகில, அந நெருபபுச சட்டியில தாமரை பூததது போல இபபடியும ஒரு மஹாநுபாவா உணடாவதே!' எனறு மிகக் களிதது அபபோதே இளையாழவாரைக காண வேணடு மென ஆசைபபட்டாா உடனே அழகியமணவாளன் (ஸ்ரீரஙகநாதன) அநுமதி கொணடு திருககோவலூர் வழியாகக காஞசிககு எழுநதருளினா

ஆளவநதாா எழுநதருளியதை யறிநது திருககசசிநமபி கள அவரிடம செனறு தணடனிட நமபிகளை முனனிட்டுக் கொணடு பேரருளாளனையும திருவடி தொழுது வலமாக வரும்போது கீழச்சுறறில கரிய மாணிககப பெருமாளை வணஙகி யிருநதாா அபபோது யாதவபரகாசா தன சிஷ யாகளுடன பெருமாளைச சேவிகக வலமாக அவவழியே வந தாா அது கணடு ஆளவநதாரும ''இதில இளையாழ்வாா யாா?'' எனறு திருககசசிநமபிகளைக கேடடாா 'சிவநது நெடுகி வலிய மேனியராய நீணட கைகளோடு கூடியுளள இவா தான!'' எனறு இளையாழவாரை நமபிகள காட்டி யருளினாா ஆளவநதாரும அவரைக குளிர நோககி, 'ஆம முதலவன இவன!'' எனறு கடாக்ஷிததாா பிறகு தேவராஜ னை பேரருளாளனை சநநிதிககுச செனறு 'இநத இளை யழவாரை நம தரிசனம (சமபரதாயம) வளாபபவாராக ஆககி அடியேறகுத தநதருள வேணடுமெனறு சரணம புகுகினறேன' எனறு முறையிட்டாா பினனா, திருககசசிநமபிக ளிடமும மறறுமுளளோரிடமும விடை பெறறுககொணடு தம சிஷயாகளுடன ஸ்ரீரஙகததுககு எழுநதருளினாா

## பரமமரக்ஷஸ இளையாழவாா பெருமையை வெளியிடல்

அசசமயம காஞசியை அரசு புரிநதுவநத அரசன் மக ளுககுப பரமமரக்ஷஸ பிடிசதிருநதது எநத உபாயததாலும் அநத ரக்ஷஸை ஓடட முடியவிலலை சிலா மந்திரஙகளில் வலலவரான யாதவபரகாசராால அநத ரக்ஷஸை ஓட்ட முடியும எனறு அரசனிடம தெரிவிததனா அரசனும காவலாகளை யனுபபி யாதவபரகாசரை அழைதது வருமபடி உததரவிட்டான யாதவபரகாசன அரசன ஆணையை யறிநததும அரசனின காவலாகளிடம, ''அநத பரமம ரக்ஷஸை யாதவபரகாசா போகச சொன்னா எனறு அதனி

டம் சொல்லுங்கள்'' என்று சொல்லி அனுப்பினர். அவர்களும் அவ்வாறே அரண்மனைக்கு வந்து அரசன் மகளைப் பற்றியுள்ள ப்ரம்மரக்ஷஸிடம் யாதவப்ரகாசர் கூறியதைச் சொன்னார்கள். அந்தரக்ஷஸும் நீங்கள் யாதவப்ரகாசனிடம் சென்று, ''அவனை இவ்வூரை விட்டு நான் போகச் சொன்னேனென்று அவனிடம் சொல்லுங்கள்'' என்றது. பணியாளர்களும் இவ்விவரத்தை யாதவப்ரகாசரிடம் தெரிவித்ததும், யாதவபரகாசர் தம மாணவர்களுடன் அரசன் அரண்மனைக்கு வந்தார். அந்த ப்ரம்மரக்ஷஸைப் பார்த்து, ''நீ இந்தப் பெண்ணை விட்டுப் போ'' என்று கூறி அதற்குரிய வேத மந்திரங்களை உச்சரிக்கலானார்.

உடனே அந்த ப்ரம்மரக்ஷஸ், ''ஏ யாதவப்ரகாசா! நீ உச்சரிக்கும் மநத்ரம் நான் அறியாததல்ல'' என்று கூறி அந்த மந்த்ரங்களைச் சொல்லிக் காட்டி, ''நீ உன் ஜன்மத்தின் காரணத்தையும் அறியாய்; என் ஜன்ம வரலாற்றையும் அறியமாட்டாய்; அப்படிப்பட்ட நீ போகச் சொன்னால் நான் போய்விடுவேனா?'' என்று கூறியது. அதைக் கேட்ட யாதவப்ரகாசர், ''அதென்ன, எல்லாம் உணர்ந்தவனானல் அந்தக் காரணத்தைச் சொல்லிக் காட்டு?'' என்றனர்.

ரக்ஷஸ் கூறியது: ''நீ மதுராந்தகம் ஏரிக்கரையில் ஓர் உடும்பாய் இருந்தாய்; அங்கு யாத்திரையாய் வரும் பாகவதோத்தமர்கள் ஏரிக்கரையில் சாப்பிட்டுப் போகையில் சிந்திய சாதத்தை நீ உண்டாய்; பாகவத மிச்சில் ஆகையால் மறு ஜன்மமான இந்த ஜன்மத்தில் பிராமண வித்வானகப் பிறந்தாய். நான் முன் ஜன்மத்தில் பிராமணனாய், அர்த்தலோப க்ரியாலோபங்களோடு (பணக் குறைவு, யாகக் கார்யக் குறைவுகளோடு யாகம் செய்தேன்; அது முடிவதற்குள் நான் இறந்துவிட்டேன்; அதனால் நான் இந்தப் பிறவியில் ப்ரம்மரக்ஷஸாய் உள்ளேன்!'' என்று.

## இளையாழ்வார் ப்ரம்மரக்ஷஸை ஓட்டுதல்

யாதவப்ரகாசர், ''ஆயின் யார் சொன்னால் நீ இப்பெண்ணை விட்டு நீங்குவாய்?'' என்றார் ரக்ஷஸ், ''உன் மாணவரில் ஒருவராய், நித்யசூரிகளில் ஒருவராய், சிவந்த மேனியோடு உயர்ந்தவரும் அழகியவருமாய், முழங்கால் அளவு நீண்டனவாயுள்ள புஜங்களை யுடையவருமான அதோ நிற்கின்ற (இளையாழ்வாரைக் காட்டி) அவர் தம் பாதங்களை

என் தலைக்கு அணியாகச் சேர்த்தால், நான் இப்பெண்ணை விட்டு நீங்குவேன்'' என்றது. உடனே யாதவப்ரகாசர் இளையாழ்வாரைப் பார்த்து, ''இந்த ப்ரம்மரக்ஷஸ்ஸைப் போகச் சொல்லும்'' என்றார். இளையாழ்வாரும் அந்த ரக்ஷஸ்ஸைப் பார்த்து, ''இங்கு நின்றும் நீங்கிப்போ'' என்றதும் அது, ''உம்முடைய பாதங்களை என் தலை மீது வைத்தால், நான் நீங்கிப் போகிறேன்; போவதற்கு அடையாளமாக அதோ எதிரிலிருக்கும் அரசமரக் கிளையை முறித்துக்கொண்டு போவேன்'' என்றது. அதன் விருப்பப்படியே இளையாழ்வாரும் செய்ய, அதுவும் தான் சொல்லியபடியே அரசமரக் கிளையை முறித்துக்கொண்டு அவ்வரச குமாரியை விட்டு நீங்கிப்போயிற்று. இதைக் கண்ணுற்ற அரசன் முதலானோரும் பெருவியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தனர். அது முதல் யாதவப்ரகாசருக்கு இளையாழ்வாரைப் பற்றிய எண்ணம் ஆச்சரியத்தையும் மதிப்பையும் தந்தது.

## ஆளவந்தார் பேரருளாளனை வேண்டுதல்

இஃது இவ்வாறிருக்க, ஸ்ரீரங்கத்தில் ஆளவந்தார் திருவாய்மொழியில் ''இலிங்கத்திட்ட புராணத்தீரும் சமணரும் சாக்கியரும் வலிந்து வாது செய்வீர்களும் மற்று நும் தெய்வமுமாகி நின்றான்'' என்ற பாசுரத்துக்குப் பொருள் விளக்கம் அருளிச் செய்யும்போது நமக்குப் பின் இதர சமயங்களைக் களைந்து நம் சமயத்தைப் பேணி வளர்ப்பாரைக் காண்கிலோமே என்று சோகித்து, இளையாழ்வாரை யாதவப்ரகாசரோடு உறவறுத்து நம் பக்கம் சேர்ப்பதற்கான வழி ஏது என்று முசித்து, மறுபடியும் பேரருளாளனை, ''முன் வேண்டியதைப் பயனுடையதாக ஆக்கியருளவேணும்'' என்று மிகவும் வேண்டிக்கொண்டார். என்னே ஆளவந்தாரின் சமய வளர்ப்பின்பால் கொண்ட ஆர்வம். மணக்கால் நம்பியின் திருவுள்ளமும் அதுவே யன்றோ! பேரருளாளனும் இக் கோரிக்கையை நிறைவேற்றி வைக்காமல் இருப்பானோ!

யாதவப்ரகாசரும் மீளவும், ''ஸர்வம் கல்விதம் ப்ரம்ம'' என்பது போன்ற சுருதிகளுக்கு அத்வைதபரமாக ஜீவனும் ப்ரமமும் ஒன்றே என்பதற் கேற்பப் பொருள் கூறலானார். இளையாழ்வாரும் இதைக் கண்டித்து, ஜீவன் வேறு; ப்ரமம் வேறாயிருந்துகொண்டு சரீர சரீரித் தன்மையால் ஒன்றாயிருக்கும் விசிஷ்டாத்வைத பரமாகப் பொருள் விரித்தார். அது கேட்டு யாதவப்ரகாசர் மிகவும் கோபங்கொண்டு,

''இனி நம்மிடம் வாசிக்கவேண்டாம்; உம் புத்திக்குத் தக்காரிடம் போம்'' என்று கூறிவிட்டார்.

இளையாழ்வாரும் மிகவும் சந்தோஷத்தோடு யாதவப்ரகாசரை விட்டு நீங்கி இவ்விஷயத்தைத் தம் தாயாரிடம் தெரிவித்தார். தாயாரும் ''படித்தது போதும்; திருக்கச்சி நம்பிகளைச் சேவித்து அவர் சொல்லியபடி செய்துகொண்டிரும்'' என்ன, இளையாழ்வாரும் அப்படியே நம்பிகளையடைந்து அவர் நியமனப்படி பேரருளாளர்க்கு முன்பு போலவே சாலைக் கிணற்றுத் தீர்த்தத்தைச் சமர்ப்பித்து வந்தார்.

## ஆளவந்தார் சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்தல்

இச்சமயம் ஸ்ரீரங்கத்தில் ஆளவந்தார் நோய் வாய்ப்பட்டிருந்தார். அச்சமயம் திருக்கோட்டியூர் நம்பியும் பெரிய நம்பியும் திருவரங்கப்பெருமாள் அரையரை (ஆளவந்தாரின் திருக்குமாரரை) முன்னிட்டுக் கொண்டு ஆளவந்தாரையணுகி, 'தஞ்சமாயிருக்கும் அர்த்தத்தை யருளவேண்டும்' என்று கேட்டார். அதற்கு ஸ்வாமி, ''கோயிலாழ்வாரே (ஸ்ரீரங்கநாதனே) உயிர் நிலையாகவும் தஞ்சமாகவும் கொள்ளுங்கோள்! மேலும் பெரியபெருமாள் (அரவணையில் துயிலும் ஸ்ரீரங்கநாதன்) திருவடிகளின் கீழ் வீணையும் கையுமாக நிற்கும் திருப்பாணாழ்வார் விக்ரஹத்தைத் திருவடி முதல் திருமுடி வரை சேவித்துக்கொண்டிருங்கோள்! திருவேங்கடமுடையான் உயிர்நிலை (சரமச்லோகத்தாலே அறியப்படுகிற பேற்றுக்கு அவனே உபாயம் என்ற நிலை) அறிந்தவர் குறும்பறுத்த நம்பி. காஞ்சி பேரருளாளரின் உயிர்நிலை (த்வயத்தாலே அறியப்படுகிற குற்றேவல்=கைங்கர்யம் என்று) அறிந்தவர் திருக்கச்சிநம்பிகள். திருவரங்கப்பெருமாளின் உயிர்நிலை (திருமந்திரத்தாலே உற்றதும் உன்னடியார்க் கடிமை என்கிறபடி பாகவத சேஷத்துவமான நிலை (அடியார்க்கு அடிமையான நிலை) அறிந்தவர் திருப்பாணாழ்வார். திருப்பாணாழ்வார் உயிர்நிலை (தொண்டர் தொண்டர் தொண்டர்தம் அடியணுகிய நிலை) அறிந்தவர் திருவரங்கப்பெருமாள் அரையர். இவர்கள் நிலையிலே நில்லுங்கோள்!'' என்றருளி, அடியேனும், ''எனக்குப் பேறும் பேற்றைத் தருவதுமாகத் திருப்பாணாழ்வாரின் விக்ரஹத்தையே எண்ணியிருப்பன்'' என்று அருளினார்.

இது கேட்டுத் திருவரங்கப் பெருமாளரையர், ''தேவரீர் இமையாக் கண்ணராய்ப் பரவாசுதேவனைச் சேவிக்கத் திரு

வுள்ளமோ'' என்ன, ஆளவந்தாரும ''நீர் மற்றவர்களுடைய பெருமைக்கு உகந்திரும்'' என்றருளினார் மறுபடியும் அவர் களைக் குறித்து, ''ஒருவன் பெறும் பேற்றைத் தருவானும் அவனே என அடைக்கலம் புகுந்தாரை (பரபந்நனை) பகவானாலே ஆளப்படுகிற ஆத்மாவைப் பற்றி (உத்தம வாழ்வுக்காக) கரைதலும், ஊழ்வினையாலே அநுபவிக்கப்படு கிற உடலைப் பற்றித் தாரக போஷக போகயங்களுக்காக (உயிர் தரிக்கை உடல் வளர்க்கை ஆனந்தம் பெறுகை என் பனவற்றுக்காக) கரைதலும் கூடாது நெஞ்சாலும் வாயா லும் உடலாலும் இவ்விரண்டு நிலைகளிலும் அதாவது ஆத்ம உஜ்ஜீவனம் பற்றியோ, தேஹ ஜீவனம் பற்றியோ கவலை கொள்ளல் கூடாது கொண்டால், பகவானிடம் நாம் அடைந்த அடைக்கலம் பொய்யாய் விடும்

அதாவது எம்பெருமானோடு உறவை அறிந்து அவனை அடைக்கலமாக அடைந்த பின், அவனுடைய உடலான ஆத்மாவைப் பற்றி அவனே கவலை கொண்டு இவ்வாத் மாவைத் தனக்காக்கிக் கொள்வதற்காக ஆத்ம குணங்களை யெல்லாம் அவனே ஆக்கித் தருவான் அதனால் நாம் கரைய (கவலைப்பட) வேண்டுவதில்லை அது போலவே ஊழ்வினை யின் பயனாகக் கிடைத்துள்ள இவ்வுடலுக்கு உயிர் தரித்தல் வளமடைதல், இன்பப் பொருள்களை யடைதல் ஆகிய இவை ஊழ்வினையின்படியே கிடைக்குமாதலால் அவ்வுடலுக்கும் நாம் கவல (கவலைப்பட) வேண்டுவதில்லை அப்படி கரைந் தால், உயிர்ப்பொருள் உயிரல்லாத பொருள்களை உடம் பாக உடையவன் அவன் என்றறிந்து அவனைத் தஞ்சமடைந் தது பொய்யாய்விடும் என்பதாம்

எனவே தேஹத்தைப் பற்றியும் ஆத்மாவைப் பற்றியும் இந்த ஐஞானமுடைய சேதனன் கலங்கக்கூடாது என்று அருளினார் மேலும் அவர் நாராயணனுக்கு எப்போதும் உள்ள குணம் ஒன்றுண்டு அதாவது தம் பேற்றுக்காக (பல னுக்காக) அவனிடம் நம' (நீ உபாயம்) என்னுதவர்களை ''வானவர் நாட்டையும் நீ கண்டுகொள்'' என்பதாகிற உதார குணமுடைமை (பகவானுடன் ஸம்பந்த ஜ்ஞானம் உண்டானபோது சேதனன் அவனை உபாயமாக வரிக்கிறான் வரித்த பிறகு, உறவின் உறைப்பினால் பகவான் பயனாக ஆகி விடுகிறான் பிறகு மறுபடியும் அவன் உபாயமென்று எண்

ணக்கூடாதல்லவா. எண்ணினால் உறவில் பலம் குறைந்து விடுகிறது. (கணவனைக் கைப் பிடித்தபின் மனைவியானவள் நீ கணவனாக வேண்டும் என மாட்டாளல்லவா; அந்த நிலை எனவே அவனையே பற்றிக் கிடக்கிற சேதனனுக்குப் பரம பதம் எளிதாகிறது).

அது போலவே நாரங்களுக்கும் எப்போதுமுள்ள குணம் ஒன்றுண்டு. அது, "நாராயணனே நமக்கே பறை தருவான்" என்று தன் முயற்சியறறிருக்கை. ஆக பகவானுக்கும் சேதனனுக்கும் விடவொண்ணாத இவ்விரண்டு குணங்களையும் அறிந்த பின்பு, ப்ரபந்நனான சேதனன் தன் பேற்றுக்காக (மோக்ஷத்திற்காக) அவசரப்படுகையும் ஸ்வரூப ஹாநி. (அத்யந்த பாரதந்த்ர்யத்தோடு கூடிய சேஷத்வத்தை யுடைய தன் நிலைக்குக் கெடுதியாம்). எம்பெருமானே ரக்ஷகன் என்றிருக்கையும் ஸ்வரூப ஹாநி; அவன் ரக்ஷ்யன் என்றிருக்கையும் ஸ்வருப்ஹாநி; இப்படியிருந்தானாகில், அநந்யார்ஹ சேஷத்வததுசகும், ஸ்வஸ்வாமி பாவ சம்பந்தத்துக்கும் சேராது என்றருளினர்.

அதாவது மற்றொருவர்க்கன்றி அவனுக்கே அடிமையாய், அவனுக்கே ஆநந்தத்தை விளைத்துக்கொண்டு அவனிட்ட வழககாய் இருக்கவேணடிய இவன் அவன் பேறு தருவானென்று துணிந்திருக்கை யன்றிருக்கே அவசரப்படுகை கூடாது. அவசரப்பட்டால் அவன் இஷ்டப்படி வாழவேண்டிய தன் நிலையைக் கெடுத்துக்கொள்கிறானாகிறான். மேலும் தான் சொத்தாய், அவன் சொத்துக்கு உரியவனாய் (ஸ்வம் மாய், ஸ்வம்மையுடைய ஸ்வாமியாய்) உள்ள ஸம்பந்த ஜ்ஞானத்தையுடைய சேதனன், அவன் ரக்ஷகன் என்று எண்ணுவானாகில் இந்த உறவில் ஊற்றம் குறைந்துவிடுகின்றதல்லவா!

ரக்ஷ்ய ரக்ஷக ஸம்பந்தமுடைய தாம்பத்தியத்தில் மனைவியின் உள்ளத்தில், 'இவன் நம்மைக் காக்கிறான்' என்ற எண்ணம் எழுமா? எழுந்தால் உறவுக்குக் குறையுண்டாகி, வைத்யனுக்கும் நோயாளிக்கும் உள்ள நிலை போல உறவில் விரிசல் வரும். அந்நிலை யுண்டாகக்கூடாது. மேலும் ரக்ஷ்யன் (காக்கப்படுமவன்) என்கையும் தவறாகும். நினைத்துப் பல்லாண்டு பாடுகையன்றி ப்ரேமையின் மிகுதியாலே உண்டாவதாகையாலே அவனை ரக்ஷ்யனாக ஆக்கிவிடும். அதனால் ஸ்வரூபம் உணர்ந்த நிலையில் அப்படி நினைக்கை சொத்தாய்

சொதததை உடையவனு பிருககும உறவுககுச சேராது எனற படியாம

மீனவும அமமுவரும அடிபோஙகளுககுப பறறும உபாயம எது' எனறு கேடடனா அதறகு ஆளவநதாா 'அடியேனே உபாயம உபேயம' (பேறறுககு வழியும பேறும) எனறு கொளளுஙகோள எனறு சொலலுவது ஆசாாய பரநதரனை அடியேனுககு ஸவருப ஹாநி எமபெருமானை தாள தொழுவாா எபபொழுதும என மனததே யிருககினறுரே ' எனகிறபடியே பாகவதாகளே உபாய உபேயமாக எணணியிருஙகளெனறு, ஆசாாயனே உபாயோபேயம எனறு அருளினா

அதுகேடடு அவாகள வேதனையுடனிருகக ஆளவநதாரும, நீஙகள கவலைபபட வேணடா உஙகளுககுத திருமநதராாததம போகமணடபம (ஸ்ரீரஙகம), சரம சலோகாாததம புஷப மணடபம (திருமலை), மநதர ரதநாாததம (தவயாாததம) தயாகமணடபம (காஞசீபுரம) ஆகும இதை அறிநது அநுஷடிததவாகள அடியாாகளெனனை ஆடபடுதத விமலன' எனற திருபபாணாழவாரும, ஸிததோபாயததைப பறறி நினறு குறுமபறுதத நமபியும, கைஙகாயததில நிலைநினற திருககசசிநமபியு மாவாாகள இவவிஷயஙகளிலே ஊனறிப போருஙகோள எனறருளினா இது கேடடுத திருவரஙகபபெருமாளரையா ஆளவநதாரிடம, 'தேவரீா (தாஙகள) திருநாடலஙகரிததால (பரமபதமடைநதால) அதனுல வரும பிரிவைப பொறுதாாககு ஏதேனும அழிவு வருமேல குறை யேதுமிலலை' எனறபோது ஆளவநதாா வேறு விஷய கவனததால போல பதில ஏதும கூறவிலலை

பெரியபெருமாளுககு இவவிஷயம தெரிய, முதலிகளை அழைதது 'ஆளவநதாா பிரிவில ஏதேனும செயயககூடாது, நம ஆணை எனறு ஆணையிடடான பின முதலிகள இருவரையும திருவரஙகபபெருமாளரையா கையிலே காடடிக கொடுததான அவரும அவாகளை அழைதது வநது ஆளவநதாரிடம பெருமாளிடம நடநதவறறை விவரிததாா ஆளவநதாரும அதுகேடடு, 'நம பேறறுககு (பிரிவுககுச)ச கியாதவா இரணடாறறுககு நடுவே பெருமாள் திருவாராதனம கொளவதைச சகியாதவராாவா' எனறு அருளி (அடியாாகளோடு கூடி மகிழக கோயில கொணடமையைப பொறுதவராவீா அவனுககு மஙகளாசாசனபரராவீா எனறபடி)

மேலும் பாகவத விஷயங்களிலே உயர்வு தாழ்வு என்ற தரம் பார்க்காமல் பகவந் நோக்காயிருக்கவேணும்; அர்த்த காம பரவசரல்லாத விஷயங்களிலே தீர்த்தங் கொள்ளுகை வேண்டும்; பெருமாள் திருவடிகளிலே ஒரு கருமுகை முகிழ் வெடிக்கவைக்கை மிகவும் முக்கியம், (மங்களாசாசனபரனாக ஒரு ஆத்மாவைத் திருத்திவைப்பதே மிகவும் முக்கியம் என்றபடி).

## ஆளவந்தார் இளையாழ்வாரிடம் பெரியநம்பியை ஏவுதல்

மறுபடியும் ஒரு நாள் பெருமாளைச் சேவிக்கும்போது நம்பெருமாளின் மாலை நெகிழ, அதை திருவரங்கப் பெருமாளரையர் மூலம் ஆளவந்தாருக்குச் சமர்ப்பித்து **மேல்வீடு அணித்து** (மோக்ஷம் நெருங்கியது) என்பதைப் பெரியபெருமாள் காட்டினான். ஆளவந்தாரும முன்போல காலக்ஷேபம் செய்துகொண்டிருந்தார்; அப்போது காஞ்சீபுரத்தினின்றும் சில ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்ரீரங்கத்துக்கு வந்து ஆளவந்தாரைச் சேவித்தனர். அவர்கள் மூலமாக இளையாழ்வார் யாதவப்ரகாசரிடம் கல்வி தவிர்ந்தமையை உணர்ந்து, ''பேரருளாளன் நம் பிரார்த்தனையைப் பயனுடையதாக்கினார்'' என்று கொண்டாடினார். உடனே பெரியநம்பிகளைப் பார்த்து, ''நீர் இப்போதே சென்று இளையாழ்வாரை அழைத்துக்கொண்டு வாரும்'' என்று நியமித்து ஸ்தோத்ர ரத்ந க்ரந்தத்தை அருளிச்செய்து அதைப் பெரியநம்பிகளிடம் கொடுத்துக் காஞ்சீபுரத்துக்கு அனுப்பினார்.

பெரியநம்பிகள் காஞ்சீபுரம் அடைந்து தாம்வந்த விஷயத்தைத் திருக்கச்சிநம்பிகளிடம் தெரிவித்து, அவரை முன்னிட்டுககொண்டு பேரருளாளனைச் சேவித்து ஆளவந்தார் அருளிய அந்த ஸ்தோத்ரத்தைப் பெருமாள் முன்னிலையில் விண்ணப்பம் செய்தார் பிறகு பெரியநம்பிகள், இளையாழ்வார் பெருமாளுக்குத் தீர்த்தம் கொண்டுவருகிற சாலைக் கிணற்று வழியில் இருந்துகொண்டு தம் ஆசார்யர் அருளிய அந்த ஸ்தோத்ர ரத்நத்தை அநுசந்தித்துக்கொண்டிருந்தார். அச்சமயம் சாலைக் கிணற்றினின்றும் பெருமாளுக்குத் தீர்த்தம் எடுத்துக்கொண்டு அவ்வழியே வந்த இளையாழ்வாரின் செவியில், ''ப்ரஹ்ம: சிவஸ் ஶத மாக; பரமஸ்வராட் இத்யேதேயி யஸ்ய மஹிமார்ணவ விப்ருஷஸ்தே'' (எந்த சாவேசுவரனாகிய நாராயணனே! பிரமன்,

சிவன், இந்திரன், இவர்களிலும் மேலான முக்தபுருஷனுமா கிற இவர்களெல்லாம் உன்னுடைய மஹிமையாகிற கடலில் துளிகளாகின்றனரோ) என்ற பொருளையுடைய சுலோகம் ஒலித்தது. உடனே அச்சுலோகத்தின் பொருளால் இளை யாழ்வார் ஈர்க்கப்பட்டு நம்பிகளிடம் சென்று, ''இதை அரு ளியது யார்?'' எனக் கேட்டார். நம்பிகளும் "ஆளவந்தார் அருளியது'' என்ன, இளையாழ்வாரும் ''அடியேன அவரைச் சேவிக்கவேண்டுமே'' என்றார் ஆகில் நம்மோடே வாரும் என்ன, இளையாழ்வாரும் தீர்த்தத்தைப் பெருமாளிடம் வைத்துப் பெருமாளிடமும் திருக்கச்சிநம்பிகளிடமும் விடை பெற்றுப் பெரியநம்பிகளுடன் ஸ்ரீரங்கத்துக்குப் பயண மானார்.

## ஆளவந்தார் திருநாட்டுக்கு எழுந்தருளல்

இதற்கிடையில் ஸ்ரீரங்கத்தில் ஆளவந்தார் மறுபடியும் நோய்ப்பட்டிருந்து பெரியபெருமாளையும் அழகிய மணவாள ளையும் சேவித்து வந்து, ஸ்ரீவைஷ்ணவர்களை அமுதூட்டி, அவர்கள் திருவடி தொழுது அபராதங்களைப் பொறுத்தருள வேண்டுமென்றார். ''உமக்கும் அபராதமுண்டோ?'' என்று வைஷ்ணவர்கள் நவில, தம்மை அடைந்தாரை மற்ற பெரி யோர்களிடம் காட்டிக் கொடுத்தார். பிறகு, கோயிலில் திருப்பணி செய்வோரைப் பார்த்து, ''பெரியபெருமாளு டைய திருவாராதனம் குறைவுறாமல் நடத்திப் போருங் கோள்! ஆசார்யர்கள், பெரியோர்கள், தேசாந்தரிகள் முதலானோரை அரவணைத்துக்கொண்டு போருங்கள்!'' என்று அருளினார். பிறகு தம் ஆசார்யரான மணக்கால்நம்பி யைத் தியானித்துக்கொண்டு பத்மாசனத்திலிருந்து தாம் முன் நாள் குறித்திருந்தபடி வைகாசி மாதத்தில் திருவோ ணத்தன்று விடியற்காலையில் சிஷ்யர்கள், மற்றவர்கள் யாவ வரும் ப்ரஹ்மவல்லி, ப்ருகுவலி, புருஷசூக்தம், அர்ச்சிராதி, சூழ்விசும்பணிமுகில் முதலியவற்றைச் சேவிக்க ப்ரஹ்ம ரந்த்ரத்தாலே திருநாட்டுக்கு எழுநதருளினார். அங்கிருந் தோர் அனைவரும் துக்கித்துத் தங்களில் தாங்களே தேறினார் கள். பிறகு, ஆளவந்தார் திருமேனியைச் சந்யாஸிகளுக் கான முறைப்படி கொள்ளிடக்கரையிலுள்ள திருக்கரம்பன் துறையிலே பள்ளி படுத்திக்கொண்டிருந்தனர்.

காஞ்சீபுரத்தை விட்டுப் பெரியநம்பிகளுடன் புறப்பட்ட இளையாழ்வார் இரவும் பகலுமாக நடந்து வட திருக்காவேரி

பின் அக்கரையை யடைந்து சற்று தூரத்தில் கூட்டமாக இருப்பவர்களைப் பற்றி அங்கிருந்தாரை வினவினார். ஆளவந்தார் திருநாட்டுக்கு எழுந்தருளியதால் பள்ளிபடுத்தப் படுகிறார் என்று சொல்ல அறிந்து வேரறுந்த மரம் போல் இருவரும் பூமியில் விழுந்து மூர்ச்சித்துத் தேறி யெழுந்தனர். அதிக துக்கத்தை யடைந்த இளையாழ்வாரைத் தேற்றுவதற்காக நம்பிகள் தம் துக்கத்தையும் ஒருவாறு மறந்தார். இருவரும் திருக்கரம்பன் துறையை அடைந்து கண்ணீர் கண்களை மறைக்கவும், துக்கம் தொண்டையை அடைக்கவும் செயலிழந்து ஆளவந்தார் திருமேனியைச் சேவித்தனர்.

## இளையாழ்வார் ப்ரதிஜ்ஞை

அச்சமயம் ஆளவந்தாரின் கைவிரல்களில் மூன்றுமுடங்கி யிருப்பதை இளையாழ்வார் கண்டு, "முன்னும் இவர்க்கு இப்படியுண்டோ?" என்று அங்கிருந்தவர்களைக் கேட்டார். "முன்பில்லை; இப்போதே உண்டாயிற்று" என்று பதில் கூறினர். "ஆயின் இவர் காலக்ஷேபம நடத்துகின்றபோது ஏதேனும் தம் குறையை வெளியிட்டதுண்டோ?" என்று வினவினார் இளையாழ்வார். "வியாச பராசரர்களிடத்து உபகாரச் சிந்தையும், நம்மாழ்வார் பக்கலில் அதிக ப்ரேமையும், வியாச சூத்திரங்களுக்கு விசிஷ்டாத்வைதத்துக் கிணங்க விரிவான உரையும் உண்டாகவேணும் என்ற விருப்பம் அடிக்கடி அருளிச்செய்யக் கேட்டதுண்டு" என்று பதில் கூறினர். இளையாழ்வாரும் அதுகேட்டு, "இந்த (தம்) சரீரமும் வலிமையுடையதாய், இந்த ஆசார்யருடைய கிருபையும் அடியேனிடம் பரிபூரணமாயிருந்து, சர்வேசுவரனும் அடியேன் நினைத்தபடி கூட்டுவானாகில், இம் மூன்று குறைகளையும் தீர்க்கக்கடவேன்" என்று உரைக்க, உடனே அம் மூன்று திருவிரல்களும் நிமிர்ந்தன. இதைக் கண்ட அங்குள்ளோர் அனைவரும் பேராச்சரியமடைந்தனர். பின்னர் ஆளவந்தாருக்குக் கிரமப்படி பள்ளி படுத்தல் சடங்கும் நடந்து முடிந்தது. ஆளவந்தாரைச் சேவித்து அவர் உபதேசங்களையும் நேரில் கேட்டு அநுபவிக்கும் பாக்கியம் கைகூடாவண்ணம் பெரியபெருமாள் இப்படி நம்மை ஆளவந்தாரோடு சேரவிடாமல் செய்தாரே என்று வெறுப்புற்றவராய் பெரிய பெருமாளைச் சேவிக்காமலே பெருமாள் கோயிலுக்கு (காஞ்சீபுரத்துக்கு)த் திரும்பினார் இளையாழ்வார்.

காஞ்சீபுரத்தை யடைந்ததும் திருக்கச்சிநம்பிகளை யணுகி நடந்த விருத்தாந்தங்களை யெல்லாம் விண்ணப்பிக்க,

"பேரருளாளன் உமது எண்ணங்களை நிறைவேற்றுவான்; பயப்படவேண்டா" என்றருளிச் செய்து ஆளவந்தாருக்குச் செய்யவேண்டிய ஸ்ரீசூர்ண பரிபாலனம், திருவத்யயனம் முதலிய சடங்குகளை திருக்கச்சிநம்பிகள் காஞ்சியில் செய்தருளினார்.

## திருக்கச்சி நம்பிகள் வைபவம்

மஹீஸார க்ஷேத்ரம் என்கிற திருமழிசைக்கு அருகிலேயே பூவிருந்தவல்லி என்று ஓர் ஊரிருக்கிறது. அதற்கு முன்காலத்தில் தர்மபுரீ என்றும், புருஷமங்கலம் என்றும் பெயர் வழங்கிவந்தது. பின் திருக்கச்சிநம்பிகள் திருநந்தவனம் வைத்த காரணத்தால் பூவிருந்தவல்லி என்னும் பெயர் வழங்கியது. அத் திவ்ய தேசத்தில் வைச்ய



குலத்தைச் சார்ந்த வீரராகவ செட்டியாருக்கும் கமலையாருக்கும் கலிகடந்த 4110ல் சௌம்ய வருடம், மாசி மாதம், சுக்ல பக்ஷம் தசமி திதி, வியாழக்கிழமை, மிருகசீர்ஷ நக்ஷத்திரத்தில் திருக்கச்சிநம்பிகள் அவதாரம் செயதார். இவருக்கு முன்பு திருவேங்கடவர், அருள்கூரப்பன், மலைகுனியநின்றார் என்று மூவர் பிறந்திருந்தனர்.

திருக்கச்சிநம்பிகளின் இயற் பெயர் இன்னதென்று அறுதியிட முடியவில்லை. கஜேந்த்ர தாஸர் என்று சிலரும், பார்கவப்ரியா என்று சிலரும் கூறுவர். இவருக்கு அவ்வோ காலங்களில் ஜாதகருமம் முதலான சகல சடங்குகளும் நடந்தன. தம் குலத்துக்கேற்ற வித்யையில் சிறந்து விளங்கினார்,

அவரது தந்தையான வீரராகவ செட்டியார் தம் முதுமைப்பருவம் வந்தபோது நான்கு பிள்ளைகளுக்கும் தம் தனத்தைச் சமமாகப் பங்கிட்டுக் கொடுத்து, அத்தனத்தைக் கொண்டு நல்வழியாலே தம் குலத்தாரும் மற்றோரும்

மெச்சும்படி தனம் பெருக்கி வாழும்படி நல்லுரை கூறினர். அவர் சொற்படியே மூன் மூவரும் பணத்தைப் பெருக்கினர். நம்பிகளோ வென்றால் பகவத் பாகவத கைங்கர்யங்களுக்கு உபயோகப்படுத்தினர். தந்தையார், 'என்ன செய்தாய்?' என்று கேட்டபோது, ''கலங்காப் பெருநகரிலே சேமித்து வைத்துள்ளேன்!'' என்று பதில் கூறினர். தந்தையார் மட்டற்ற மகிழ்ச்சி கொண்டவராயினும், குல தர்மத்துக்குத் தக்கவாறு நடக்கவில்லையே என்று, ''நீ தாதனுகப் போகத் தகுந்தவன்'' என்று நிறைவும் குறைவும் தெரியும்படி கூறினர். அதையே பற்றுசாகக்கொண்டு நம்பியும் எம்பெருமானுக்கே தொண்டு பூண்டு ஒழுக எண்ணித் திருவல்லிக்கேணி முதலான திவ்ய தேசங்களைச் சேவித்துவிட்டு மறுபடியும் பூவிருந்தவல்லிக்கு வந்தார்.

பேரருளாளனை காஞ்சீ வரதன் நம்பிகளின் கனவில் தோன்றித் தமக்குப் புஷ்பம் சமர்ப்பிக்கும்படி நியமித்தார். மேலும் தம்முடைய ஊருக்கு வழியும் காட்டினர். அந்த கனவின்படியே நம்பியும் தமக்குக் கிடைத்த தாயபாகத்தில் திருநந்தவன முண்டாக்கி அதன் வாசனைப் பூக்களைக் கொண்டு மாலை தொடுத்து நித்தியமாகப் பூவிருந்தவல்லியிலிருந்து நடந்து காஞ்சீ வரதராஜப் பெருமாளுக்குப் பூச்சாத்தி அப்பெருமாளிடம் பக்தி பூண்டு வாழ்ந்துவந்தார்.

சில நாள் கழிந்தபின் நம்பிகளின் ஆயாசத்தைப் பேரருளாளன் பொறுமல் நம்பியைக் காஞ்சியிலேயே வாழுமபடி நியமித்துப் பின் தமக்கு அக்நியில் தோன்றியதா லுண்டாய தாபம் தீரும்படி ஆலவட்டம் (விசிறி) வீசும்படி நியமித்தார். அதன்படியே நம்பியும் ஆலவட்டக் கைங்காயய செய்துவந்தார். அவருடைய பக்தியில் மகிழ்ந்த பெருமான் அவருடன் தம் அர்ச்சை நிலையைக் குலைத்துக்கொண்டு நேருக்கு நேர் வார்த்தையாடி வந்தார். பெருமாளின் ஆணை கொண்டு ஸ்ரீ ஆளவந்தாரிடம் திருவடி சம்பந்தம் (பஞ்ச சம்ஸ்காரம்) பெற்று ஆளவந்தாருடைய மதிக்கக்கூடிய சிஷ்யர்களுள் ஒருவராக விளங்கினர்.

நம்பிகள் தீர்த்தமாடி (ஸ்நாநம் செய்து) வரும்போது அவருடைய திருவடித்துகளை ஒருவன் தினமும் தன் தலையிலும் உடம்பிலும் பாவனமாகப் பூசி வந்தான். ஒரு நாள் இதைக் கண்ட நம்பிகள், 'இதுவென்ன?' என்று அவனைக் கேட்க, 'தேவப்பெருமாளோடு பேசுகிற தேவரீரின் திருவடிப் பொடி அடியேற்கு மிகவும் வேண்டியது; அதனல் இது

செய்கிறேன்' என்று சொல்லி, ஸ்வாமி! 'அழுயேனுக்கு மோக்ஷம உண்டா?' எனப் பெருமாளிடம தெரிந்து சொல்ல வேணும்' என்று வேண்டினன அபபடியே அனறிரவு பெருமாளிடம நமபிகள கேடக, ''பாததூளி படுதலால இவ்வுலகம பாககியம பெறறதாயிருகக அவனுககு மோக்ஷம் நிசசயம உணடு' என்று பெருமாள விடை யிறுததான. அதை அவவடியானிடம தெரிவிததார அவவாறே அவன பேறு பெறறுன

நமபிகள தமககுப பேறு நிசசயமெனறு எணணியிருநதவர் பெருமாளிடம தம பேறறைப பறறிக கேடக, பெருமாளும புனசிரிபபுடன, ''அதெபபடி முடியும? வானவா நாடு எனறும, விணணவா நாடு எனறும சொலலபபடுகிறதே! அதனுல நீா பாகவத அபிமானம பெறறுலதான வானவா நாடு பெறமுடியும, உமமுடைய பகதிககு நாம எம ஆசசை நிலையைக குலைததுககொணடு பேசினேம, பாடடுககும ஆடடததுககும சமமாயிறறு, எனவே பாகவத அபிமானம பெறறுல பேறு பெறலாம ' எனறு அருளினன அதுகேடடு நமபியும அவவபிமானததைப பெற ஸ்ரீரஙகததில திருககோடடியூா நமபியிடம தமமை மறைததுககொணடு மாடடுககாரனுக இருநது வநதாா

ஒரு நாள மாடடை மேயசசலுககு அழைததுப போனவா இரவு நெடுநேரமாகியுப வரவிலலை மழையும பெயதுகொணடிருநதது திருககோடடியூா நமபியும மாடடுககாரனைத தேடிககொணடு போனபோது மாடடுககாரரான நமபியும தம ஆடையை மாடடின மேல போாததித தாமும அதனமேல கவிழநது படுததிருநதாா ''ஏன இபபடிச செயதாய?'' எனறு திருககோடடியூா நமபி கேடக, நமபிகளும, 'பசு மழையில நனைநதால சீதளம பிடிததுப பாலும சீதளகுணததைப பெறும அதைப பருகும தேவரீருககும சீதளமாகி நோய செயயுமே எனறு கருதி இவவாறு செயதேன" எனறுா அவரை அழைததுவநது தம தேவிகளிடம ''நம மாடடுககாரனுககும உணவு கொடு'' எனறு கூறினுா நம பையல எனற அபிமானம பெறற நமபிகள அதுகேடடு மிக மகிழநது தமமைத திருககசசிநமபிகள எனறு திருககோடடியூா நமபியிடம காடடிககொணடு அவரிடம விடை பெறறுச காஞசியை அடைநது முனபோலவே கைஙகாயம் செயதுவநதாா

நமபிகளின பகதியில கிளைதத பேரருளாளன அவர் கரததாலே அமுது செயதருளத திருவுளளம கொணடான

அதனால் ஒருநாள் தளிகை அமுது செய்யும் அவசரத்தில் தளிகையைப் பெருமாள் முன் வைத்து உண்ணப்பண்ணும் நிலை) திரையை விட்டதும் அர்ச்சகரை வெளியே போகச் சொல்லி, நம்பிகளைப் பிரசாதத்தை எடுத்துத் தரும்படி நியமித்து எல்லாவற்றையும் அர்ச்சை நிலையை மாற்றி அமுது செய்துவிட்டான். பிறகு திரையை நீக்கிப் பார்த்தபோது வெறும் பாத்திரங்கள் இருப்பதைக் கண்டவர்கள், 'அர்ச்சா மூர்த்தி அமுது செய்திருக்க முடியாது; நம்பிகள்தாம் எல்லாவற்றையும் உண்டிருப்பார்' என்று அவர் மேல் பழி சுமத்தினர்.

இதன் மூலமாக நம்பியின் பக்திப் பெருமையை உலகறியச் செய்ய நினைந்த எம்பெருமான் வடக்கே ஒரு தனிகன் கனவிலே தோன்றித் தனக்கு 1000 தளிகை சர்க்கரைப் பொங்கல் ஸமர்ப்பிக்கும்படி நியமித்தார் அத்தனிகனும்மிக மகிழ்ந்து காஞ்சிக்கு வந்து பகவானின் நியமனப்படி ஆயிரம் தளிகை சர்க்கரைப் பொங்கல் செய்து கண்டருளப்பண்ண ஏற்பாடுகள் செய்தான். தளிகைகள் ஆயிரத்தையும் பெருந் திரை வளைத்துப் பெருமாள் முன் சமர்ப்பித்தனர். முன் நாள் போலவே பெருமான் அர்ச்சகரை வெளியே போகச் செய்து முன்போலவே நம்பிகளை அந்தத் தளிகைகளை எடுத்துத் தரச் செய்து அத்தனை தளிகைகளையும் அமுது செய்து வெறுங் கலங்களை இட்டு வைத்துப் பின் திரையை நீக்கச் சொன்னான். அத்தனைத் தளிகைப் பாத்திரங்களும் காலியாக இருந்ததைக் கண்டனர்; வியந்தனர். தாங்கள் முன் நம்பிகளின் மீது ஐயப்பட்டுப் பழி சுமத்தியதுக்கு அபராத க்ஷாபனம் பெற்றனர் உடன் பெருமான் மறுபடியும் திரையிடச் சொல்லி முன்பிருந்தபடியே பாத்திரங்களில் சர்க்கரைப் பொங்கல் நிறைந்திருக்கும்படி செய்து பின் திரை நீக்கச் செய்து எல்லோரையும் பெரும் வியப்பி லாழ்த்தித் திருக்கச்சிநம்பிகளின் பக்தியின் பெருமையை வெளிப்படுத்தினான்.

நம்பிகள் ஒருசமயம் இரவு நெடுநேரம் பெருமானோடு வார்த்தைகளாடி வெளிவந்தார். மழை பெய்துகொண்டிருந்தது. தம் சிஷ்யனான வரதனைக் கூப்பிட்டார். வரதன் அங்கில்லை. இருமுறை கூப்பிட்டபின் ஸாக்ஷாத் வரதனே சிஷ்ய வரதனாக வந்து அவருக்குப் பாதரக்ஷையை இட்டுக் கையில் தீவட்டியையும், ஒரு கையில் திருவநந்தாழ்வானாகிய) குடையையும் பிடித்துக்கொண்டு போய் மடத்தில்

சேர்த்துவிட்டான். சற்று நேரத்துக்கெல்லாம் உண்மையான சிஷ்ய வரதன் வந்து, தான் தூங்கிவிட்டதாகவும் க்ஷமிக்கும்படியும் வேண்டினுன். நம்பிகள் கேட்டுப் பேரருளாளனே இதைச் செய்தானென்று தேறி, ஒரே நேரத்தில் அவனுடைய அடியார் திறத்துள்ள அன்பை நினைந்து உருகியும் இக்காரியம், நமக்குச் செய்தானே என்று வேதனைப் பட்டும் கலங்கினர்.

பின், பகலிலேயும் பெருமான் பாதரக்ஷை யிடுதல், குடை பிடித்தலான தொண்டைச் செய்ததால், நாம் அபசாரப் படும்படி ஆகிறதேயென்று நினைத்துப் பெருமானிடம் வெறுப்புக் கொண்டு திருமலைக்குச் சென்று ஆலவட்ட கைங்கர்யம் செய்யப்புக, அவனும் "திரண்டருவி பாயும் திருமலையில் வாசம் செய்யும் எமக்கு இக்கைங்கர்யம் அபேக்ஷையில்லைகாணும் நீர் அக்நியில் தோன்றிய தேவப்பெருமானுக்கே இக்கைங்கர்யத்தைச் செய்யும்" என்று அருளினன்.

பின்னர் திருவேங்கடவனின் நியமனப்படி காஞ்சிக்குப் போக விரும்பாமல் ஸ்ரீரங்கத்தை யடைந்து ஸ்ரீரங்கநாதனுக்கு ஆலவட்டம் வீசப்புக, அப்பெருமானும் "தெண்ணீர்ப் பொன்னி திரைக் கையால் அடி வருடும்படி பள்ளி கொண்டிருக்கும் எமக்கு இத்தொண்டு விருப்பமில்லை; அத்திகிரி அருளாளனுக்கே உரியதாகும்; அங்கேயே சென்று தொண்டு செய்யும்" என்று நியமித்தான். ஆனல், அத்திகிரிக்குச் செல்ல விரும்பாமல் ஸ்ரீஆளவந்தார் கோஷ்டியில் அந்வயங் கொண்டு ஆசார்ய கைங்கர்யரஸராய் வாழ்ந்து வந்தார்,

அவர் பிரிவைச் சகியாத அத்திகிரி யருளாளன் ஆளவந்தார் கனவில் தோன்றி திருக்கச்சிநம்பிகளை அனுப்பி வைக்கும்படி நியமிக்க, அவரும் அப்படியே நம்பிகளைக் காஞ்சிக்கு அனுப்பிவைத்தார். நம்பிகளும் காஞ்சியை அடைந்து முன் போலவே தொண்டு பூண்டிருந்தார்.

மற்றொரு சமயம் நம்பிக்கு 7½ ஆண்டுச் சனியின் சம்பந்தம் நேருவதாக இருந்தது. அதைப் பேரருளாளன் நம்பிகளிடம் ப்ரஸ்தாபித்து அதுவரை பிரிவைச் சகிக்கவேண்டும் என்றான். அது கேட்டு நம்பிகள், 'பிரிவைச் சகிக்கமாட்டேன்' என்னப் பெருமான் 7½ மாதமாகிலும் அநுபவித்தே ஆகவேண்டும்; பிராரப்த கர்மத்தை அநுபவித்துத்தான் கழிக்கவேண்டும் என்றான்: அதுவும் இயலாது என்ன 7½ வாரமாகிலும் என்றான். அதுவும் இயலாது என்ன 7½

நாழிகை (3 மணி) நேரமாகிலும் அநுபவித்துத்தான் ஆக வேண்டும்; வேறு எந்த வழியுமில்லை என்றான் பெருமான்.

ஒரு நாள் பெருமாளுடைய ரத்னஹாரம் காணவில்லை. அரசன் அல்லது அதிகாரிகள் அர்ச்சகர்களைச், சந்தேகிக்க, அவர்கள், "ஏகாந்தத்தில் உடனிருக்கும் நம்பிகள் தான் ரத்னஹாரத்தை எடுத்திருக்கலாம்" என்றார்கள். அதனால் அதிகாரிகள் நம்பிகளைக் காவலில் வைத்தனர். 7½ நாழிகை கழிந்ததும் பெருமாள் திருமேனியிலேயே புஷ்பங்களில் மறைந்திருந்த அந்த ஹாரம் அர்ச்சகர்களின் கண்களில் பட்டது. கண்டதும் 'நம்பிகளிடத்தில் அபசாரப்பட்டோமே! என்று மிகவும் அநுதபித்தார்கள். பிறகு அதிகாரிகளின் கனவில் தோன்றிப் பெருமான், "நானேதான் நம்பிகளின் ப்ராரப்த கர்மமான 7½ ஆண்டுச் சனியை 7½ நாழிகை அநுபவிக்கச் செய்யவேண்டுமென்று ஹாரத்தை மறைத்தேன்; அவர்மேல் தோஷமில்லை" என்றான். அதிகாரிகளும் நம்பியை விடுவித்து அபராதத்தைப் பொருத்தருள வேண்டினர்.

காவலிலிருந்து விடுபட்டுப் பெருமாளைச் சேவித்த நம்பிகள், "ராஜபுத்ரனுடைய அபராதத்துக்கு லகுவான தண்டனை போல ப்ரபந்நனின் அபராதங்களுக்கும் லகுதண்டனை. அதுபோல, வெகுகாலம் அநுபவிக்கவேண்டிய துக்கத்தை ஸ்வல்பகால அநுபவத்தால் போக்கியருளியதே" என்று அவன் கருணையை எண்ணி வாய்விட்டு விண்ணப்பித்தார். நம்பிகள், "தேவராஜாஷ்டகம்" என்னும் ப்ரபந்தத்தை அருளிச்செய்து க்ருதார்த்தராய் வாழ்ந்துவந்தார். மேலும் ஜகதாசார்யர் என்று பிரசித்திபெற்ற ராமாநுஜ முநிகளாலே நன்கு மதிக்கப்பட்டவர். இவருடைய வைபவத்தையறிந்து அவருடைய பெற்றோர்கள் முதலானோர் அவரையடைந்து உஜ்ஜீவித்தார்கள். எம்பெருமானார்க்குப் போல இவருக்கும் இவர் வாழ்கின்ற காலத்திலேயே அர்ச்சா திருமேனிப் பிரதிஷ்டை பூவிருந்தவல்லியில் நடந்ததென்பரி. இவருடைய சரித்திரம் இன்னும் பலபடிகளாகப் பெரியோர்கள் அருளிச்செய்வர். இங்கு சுருக்கமாகக் கூறப்பட்டது.

## இளையாழ்வார் திருக்கச்சிநம்பிகளைத் தஞ்சமடைதல்

இளையாழ்வார் முன்பு போலவே தேவப்பெருமாளுக்குத் திருமஞ்சன தீர்த்த கைங்கரியம் செய்துகொண்டிருந்தார்.

அவருக்குத் திருக்கச்சிநம்பி பக்கல் அன்பு மேன்மேலும்பெருகிற்று. நம்பியினுடைய அபிமானமும் இவர் பக்கல் மிகுந்து வந்தது. அதனால் இவர் திருக்கச் சிநம்பிகளிடம் பஞ்ச சம்ஸ்காராதிகளை (திருவாழி, திருச்சங்கு முத்திரைகளைத் தோளில் பொறித்தல், திருமண் இடுதல், அடிமையாகிய பேற்றுக்குத் தக்கவாறு தாச நாமம் இடப்பெறுதல், மந்திரங்களான மூன்றைப் பெறுதல், பகவானை ஆராதித்தல் என்பன) பெற்று வாழ எண்ணினார். நம்பிகளுக்குத் தண்டனிட்டுத் தம் எண்ணத்தை வெளிப்படுத்தி வாழ்விக்க வேண்டினார். நம்பிகளும் ''வாரீர் இளையாழ்வீர்! பரமனைப் பயிலும் திருவுடையார் எவரேனும் அவர் எம்மையாளும் பரமர்'' என்ற ஆத்ம குணத்துக்குச் சேர்ந்ததான பரம வைதிக சித்தாந்தத்துக்குத் தக்கபடி விரும்பினீர். ஆனாலும் வர்ணாச்ரம தர்மத்துக்கு ஏற்றதான வைதிக மரியாதைக்கு ஒத்து வராது'' எனத் தடுத்துவிட்டார். இளையாழ்வாரும் தமது விருப்பம் நிறைவேறாது போனது கண்டு சற்று மனம் தளர்ந்தாராயினும், நம்பிகள்டம், ''போனகம் செய்த சேடம் தருவரேல் புனிதமன்றே''என்று ப்ரஸாதசேஷத்தை (நம்பிகள் உண்ட உணவின் மீதியை)ப் பெறவேண்டுமென்று ஆசை யுண்டாயிற்று. அதனை நிறைவேற்றிக்கொள்ளும் பொருட்டு ஒருநாள் நம்பிகளிடம் சென்று, ''அடியேன் குடிசையிலே (வீட்டிலே) அமுது செய்தருளவேணும்'' என வேண்டினார். இளையாழ்வாரின் விருப்பத்தை மறுக்க முடியாதவராய் நம்பிகளும் அதற்குச் சம்மதித்தார். இப்போதேனும் தம் இஷ்டம் பூர்த்தியாகுமென்று இளையாழ்வார் தம் தேவிகளிடம் (மனைவியிடம்) நம்பிகளுக்காகத் தளிகையைப் பாங்காகச் சித்தப்படுத்தும்படி சொல்லிவிட்டு அவரை அழைத்துவரச் சந்நிதி ப்ரதக்ஷிணமாகக் கிழக்கு வாயிலிலிருந்து எழுந்தருளினார். இளையாழ்வாரின் எண்ணத்தை நிறைவேற்ற நம்பிகளும் அந்தச் சமயம் மேற்கு வாயிலிலிருந்து ப்ரதக்ஷிணமாக இளையாழ்வார் திருமாளிகைக்கு எழுந்தருளி இளையாழ்வாரின் தேவிகளிடம் திருவாலவட்டக் கைங்கரியத்துக்கு அவசரமாகப் போகவேணுமென்று கூறி விரைவில் அமுது செய்து புறப்பட்டார்.

சற்று நேரத்துக்கெல்லாம் மடத்தில் நம்பிகளைக்காணாது இளையாழ்வார் தம் திருமாளிகைக்குத் திரும்பியபோது தம் தேவிகள் நீராடி வேறு ஆடை வுடுத்தி நிற்பதைக் கண்டு காரணமென்னவென்று கேட்டார். திருக்கச்சிநம்பிகள் சாப்பிட்ட இலையைக் கோலால் தள்ளிச் சுத்தி பண்ணியதால்

நீராடி நின்றேன் எனப் பதில் கூறிய தமது தேவிகளின் செயலைக் கேட்ட இளையாழ்வார் மிகவும் கோபித்துத் தம் இஷ்டம் நிறைவேறவில்லையே யென மிகவும் வேதனை யடைந்தார்.

## தேவராஜனிடம் ஆறு வார்த்தைகள் பெறுதல்

பின்னர் இளையாழ்வார் திருக்கச்சிநம்பிகளை யணுகி "அடியேன் சில நினைத்துள்ளேன்; அதைப் பெருமாளிடம் விண்ணப்பித்து அவன் சொல்லியருளுமதை அடியேற்குத் தெரிவிக்கவேண்டும்" என்றார். நம்பியும் அன்றிரவு பெருமாளோடு ஏகாந்தமானவாறே விண்ணப்பிக்க வேண்டும் என்றிருக்கையில், பேரருளாளன், "நம்பீ! ஏதோ சொல்ல வேண்டுமென்று இருப்பது போல் தோன்றுகிறதே, என்ன விஷயம்?" என்று கேட்டார். "இளையாழ்வார் ஏதோ நினைத்திருக்கிறாராம். அவற்றைத் தேவரீரைக் கேட்டுச் சொல்லும்படி சொன்னார்" என்று நம்பிகள் கூறினார். அதற்குப் பெருமாள், "எல்லாம் அறிந்தவரான இளையாழ்வார், நாம் சாந்தீபினியிடம் கல்வி பயின்றது போல உம்மையிட்டுக் கேட்பிக்கிறார் இத்தனை. அதாவது: (1) நாமே ப்ரதத்வம். (2) நம் சமயம் பேதமுடையதே. (3) உபாயம் சரணாகதியே. (4) இறுதிக்கால நினைவு தேவையில்லை (5) இத்தேஹ முடிவிலே மோக்ஷம். (6) பெரியநம்பிகளை ஆச்ரயிக்கவேணும் என்ற இந்த ஆறு வர்ர்த்தைகளை அவரிடம் சொல்லும்" என்று பணித்தார்.

(1) மும்மூர்த்திகளில் நானே பரன் (முதல்வன்). (2) நம் சமயம் சித் அசித் ஈசுவரன் என்று மூன்று பொருள்களாகிற பேதம் உடையது. (3) என்னை அடைவதற்கு(பேற்றுக்கு) சரணாகதியே (நானே தான்) வழி. (4) என்னைச் சரண் அடைந்தவனுக்கு இறக்கும்போது என்னைப் பற்றிய நினைவு அவசியமில்லை. (5) இந்தச் சரீரத்தின் முடிவிலேயே மோக்ஷம் உண்டு. (6) பெரியநம்பிகளிடம் பஞ்ச ஸம்ஸ்காராதிகளைப் பெறவேண்டும் என்னும் இவ்விளக்கமே மேற்கூறியவற்றிற்கு உரிய பொருளாம்.

பொழுது விடிந்ததும் நம்பிகள் இளையாழ்வாரிடம் பேரருளாளன் கூறிய இவ் வாறு வார்த்தைகளைத் தெரிவித்தருளி, "இவையோ நும் நினைவு?" என்று கேட்க இளையாழ்வாரும் "ஆம்" என்ன, நம்பிகளும் இருவர் நினைவும் ஒத்துக்கிடப்பதே என உகந்தார்.

## இளையாழ்வார் பெரியநம்பிகளை அடைதல்

இச்சமயம் ஸ்ரீரங்கத்தில் தரிசனத்தை (சமயத்தை) நிர்வகிப்பவர் யார் என்ற பிரச்னை ஸ்ரீவைஷ்ணவர்களிடையே விவாததத்திற்கு உரியதாயிற்று. "ஆளவந்தார், 'ஆம முதல்வன்' என அபிமானித்ததும், திருவிரல்களை நிமிர்ந்தி அபிமானித்ததும் பொய்யாகமாட்டாவே! அதனால் இளையாழ்வாரே இதற்குரியவர்" என்று பெரியநம்பிகள் கூற, அதற்குப் பெரியோர்கள் (முதலிகள்) எல்லோரும் 'ஆம்' என்று இசைந்தனர். உடனே நம சமயத்துக்குத் தக்கவராம்படி திருத்தி இளையாழ்வாரை அழைதது வரும்படி பெரியநம்பிகளைக் காஞ்சிக்கு அனுப்பிவைத்தனர். அவரும் பத்னியோடு புறப்படடு இடையில் மதுராந்தகத்தில் ஏரிகாத்த பெருமாள் கோயிலில் தங்கியிருந்தார்.

## இளையாழ்வார் நம்பிகளிடம சமாச்ரயணம் பெறுதல்

இளையாழ்வாரும் பெருமாள் நியமனப்படி பெரியநம்பி திருவடிகளை அடையவேண்டுமென்று காஞ்சியினின்றும் ஸ்ரீரங்கம் நோக்கிப் புறப்பட்டு வருகையில் இடையில் மதுராந்தகம் ஏரிகாத்த பெருமாளைச் சேவிக்கக் கோயிலினுள் புக அங்கு பெரியநம்பிகளைக் கண்டு ஆச்சரியப்பட்டார். "நமக்கெதிரே வந்து கிருபை செய்கிறபடி கண்டாயே நெஞ்சே! எண்ணியவாறு எதிரே கிடைப்பதே" என்று ஆனந்தப்பட்டு நம்பி திருவடிகளில் தண்டனிட்டு நின்றார். நம்பியும், 'நம் மனோரதம் சித்திக்கப்பெற்றோமே' என்று உகந்து இளையாழ்வாரை வாரி அணைத்துக்கொண்டார்.

இளையாழ்வாரும் நம்பிகளின் திருவடிகளை அடைவதற்காகத் தாம் புறப்பட்டதைச் சொல்லி, "இப்போதே ஹிதோபதேசஞ் செய்து காத்தருளவேணும்" என்று பிரார்த்தித்தார். அதற்கு நம்பிகளும் மஹாக்ஷேத்ரமான காஞ்சியில் செய்வோம் என்றார். "மின்னலைப் போல நிலையற்றது மன்னுயிராக்கை. அதை ஆளவந்தார் விஷயத்தில் கண்டோமே, அதனால் இங்கேயே இப்போதே அடிமை கொள்ளவேணும்" என்று மறுபடியும் திருவடிகளில் விழுந்து பணிந்தார். பெரியநம்பியும் இவருடைய ஆர்த்தி (பெறுகிற விஷயத்திலுள்ள பேரவா) இருந்தபடியே! என்று உகந்து, இளையாழ்வாரை அழைத்துப் போய் அங்குள்ள மகிழ மரத்தடியில், கணவனை வரித்துள்ளமையைக் காட்டும் மாங்கல்யம், வளை முதலானவை போல், பகவானோடுள்ள

சம்பந்தத்தைக் காட்டுவதான நீயிற் பொலிகின்ற செஞ் சுடராழி, சங்கங்களைத் தோளில் இலச்சினை யிட்டுத் தம் ஆசார்யரைத் தியானித்து நாம மந்திராதி ஸம்ஸ்காரங்களை அநுக்ரஹித்தருளினார். மந்த்ர ரத்னமான த்வயத்தைப் பரக்க (விரிவாக) உபதேசித்தார். மேலும், ''ஆளவந்தார் நியமனத்தைத்தான் அவருக்குப் பதிலாகச் செய்தேனே யன்றி, அடியேற்கு இதில் யாதொன்றுமில்லை யாகையால் ஆளவந்தார திருவடிகளே தஞ்சமென்று இரும்'' என்று அருளிசெய்தார். இதைத்தான் திருவரங்கத்தமுதனாரும் ''எதிகட் கிறைவன் யமுனைத்துறைவன் இணையடியாங் கதி பெற்றுடைய இராமாநுஜன்'' என்றருளினார்.

## பெரியநம்பிகள் இளையாழ்வாருக்கு உபதேசித்தல்

ஒரு வஸ்துவை எதைக் கொண்டு அறிகிறோமோ அது ப்ரமாணம் (அளவை). அதை (ப்ரமாணத்தை)க் கொண்டு எதை அறிகிறோமோ அது ப்ரமேயம். ப்ரமாணம் கொண்டு ப்ரமேயத்தை அறிகிறவன் ப்ரமாதா எனப்படுவன். இதனையே இளையாழ்வார் பெரியநம்பிகளிடம் ''ப்ரமாணம் எது? ப்ரமேயம் எது? ப்ரமாதா யார்? என்று கேட்டார். பெரியநம்பிகள் ஓத்தின் (வேதத்தின்) சுருக்கமான த்வயம் தான் ப்ரமாணம்; அந்த த்வயத்தாலே சொல்லப்படுகிறவன் அத்திகிரிநாதனான பேரருளாளனே ப்ரமேயம்; ப்ரமாதா நீரேதாம் என்று பதில் கூறினார். பின்னர் நம்பியும் ப்ரமாணம் கொண்டு ப்ரமேயத்தை அறிந்து அநுபவிக்க வாரும் என்று இளையாழ்வாரை அழைத்துக்கொண்டு பெருமாள் கோயிலுக்கு (காஞ்சீபுரம்) போய்ச் சேர்ந்தார்.

இளையாழ்வாரும் தம் திருமாளிகையில் பெரியநம்பி களுக்குப் பத்னியுடன் தங்குவதற்கு வசதி செய்து கொடுத் துத் தளிகைக்கு வேண்டும் பதார்த்தங்களையும் சமர்ப்பித்து வந்தார். தினந்தோறும் பெரியநம்பிகளிடம் த்ராவிட (தமிழ்) வேதங்களான திவ்ய ப்ரபந்தங்களையும், நம் சமயத் துக்குரிய ரஹஸ்யார்த்தங்களையும், மந்த்ரார்த்தங்களையும் காலக்ஷேபம் செய்துகொண்டு ஆனந்தமாக வாழ்ந்திருந்தார்.

ஒருநாள் எண்ணெய் தேய்த்துவிடும் ஒரு வைஷ்ணவருக் குப் பசிக்குதவ பழைய அமுது இடும்படி தம் பத்னிக்கு இளை யாழ்வார் நியமித்தார் அவ்வம்மை பழைய சாதம் இல்லை யென்று கூறி அவ்வைஷ்ணவரைப் பட்டினியோடு அனுப்பி விட்டார். இளையாழ்வார் தம் மாளிகையுள் சென்று பார்த்தபோது நிறைய சாதம் இருப்பதைப் பார்த்துத்

தேவியை, "இடும்பையால் அடாப்புண்டு இடுமின்னோ துற றென்று இராத்வாகக்கு இல்லையென்று நெடுஞ் சொல்லால் மறுத்த நீசை நீ" என்று மிகவும் கடுமையாகக் கோபித்துக் கொண்டார்.

மற்றொரு சமயம் கிணற்றடியில் தண்ணீர் முகக்கும் விஷயமாகப் பெரியநம்பி தேவிகளுக்கும் இளையாழ்வார் தேவிகளுக்கும் பிணக்கு ஏற்பட்டது. (பெரியநம்பி தேவிகள் கிணற்றிலிருந்து முகந்த ஜலமானது தற்செயலாக இளையாழ வார் தேவியாரின் பாத்திரத்தில் விழக் கண்டு இளையாழ்வாரின் தேவிகள் மிகவும் கடிந்து பேசலானார்.) இவ்விஷயத்தைப் பெரியநம்பி தேவிகள் கணவரிடம் தெரிவித்தார். இதை யறிந்த பெரியநம்பிகள் தம் பத்னியைக் கோபித்துக்கொண்டு மேலும் பாகவதாபசாரம் கூடாதென்று யாரிடமும் சொல்லா மல் தம் தேவிகளுடன் ஸ்ரீரங்கம் புறப்பட்டுவிட்டார். இளை யாழ்வார் காலை அநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு வழக் கப்படி பெரியநம்பிகளுக்குத் தண்டன் சமாப்பிக்கப் புக, பெரியநம்பிகள் இல்லாமையால் மிகவும் கலங்கினார். பின் அங்கிருந்தவர்களைக் கேட்க அவர்கள் நிகழ்ந்தவற்றைத் தெரி வித்தனர். அதைக் கேட்டு மனம் மிகவும் நொந்து செய்ய வேண்டுவது எதுவென ஆலோசித்தார்.

## இளையாழ்வார் சந்யாஸம் ஏற்றல்

பிறகு, இளையாழ்வார் தம் தேவிகளை யழைத்து, "நீ முன்பே திருக்கச்சிநம்பிகள் விஷயத்திலும், ஒரு வைஷ்ணவர் விஷயத்திலும் பாகவதாபசாரம் பட்டாய், இப்போது பெரிய நம்பிகள் விஷயத்திலும் அஸஹ்யாபசாரம் பட்டாய், (பகவத் பாகவத விஷயத்தில் நெஞ்சு நோகும்படி நடந்து கொள்ளல்) ஏனவே, மூன்று முறைகளும் பிழை செய்தாய், அதனால் நீ தாய் வீடு போய்ச் சேர்" என்று வேண்டுவன தந்து அனுப்பி விட்டார். பிறகு, இல்லற மில்லையானால் துறவறம் என்றபடி அநந்தசரஸ்ஸில் (காஞ்சி சந்நிதியிலுள்ள குளத்தில்) நீராடிப் பேரருளாளன் திருமுன் சென்று, "பெருமாளே! தேவரீர் திரு வடித் தாமரைகளின் சேவையே அடியேன் வேண்டுவது ஆகை யால், அடியேற்குச் சந்யாஸ ஆச்ரமத்தைத் தந்தருளவேண் டும்" என்று பிரார்த்தித்தார். பெருமாளும் இசைந்து, "நீருளனத்னையும் காஷாயாதிகளைத் தரித்திரும்!" என்று ஆசசகர் மூலமாக நியமித்து **இராமாநுஜ முனி** எனும் திரு நாமமும் சாத்தியருளினார். "மடத்தேறக் கொண்டு விட்டு வாருங்கோள்!" என்று கோயில் பரிஜனங்களுக்கும் ஆணை

யிட்டார். அப்படியே இராமாநுஜ முநியும் முக்கோல் காஷாய வஸ்த்ரம் முதலியவைகளை ஏற்று மடத்தை யடைந்து சந்யாஸ ஆச்ரமத்தைக் குறைவற நடத்தி வந்தார்.

## கோவிந்த பட்டரைத் திருத்தி ஆட்கொள்ளல்

ராமாநுஜ முநியும், 'ஆளவந்தாரின் விசேஷ கடாக்ஷத்தால் விரோதிகள் கழிந்தன. அவரின் திருவுள்ளக் கருத்து முடியும் வகைக்கு நமக்கு உசாத்துணை (உதவி) உண்டாக வேண்டுமே' என மனதில் விசாரித்தார். முடிவில் அவருக்குக் கோவிந்த பட்டர் விஷயமாகச் சிந்தனை ஏற்பட்டது. "அவன் விரக்தன்; சாஸ்த்ரங்களைப் புரையறக் கற்றவன்; நமக்கு ஹிதம் (நன்மை) கோருபவன்; அவனை நம்மோடு சேர்ப்பார் யாரோ? இப்போது அவன் வேறு தெய்வ வழிபாடு உடையவனாக இருக்கிறான்; அவனைப் பாங்காக்குவார் யாரோ?" எனப் புழுங்கினார். பிறகு, இதைச் செய்யத்தக்கவர் பெரிய திருமலைநம்பியே எனத் தெளிந்து, அவர் பக்கலுக்கு ஒரு ஸ்ரீவைஷ்ணவரை நியமித்து, "வட்டமணி கோவிந்தரைத் திருத்தித் தேவரீர் திருவடிக்கு அடிமை கொள்ளவேணும்" என்று விண்ணப்பிக்கும்படி அவரிடம் விவரம் சொல்லி யனுப்பினார்.

இளையாழ்வாரின் ஆணையின்படியே அந்த ஸ்ரீவைஷ்ணவரும் திருமலைக்குச் சென்று பெரிய திருமலைநம்பிகளிடம் விவரத்தைச் சொல்ல, அவரும் "இது நம்முடைய கடமை என்றிருந்தோம்; ராமாநுஜ முநியின் எண்ணமும் கலந்ததே" என உகந்து உடனே அவ்வைஷ்ணவரையும் தம்மைச் சேர்ந்தாரையும் அழைத்துக்கொண்டு காளஹஸ்திக்கு எழுந்தருளி குளக்கரையில் அமர்ந்திருந்தார். அப்போது லிங்கம் உள்ளங்கை கொணர்ந்த நாயனாரான கோவிந்தபட்டர் அங்கு நீர் கொண்டு செல்ல வந்தார். அச்சமயம் பெரிய திருமலை நம்பிகள், "கொன்றைச் சடையானைக் குளிர நீராட்டினால், உனக்குண்டாம் பயன் என்?" என்று கூறினார். அது கேட்டு முறுவலித்துப் போனார் நாயனார். அது கண்டு இனி அவன் (ஈசுவரன்) செய்யும் சேமத்தை எண்ணித் தெளிவுற்றுத் திருமலைக்கு நம்பிகள் எழுந்தருளினார்.

சில நாள் கழித்து திருமலைநம்பிகள் மறுபடியும் காளஹஸ்திக்கு வந்து ஆளவந்தார் அருளிய ஸ்தோத்ர ரத்னத்தில் இளையாழ்வாரை வசீகரித்த, "நாராயணனே! பிரமன், சிவன், இந்திரன் இவர்களிலும் மேலானவனும், வினையின் நீங்கிய வனுயுமுள்ள முக்தாத்மா ஆகிய இவர்களெல்லாரும் எந்த உன்

பெருமைக கடலில துளிகளாகின்றனரோ, அநத உன்னிடத தில இயறகையானதும, எல்லையற்ற பெருமையை உடையது மான ஐசுவரயததை எவனதான பொருதவலலவான’ என்ற 11-வது சுலோசததை ஓர ஓலையில எழுதி நாயனார வரும வழியில போட்டு வைததார எதிரபாரததபடி நாயனாரும அவவழியே வநதவர அவவோலையை எடுதது வாசிததுப பாரததுவிட்டு எறிநதுவிடடுப போனார மறுபடியும நீர கொணடு திருமபும்போது அநத ஓலையைத தேடி எடுதது மறுபடியும வாசிததுப பாரததார அதன பொருள அவரை மாறறியிருகக வேணடுமென அவர தோற்றம காட்டிறறு அவவோலையைக கையில கொணடு, ‘உஙகளிடமிருநது நழுவிய பொருள இதுவோ?’’ என்று நமபிகளிடம கேட்டார. நமபியும ‘எஙகள பொருள நழுவுவதலல’’ (எஙகள பொரு ளான எமபெருமான ஒழிகக ஒழியா உறவுடையானாகையாலே நாஙகள விடினும தான விடானாகையாலே எஙகளை விட்டு நழுவாது) என்று இபபடிப பலபடப பதிலுககுப பதிலாக அருளி அவர மனததில மாறறம உணடாககினார நாயனாரும பதி லின்றிப போனார

நமபிகள மறுபடியும திருமலை சென்று பெருமான திருவடி தொழுது மீணடும சாளஹஸதிககு வநது மசாலையில தம சிஷய கோஷடிகளோடு திருவாயமொழிககு அரததம அருளிக கொணடிருநதார அபபோது நாயனார ஒரு பாதிரி மரததி னின்றும பூபபறிததுக கொணடிருநதார அசசமயம பெரிய திருமலைநமபிகள, ‘திணணன வீடு’’ என்ற பதிகததுககு அரத தம அருளிககொணடிருநதார இதை நாயனாரும கவன மாகக கேட்டுககொணடிருநதார நாலாம பாட்டில, “தேவும எபபொருளும படைககப பூவில நானமுகனைப படைதத தேவன’’ என்றவரை விஸதாரமாகப பொருள விரிதது, “தேவன எமபெருமானுக கலலால பூவும பூசனையும தகுமே!’’ என்று சொன்னதும நாயனார, முனனுள்ள பாட்டுககளின பொருள நெஞ்சில உறுததியிருநதமையால சட்டென மரததி னின்றும குதிததது, ‘தகாது தகாது என்று சொலலிககொணடே பூபபட்டலையை வீசி யெறிநதுவிட்டுக கழுததிலுள்ள ருதராக்ஷ மாலையையும கழறறி யெறிநதுவிட்டு நமபிகளின திருவடி களில விழுநது வணஙகினார ‘அநதோ! லோகநாயகனென முடி சூடியவனிருகக நாயகனை உபாசிககும வேட்டமுடைய விரிசடையானை விருமபினேனே! அழகான தாமரைக கணணன இருககத தழல வீசும பொறிககணணனைப பூசிததேனே! கல லெடுததுக கலமாரி காதத கையனிருககக கபால மேநதிய

கையனை வணங்கினேனே! திருவிருந்த மார்பனிருக்கத் திரு வில்லாத் தேவனை நாடினேனே'' என்று இப்படியெல்லாம்



நொந்துகொண்டு, ''இவ்வாத்மாவை அடிமை கொண்டு வாழச் செய்ய வேண்டும்'' என்று பாதத்தில விழுந்து கிடந்தார். அவரை முடி பிடித்தெடுத்துக் குளிர நோக்கித் தடவிக் கொடுத்தார் நம்பிகள். மேலும் நல் வார்த்தைகள் சொல்லி, 'ஆளவந்தார் கிருபைக்குக் குறை யேதுமில்லை' என வெண்ணி நெஞ்சு நெகிழ்ந்தார். இவ்விவரம் அறிந்த காளஹஸ்தி நாதனை யுடையார் பலரும் ஓடிவந்து நம்பிகளைப் பாரத்து, ''அம்மான் பொடித் தூவினீரோ?'' என்றூர்கள். ''அவரையே கேட்டுக் கொள்ளுங்கோள்'' எனப் பதில் கூறினர் நம்பிகள். அவர்களும் நாயனாரின் கையைப் பிடித்து, ''வாரும் நாயனாரே!'' என்றழைக்க, ''என் கையை இனித தொடவேண்டாம். உங்களோடு எனக்கு இனி உற வில்லை'' என்று கருவூலச் சாவி, இலச்சினை மோதிரம் முதலிய வற்றை அவர்களிடம் வீசிவிட்டு நம்பிகளின் பின் போனார். அவர்களும் ''நேற்றே காளஹஸ்திநாதன் எங்கள் கனவில், தேவாம்சங்களான இவர் முதலானவர்கள் பாஷண்ட பௌத்த நாஸ்திகங்களைப் போக்கித் திருமாலிடம் உறவை வளர்க்கத் தோன்றியவர்கள் என்று கூறி யிருந்ததற்கேற்ப நடந்தது'' என்று சொல்லிப் போனார்கள்.

பெரிய திருமலைநம்பிகளும் கோவிந்த பட்டரைத் திருமலைக்கு அழைத்துச் சென்று பஞ்ச ஸம்ஸ்காரம் முன்னாக அவரைத் திருத்தி, அடிமை கொண்டு திராவிட வேதங்களையும் ஸம்ப்ரதாய ரஹஸ்யங்களையும் தெளிவுற அருளிச் செய்து கொண்டிருந்தார். கோவிந்தபட்டரும் அவர் திருவடியல்லாது வேறறியாதவராக வாழ்ந்திருந்தார்.

## கூரத்தாழ்வானும் முதலியாண்டானும் ராமாநுஜ முநியை அடைதல்

காஞ்சிபுரத்திற்கு மேற்கில் **கூரம்** என்னும் நகரை நிர்வாகம் செய்து விரக்தரானவர் (வேறு விஷயங்களில் வெறுப்புற்றவர்) ஸ்ரீவத்ஸசிந்நர் (திருமறுமார்பர்) என்கிற திருநாமத்தையுடைய **கூரத்தாழ்வான்.** சென்னைக்கு அடுத்த பூவிருந்தவல்லிக்கு அருகே **பேட்டை** என்று இன்று சொல்லப்படுகின்ற கிராமத்தில் இளையாழ்வாரின் சகோதரியின் திருமகனாகப் பிறந்தவர் **தாசரதி** என்கிற **கந்தாடை முதலியாண்டான்.** இவர்கள் இருவரும் இளையாழ்வார் துறவறம் மேற்கொண்டார் என்று அறிந்தவுடனே பெருமாள் கோயிலுக்கு (காஞ்சீபுரத்திற்கு) வந்து ராமாநுஜ முநிகளின் திருவடிகளில் தண்டனிட்டுத் தங்களையும் அடிமை கொண்டு ஆட்கொண்டருள வேண்டுமென்று வேண்டினர். ராமாநுஜ முநியும் அங்கீகரித்து அவர்களுக்குப் பஞ்ச ஸம்ஸ்காரம் முன்னாகத் திராவிட வேதம் முதலாகச் சகல விசேஷ 'சாஸ்த்ரங்களையும் தெளிவித்தார். அவர்களும் ஆசார்யனைப் பிரியாது வாழ்ந்து வந்தனர்.

## கூரத்தாழ்வான் நிஷ்டை

கூரத்தை **ஸ்ரீவத்ஸாங்கர்** என்றும் **திருமறுமார்பர்** என்றும் திருநாமமுடைய **கூரத்தாழ்வான்** நிர்வாகம் செய்து வந்தார். அவர் வரையாது வழங்கும் வள்ளலாக வாழ்ந்து வந்தார். ஒருநாள் தமது நிர்வாகத்தில் குறையுளதோ என்றறிய இரவில் நகர சோதனை செய்துவந்தார். அப்போது ஒரு வீட்டில் அகாலமாகிய அந்த நேரத்தில் பேச்சரவம் கேட்டது. ஆழ்வான் அதனைக் கூர்ந்து கேட்டார். உள்ளே வயதான ப்ராமண தம்பதிகள் தங்கள் பெண்ணின் விவாக



விஷயமாகப் பேசினர். பெண்ணுக்குத் தோஷமிருப்பதால் மணந்தவன் அப்பெண்ணைத் தீண்டினால் அன்றே இறப்பான்; அதனால் மணஞ் செய்யமுடியாமையால் மனம்நொந்து கலங்கினர். இதைச் செவியேற்ற ஆழ்வான் மறுநாள் காலையில் பெண் கேட்டு வஸ்த்ரம், ஆபரணங்கள் முதலான சீர்வரிசைகளை அப்பெண் வீட்டுக்கு அனுப்பி வைத்தார். இதைப் பார்த்து அதிர்ச்சி யடைந்த அத்தம்பதிகள் ஆழ்வானிடம் தங்கள் பெண்ணின் தோஷ நிலையைத் தெரிவித்து மணம் செய்து தர மறுத்தனர். ஆழ்வான், "தெரிந்துதான் மணஞ் செய்துகொள்கிறேன்; நீங்கள் அஞ்சவேண்டாம்" என்று கூறி மணம் புரிந்து கொண்டார். அன்று முதல் அவர்கள் தொடாமல் தம்பதிகளாக வாழ்ந்து வந்தனர்.

ஒரு சமயம் வழக்கம் போல் ஆழ்வானின் அடையா நெடுங் கதவை வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்து அடைக்கும்போது இரவு நெடு நேரமாயிற்று. அடைக்கப் பட்ட கதவின் மணியோசை நெடுந்தூரம் கேட்டது. அச் சமயம் காஞ்சியில் ஸந்நிதியில் பேரருளாளனும் பெருந்தேவித் தாயாரும் தனியாக உரையாடிக் கொண்டிருந்தனர். தாயாரின் காதில் கூரத்துக் கதவின் மணியோசை ஒலித்தது. பிராட்டி அவ்வோசையின் காரணத்தைப் பெருமானிடம் கேட்க, "கூரத்து ஆழ்வானுடைய நெடுங்கதவு, வறியவர்களுக்கு வழங்குதல் இப்போது தான் முடிந்து அடைக்கப்படுகிறது; அதன் ஓசை தான் இது" என்று பெருமான் பதில் கூறினன். இதனைப் பின்னர் உணர்ந்த கூரத்தாழ்வான், "ஐயோ! உபய விபூதியையும் (நித்ய உலகமாம் வைகுந்தமும் விளையாட்டுலகம் எனப்படும் இப்பூமண்டலமும்) உடைய தாயார் மதிக்கும்படியோ செல்வச் செருக்கால் வாழ்வது?" என்று தம் உடைமையை எல்லாம் எல்லோர்க்கும் ஈந்து அந்நகரத்தைத் துறந்தார். ராமாநுஜ முநி காஞ்சீபுரத்தை விட்டு ஸ்ரீரங்கம் அடைந்த விஷயம் தெரிந்ததும், அவரும் ஸ்ரீரங்கம் நோக்கிப் புறப்பட்டார். காடு குறுக்கிட்டது. இரவு நேரம். பத்னியாகிய ஆண்டாள் ஆழ்வானிடம் வழியில் திருடர் பயமுண்டோ எனக் கேட்க, "மடியில் ஏதேனும் வைத்திருக்கிறாயோ?" என ஆழ்வான் வினவ, 'ஆம்; அவசரத்துக்கு உதவும் என்று சுவர்ண வட்டில் ஒன்று கொண்டு வந்தேன்' என்று ஆண்டாள் பதில் கூறினள். ஆழ்வானும் அதை வாங்கித் தூர எறிந்துவிட்டு, "இப்போது பயமில்லையே?" என்ன, 'இல்லை' என்று ஆண்டாள் உடன் நடந்தாள். ஒற்றுமைத் தம்பதிகளாக உடன் தீண்டாத்

தமபதிகளாக வைராகய சீலாகளாக இறுதிவரை வாழநது காட்டிய இவாகளே **பட்டா சீராமபபிளளை** எனும இருவாககும பெறறோரானவாகள

## யாதவபரகாசர் கோவிநதஜீயா ஆதல்

யாதவ பரகாசரிடமிருநது இளையாழவாா விலகிய பின னா, யாதவ பரகாசருடைய தாயாா வழககமாகத தேவப பெருமாளைச சேவிககச சநநிதிககு வநதபோது அவருககுப பெருமாளின கடாகஷததாலும, திருககசசிநமபிகளின பாாவை யாலும ராமாநுஜ முநியிடம நோநத அனபு உரையாட லாலும, 'நம யாதவபரகாசரும இநத விசிஷடாதவைத சிததாநததநதில இறஙகினால நலலதலலவா' என்ற எணணம உதிததது இதை எணணிககொணடே வரதராஜனைச சேவிகக வைய மாளிகைபபடி (அததிகிரியில ஏறும படிகள) ஏறும போது அவா எணணததை ஆமோதிபபது போல, 'நலலது நலலது' எனறு யாரோ • பேசும சொல காதில விழுநதது அதனால சநதோஷமடைநத அவா பெருமானைச சேவிதது விடடு வீடு திருமபித தம மகன யாதவ பரகாசரிடம, "நீயும ராமாநுஜனைப போல குடுமியுடனும பூணூலுடனும முக கோல தரிதது (அதவைத ஸநயாசிகளுககுக குடுமி கிடையாது, பூணூல கிடையாது, ஒருகோல உடையவா) ஸநயாசி யாவாய" எனறாா

யாதவபரகாசரும அனனையின வாாததைகளைக கேட்டுச சறறுச சிநதிககலானாா ஆரமபததில இளையாழவாா தன னிடம வேதாநத விஷயஙகளைக கேட்டு வருமபோது தான சொலலிய வேதஙகளின பொருளுககு இளையாழவாா சொல லிய நேரான அாததஙகள விதவாணுகையால தன நெஞசில, "நாம பொய சொலலுகிறோம" எனறு உறுததிக கொண டிருநததையும, இளையாழவாரைக கஙகா யாததிரையின போது வேட்டுவக சீதாராமனே வநது வழி நடததியதையும, பரமமரகஷஸசூம இளையாழவாரின பெருமையை உணாததி யிருபபதையும நனறுக எணணிப பாாததாா அதனால இப போது தாயின உரையும நெஞசில படவே அதறகுச சமமதித தாா ஆனால், "குடுமியையும பூணூலையும விடடவாகள பிராயசசிததமாகப பூமியை வலம வரவேணடுமே, விருததாப பியனான எனனால எபபடி அது முடியும? இதற கென செய வது?" எனறு வேதனைபபடடாா அனறிரவு தேவபபெருமான யாதவ பரகாசா கனவில தோனறி, "கலககம வேணடாம, நம ராமாநுஜ முநியை ஒருமுறை வலம வநது, அவா தர

முக்கோல், காஷாயம் முதலானவைகளைப் பெற்று ஸந்யஸி'' என்றருளினார்.

பொழுது விடிந்ததும் இரவில் 'கண்ட கனவினால் மனந் தெளியாமல் பெருமாளிடம் கேட்டுச் சொல்லும்படி திருக்கச்சி நம்பிகளிடம் **விண்ணப்பம்** செய்தார். நம்பிகளும் பெருமாளிடம் விண்ணப்பிக்க, பெருமாளும் ''நாம் ஸ்வப்னத்தில் சொன்னதை நம்பாமல் உம்மையிட்டுக் கேட்பிக்கிறான்'' என்றருள, இதனை யாதவ ப்ரகாசரிடம் தெரிவித்தார் நம்பிகள். உடனே யாதவ ப்ரகாசரும் மனம் தெளிந்து ராமாநுஜ முநியிடம் வந்து தண்டனிட்டு, ''அடியேற்கு முக்கோல், துவராடைகளைத் தந்து ஸந்யஸிக்கச் செய்து ஆட்கொள்ள வேண்டும்'' என்று வேண்டினார். ராமாநுஜரும், ''ஆயின், . கழுவாய் (பரிகாரம்) பண்ணவேண்டும்'' என்ன, யாதவப்ரகாசர் பெருமாளின் திருவுள்ளத்தைச் சொல்லி ராமாநுஜ முநியை வலம் வந்து வினயமாய் நின்றார். முநியும் பிராயச்சித்தம் முன்னாக சௌளம், உபநயனம் முதலான சடங்குகளைச் செய்வித்துப் பின் பஞ்ச ஸம்ஸ்காரத்தோடு திரிதண்ட காஷாயாதிகளைத் தந்தருளி **கோவிந்தஜீயா** எனத் திருப்பெயரும் அருளினார். இப்போது ஆசார்யர் சிஷ்யரானது உலகிலேயே ஓர் அற்புதமாகும். கோவிந்த ஜீயரும் ஆசார்யர் இட்டபடி இருந்தார். முநியும் ஜீயரை **யதிதர்ம சமுச்சயம்** என்னும் நூலைச் சாஸ்த்ர விரோதம் வராமல் செய்யும்படி நியமித்தார். ஜீயரும் அவ்வாறே செய்து முநியிடம் காட்ட, முநிகளும் முற்றும் கடாக்ஷித்து (பார்வையிட்டு) சந்தோஷமடைந்தார். கோவிந்த ஜீயரும் குறுகிய காலத்திலேயே பரமபத மடைந்தார். ராமாநுஜர் கூரத்தாழ்வானுக்கும் முதலியாண்டானுக்கும் வேதாந்தம், மீமாம்சை முதலிய சாஸ்த்ரார்த்தங்களைத் தெரிவித்துக் கொண்டிருந்தார்.

## ராமாநுஜமுநி திருவரங்கம் புறப்படுதல்

இளையாழ்வார் துறவறம் பூண்டு ராமாநுஜ முநியானதை திருவரங்கத்திலிருந்த முதலிகள் (பெரியோர்கள்) எல்லோரும் அறிந்து சமய வளர்ச்சிக்காக ராமாநுஜரைத் திருவரங்கத்துக்கு அழைக்கவேண்டுமென்று நம்பெருமாளிடம் விண்ணப்பித்தனர். நம்பெருமாளும் பேரருளாளனுக்குத் தூது அனுப்ப, வரதராஜனும், ''தம்தம் அபிமானத்தை (விட முடியாத அன்பிற்குரிய வஸ்துவை) விடுதலுண்டானால் நாமும் நம் ராமாநுஜரை விடுவது'' என்று அருளித் திருப்பி விட்டான்.

இது கேட்ட முதலிகள் என்செய்வது என்று யோசித்த னர். தேவராஜன், 'பாட்டுக்கு மிகவும் இரங்குவன்' என்று தேறிப் பாடுவதில் வல்லலரான ஆழ்வார் திருவரங்கப் பெரு மாளரையரை அனுப்பி வைத்தனர். அவரும் காஞ்சியை யடைந்து அங்கு தம்மவரான வரம் தரும் பெருமாள் அரைய ரால் உபசரிக்கப்பெற்று மறுநாள் வரதராஜரைச் சேவிக்கச் சந்நிதிககு எழுந்தருளினர். அப்போது பெருமாள் கச்சிக்கு வாய்த்தான் மண்டபத்தில் ஓலக்கம் (சுவாமி மண்டபத்தி லிருந்து காக்ஷி தரும் நிலே) இருக்க, ராமாநுஜ முனி திருக் கச்சி நம்பிகள் அருளிய **தேவராஜாஷ்டகத்தைச்** சேவித்துக் கொண்டிருந்தார். திருக்கச்சி நம்பிகள் திருவரங்கப் பெருமா ளரையரை எதிர்கொண்டு அவரைப் பெருமாள் ஓலக்கத் துக்கு அழைத்துச் சென்றுர்.

திருவரங்கப் பெருமாளரையரும் தேவராஜப் பெருமாளேப் பக்தியுடன் சேவித்து, 'உலகமேத்தும் ஆழியான் அத்தியூரான்' முதலான பாலேய் தமிழ்ப் பண்ணுர் பாடல் இன்கவிகளேத் தேவகானத்தில் இயலும் இசையுமாக அபினயித்துப் பாடிப் பேரருளாளனே உகப்பித்தார். அரையரின் இனிய கானத்திற்கு உகந்த பெருமாள் வரிசைகளேத் தர, "இவை யாவும் வேண்டா; அடியேன் வேண்டுவது தந் தருளவேண்டும்" என்று அரையர் கூறி மேலும் பாடிப் பரவசப்படுத்திஞர். பெருமாளும், "நீர் வேண்டுவதைத் தருகிறேம்; கேளீர்!" என்ன, அரையரும் "ராமாநுஜ முநியைத் தந்தருளவேணும்" என்று விண்ணப் பித்தார். பெருமாள், "அவரைத் தவிர்த்து வேறு கேளும்" என்றுர். "ராமன் இரண்டு வார்த்தைகள் சொல்வதுண்டோ?" என்று அரையா சொல்லக் கேட்டுப் பெருமாளும் வேறு வழி யின்றி, "தந்தோம்; கொண்டுபோம்" என்றருளிச் செய்தார். அரையரும் முநியை வாரும் என்ன, முநிகளும பெருமாளிடம் விடை கொண்டு, மடத்திலுள்ள திருவாராதனம் முதலிய வற்றைக் கொண்டுவரச் செய்து திருக்கச்சிநம்பிகளால் வழி யனுப்பப் புறப்பட்டு அரையருடன் திருவரங்கத்துக்கு எழுந் தருளிஞர்.

## ராமாநுஜ முநி "உடையவர்" ஆதல்

ராமாநுஜ முநி திருவரங்கத்து வடவாற்றங் கரையில் நீராடிப் பன்னிரு திருமண்காப்பினேத் தரித்துக்கொண்டிருந் தார். இதற்குள் திருவரங்கத்துள்ள அனேத்துப் பெரியோர் களும் பெரிய பெருமாளுக்கு இதனே விண்ணப்பம் செய்யப் பெருமாளும் ராமாநுஜ முநியை எதிர்கொண்டு அழைக்கும்

படி அர்ச்சை வடிவான சேனை முதலியாரை நியமித்தார். அதன்படி சேனை முதலியாரும் முதலிகள், ஜீயர்கள், ஏகாங்கிகள் முதலிய எல்லாப் பரிவாரங்களுடனும், குடை, சாமரம், வாத்யம் இவைகளுடனும் எதிர்கொண்டு வடவாற்றங்கரைக்கு எழுந்தருளினர். முநிகளும் அவர்கள் யாவருக்கும் தண்டனிட்டு அவர்களோடு திருவரங்கத் திருப்பதியை யணுகி முறையாகச் சந்நிதியில் பிரவேசித்துப் பெரிய பெருமாளையும் அழகிய மணவாளப் பெருமாளையும் திருவடி தொழுதார். பெருமாளும் மிகவும் உகந்த தாமரைக் கண்களால் குளிர விழித்து, "ராமாநுஜரே! நாம் நம்முடைய நித்ய விபூதியையும் (பரமபதம்), லீலா விபூதியையும் (பூமண்டலம்) உமக்கும் உம்முடையார்க்கும் தந்தோம். நம் ஸ்ரீகார்யங்களைச் சீர் செய்துகொண்டு சமயப் பொறுப்பையும் ஏற்று நடத்தி வாரும்" என நியமித்தருளினர். இவ்வாறு இரண்டு லோக ஐச்வர்யங்களையும் உடையவரானதால் அன்று முதல் நம் ராமாநுஜமுநி உடையவர் எனச் சிறப்பிக்கப் பெற்றார். உடையவரும் பெரியநம்பிகளை நோக்கி, "பெரியார்க்கு ஆட்பட்டக்கால் பெறாத பயன் பெறுமாறு என்று தேவரீரின் திருவடி சம்பந்தத்தாலே பெருமாள் அடியேனை வாழ்வித்தார்" என்று விண்ணப்பித்தார். நம்பிகளும் "கலியும் கெடும் கண்டுகொண்மின்" என்று ஆழ்வார் அருளிய 'வருங்கால நிலை' இன்று ப்ரத்யக்ஷமாயிற்று என்று உகந்தார். உடையவரும் திருவரங்கப் பெருமாளுடைய அனைத்துக் காரியங்களையும் செவ்வனே ஆராய்ந்து சிறப்புற நடத்திக்கொண்டிருந்தார்.

முன்பு கோவிந்த பட்டரைத் திருத்தும்படி திருமலை நம்பிகளிடம் அனுப்பிய அவ்விரண்டு ஸ்ரீவைஷ்ணவர்களும் கோயிலுக்கு வந்து உடையவரைச் சேவித்தனர். கோவிந்த பட்டரைத் திருத்திய விவரத்தைச் சொல்லவேணுமென்று உடையவர் கேட்டருள, அவர்களும் அவ்விருத்தாந்தத்தை யெல்லாம் சொன்னார்கள். திருமலைநம்பி ஒவ்வொரு முறையும் கோவிந்தரைத் திருத்துவதற்காகக் காளஹஸ்தி வந்து போன நிலையைக் கூறும்போதெல்லாம் உடையவா கொண்டாடினார். ஆளவந்தார் ஸ்தோத்ரத்தாலே மனம் மாறிய நிலையைச் சொல்லுகிறபோது கூரத்தாழ்வானையும் முதலியாண்டானையும் மற்றுமுள்ளவர்களையும் விளித்து, "ஆளவந்தாரின் ஸ்ரீஸூக்தியின் பெருமையைக் கண்டீரே!" என்று பலவாறு அருளிச்செய்து உளம் மகிழ்ந்து அவ்விருவரையும் குளிர நோக்கினார்.

## உடையவா பெரியநமபிகளிடம் தவயாாத்தம் பெறுதல

சில தினஙகள கழிதது உடையவா பெரியநமபிகளின திருமாளிகைககு எழுநதருளி அவா திருவடிகளிலே தணடன ஸமாபபிதது, 'ஆளவநதாா ஸ்ரீபாதததில சேவியாத குறை தீரத தேவரீா திருவடிகளை யடைநது உயநதேன தேவரீா திருவுளளததில உணடான அாததஙகளையெலலாம அடியே னுககு அருளவேணடும்'' என்று வேணடினாா நமபிகளும அபபடியே என்று சொலலி, "எனனே தவய மநதரததின பெருமை! எனனே அதனுடைய பலம! மநதரஙகளுககுள சிறநததாய, மஙகளஙகளை (நனமைகளை) விளைவிபபதாய, வேதாநதஙகள யாவறறின சாரமாய, பழைமையானதாய, எலலாப பாபஙகளையும போககுவதாய, ஐசவாயஙகளைத தர வலலதாய, ஜனஙகளை வசபபடுததுவதாய, நிசசயமாகச சமசார சாகரததைத தாணடச செயவதாயும இருககிறதே!'' என்று கொணடாடபபடுகிற தவய மநதரததின பொருளைப பரகக (விரிவாக) அருளிசசெயது, "இனனமும சில அறிய வேணடிய அாததஙகள உணடு அவறறை ஆளவநதாரின அபிமானம பெறற திருககோடடியூா நமபியிடம சென்று கேளும'' என்றருளினாா

## உடையவா திருககோட்டியூா நமபியை அணுகுதல

உடையவரும 'அபபடியே' என்று பெரியநமபிகளிடம விடை கொணடு திருககோடடியூருககுப புறபபடடாா திருககோடடியூா மதுரைககுத தெனகிழககில ஸ்ரீரஙகததுககுச சுமாா 60 மைல தூரததில உளளது அஙகு திருககோடடியூா நமபிகளின திருமாளிகையைக கேடடறிநது, இருநத இடததிலிருநதே அததிருமாளிகையளவும தணடன ஸமாபபிததுக கொணடு திருமாளிகையை யடைநது நமபிகளின பாதஙகளில வீழநது தணடன ஸமாபபிததாா "அடியேனுககு ரஹஸயாாததஙகளை யெலலாம அருளிசசெயயவேணும'' என்று தம ஆாவமெலலாம தோனற விணணபபிததாா நமபிகளும இவருடைய நமபிககையின பெருககையும ரஹஸயாாததஙகளை யெலலாம பெறுவதிலுளள ஆசையின ஊறறததையும அறிய வேணடுமென்று கருதி, 'ஆருககு என சொலலுகேன'' (யாருககு நான எனனததைச சொலல) என்று சொலலி உதாசீனமாக உளளே எழுநதருளிவிடடாா உடையவரும நெடுநேரம காததிருநது தம உளளம நிறைவேறுமற போனதென எணணி ஸ்ரீரஙகததுககுத திருமபிவிடடாா

ஒரு சமயம் திருக்கோட்டியூர் நம்பியும் உத்ஸவத்தைச் சேவிக்க ஸ்ரீரங்கம் வந்திருந்தார். உத்ஸவம் முடிந்து திருக்கோட்டியூருக்குப் புறப்படும்போது நம்பெருமாள் நம்பியை அருளப்பாடிட்டு (தனியாக விளித்து), "நம்பீ! நம் ராமாநுஜனுக்கு ரஹஸ்யார்த்தங்களை உபதேசியும்" என்று அர்ச்சகர் மூலமாய்ப் பணித்தார். அது கேட்டு நம்பியும், "பெருமானே! ஒரு வருஷமாவது ஆசார்ய பணிவிடை செய்யாதவனுக்குச் சொல்லக்கூடாது. "நாஸம்வத்ஸர வாஸிநே ப்ரப்ரூயாத்" என்றும், "இதம்தே நாதபஸ்காய, நாபக்தாய கதாசந, நசாசுச்ரூஷவே வாச்யம் நசமாம் யோப்யஸூயதி" என்றபடி "தபஸ் செய்யாதவனுக்குச் சொல்லாதே; சிச்ருஷை (பணி விடை) செய்யாதவனுக்குச் சொல்லாதே என்றும் தேவரீர் தாமே அருளிற்று. அந்த வார்த்தைகளை அடியேன் மீறவோ!" என்று விண்ணப்பிக்கப் பெருமாளும் "இந்த விஷயம் அப்படிப் பட்டதல்ல; சிஷ்ய லக்ஷணங்கள் முழுதும் பொருந்தியுள்ள ராமாநுஜருக்குச் சொல்லக் குறையில்லை" என்றருளினார்.

## உடையவர் அஷ்டாக்ஷர மந்த்ரார்த்தம் பெறுதல்

நம்பிகளும் உடையவரைப் பார்த்து, "ஊரேற வாரும்!" என்று கூறித் திருக்கோட்டியூருக்குத் திரும்பினார். உடையவரும் நம்பிகள் நியமனப்படி (கட்டளைப்படி) திருக்கோட்டியூருக்கு எழுந்தருளி நம்பியைச் சேவித்து நிற்க, நம்பியும் "இப்போது போய்ப் பிறகு வாரும்" என்றார். இவ்வாறு பதினெட்டு முறை உடையவரைத் திருப்பி யனுப்பினார் நம்பிகள். கடைசி முறையும் நம்பி ஒரு வார்த்தையும் சொல்லாமையாலே கண்ணீர் ததும்பத் திருவரங்கத்துக்குத் திரும்பி மன வேதனையோடே இருந்து வந்தார் உடையவர்.

ஒரு சமயம் நம்பியின் சீடரான ஒரு ஸ்ரீவைஷ்ணவர் நம்பெருமாளைச் சேவித்து விட்டுத் திரும்பும்போது உடையவரைச் சேவித்தார். உடையவரும் அவரிடம் தம்முடைய ஆசையையும், அதனைப் பெறுமையால் உள்ள வேதனையையும் தெரியும்படி பல சொல்லி, திருக்கோட்டியூர் நம்பிகளைக் குறிப்பிட்டு, 'இது அவர்க்குத் தகவல்ல' என்று குறைப்பட்டு அனுப்பிவைத்தார். அந்த ஸ்ரீவைஷ்ணவரும் திருக்கோட்டியூர் திரும்பி இதை விவரமாக நம்பியிடம் தெரிவித்தார். நம்பியும் ஆர்த்தி (பேரவா) பெருகுவதே என்று உகந்து, அவரிடம் நீரே போய், "தண்டும் பவித்திரமுமாக வரச் சொன்னேன் என்று சொல்லி வாரும்" என்றார். அவரும் அப்படியே உடையவருக்குத் தெரிவித்தார். அதைக் கேட்டுப் பேரானந்த

மடைந்த உடையவர், கூரத்தாழ்வானையும் முதலியாண்டானை யும் கூட்டிக்கொண்டு போய் நம்பிகளைச் சேவித்து நின்றார். நம்பியும் "தண்டும் பவித்திரமுமாக வன்றோ வரச் சொன் னோம்; இவர்களைக் கூட்டிக்கொண்டு வந்ததென்?" என்ன, உடையவரும் "இவர்களைத் தான் அடியேன் தண்டும் பவித் திரமுமாக நினைத்திருக்கின்றேன்" என்றார். "ஆகில் இவரில் தண்டு ஆர்? பவித்திரம் ஆர்?" என்று நம்பி கேட்க, முதலி யாண்டானைக் காட்டி, இவர் தண்டு (த்ரிதண்டம்) என்றும், கூரத்தாழ்வானைக் காட்டி இவர் பவித்திரம் என்றும் உடையவர் தெரிவித்தார். அதைச் செவியேற்ற நம்பியும் "நாம் சொல்லும் அர்த்தத்தை இவ்விரண்டு பேர்களைத் தவிர மற்றெவருக்கும் சொல்லக்கூடாது" என்று கட்டளையிட்டுத் தம் திருவடிகளை தொடச்செய்து ஆணை யிடுவித்து, "ஸர்வம் அஷ்டாக்ஷராந்தஸ்த்தம்" (அறியவேண்டிய எல்லாப் பொருள் களும் எட்டெழுத்து மந்த்ரத்துக்குள்ளே உண்டு) என்றபடி, அறியவேண்டியனவாகிய தன்னை (ஆத்மாவை) அறிகை, இறைவனை அறிகை, பெறவேண்டிய பேற்றை அறிகை, அப் பேற்றைப் பெறாமல் தடுத்துவரும் தடையை அறிகை, அந்தப் பேற்றைத் தரும் வழியை அறிகை என்னும் ஐம்பொருள்களைக் கூறுகிற நலந் தரும் சொல்லாகிய திருமந்த்ரத்தின் பொருள் களை ஐயந் திரிபறத் தெளிவாக உபதேசித்தார். இதைக் கேட்டு உடையவர் பேரானந்தமடைந்தார்.

## உடையவர் "எம்பெருமானார்" ஆதல்

சற்று நேரத்திற்கெல்லாம் சிந்திக்க இந்த ஆனந்தம் துக்க மாக மாறியது. "ஐயோ! இவ்வுலகில் ஆத்மாக்கள் இப் பொருளை அறியமாட்டாமல் அனர்த்தப்பட்டுப் போகிறார் களே! ஆசையுடையோர்கள் (பெற்று உஜ்ஜீவிக்க வேண்டு மென்னும் விருப்பமுடையோர்கள்) இதை யறிந்து திருக் கோட்டியூர் நம்பியின் திருவடி சம்பந்தம் அடைந்தவர்களாய், இச்சரீரம் கழிந்ததும் பகவானோடு இன்புறுவரே!" என எண்ணினார். அதனால் உடையவர் அத்திருக்கோட்டியூரிலேயே இந்த ரஹஸ்யார்த்தத்தை யறிந்துகொண்டு சிறந்த (பேரின்ப) வாழ்வைப் பெறவேண்டுமென்று ஏங்கியிருக்கின்ற ஸ்ரீவைஷ் ணவர்களையெல்லாம் அழைத்துக்கொண்டு அவ்வூரில எம்பெரு மான் ஸந்நிதியின் கோபுரத்தில் அவர்களுக்கெல்லாம் அப்பரம ரஹஸ்யார்த்தங்களை உபதேசித்தார்.

இதையறிந்த ஆசார்யரான . திருக்கோட்டியூர் நம்பி உடையவரை அழைத்து, "ராமாநுஜரே! இந்த ரஹஸ்யார்த்

தத்தை மற்ருருவர்க்கும் சொல்லக்கூடாதென்று ஆணை யிட்டன்ருே உமக்கு உபதேசித்தோம்; நீர் அதையும் மீறி பல ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் உபதேசித்தீராமே!'' என்று வினவினர். ''ஆம்; உள்ளது'' என்று பதில் உரைத்தார் உடையவர். ''இதற்குப் பலன் என்ன தெரியுமோ?'' என்று நம்பிகள் கேட்க, ''ஆசார்யனின் ஆணையை மீறியதால் அடியேனுக்கு நரகம் தான் பலன்'' என்ருர் உடையவர். ''ஆயின் இப்படி செய்வான் ஏன்?'' என்ன, ''அடியேன் ஒருவன் மட்டுமே யன்ருே நரகம் புகுவது; இவர்கள் அத்தனை பேரும் தேவரீரின் திருவடி ஸம்பந்தம் பெற்று உஜ்ஜீவித்து (உய்ந்து) போவாரன்ருே! அதுவே போதும் என்று உபதேசித்தேன்'' என்று பதில் கூறினர் நம் உடையவர். ''அந்தோ! இத்தனை பரஸம்ருத்தியே! (பிறர் வாழ்ச்சியையே விரும்புவதே). இது நமக்கு உண்டாகவில்லையே!'' என உடையவரின் பிறருடைய வாழ்ச்சிக்கு மேல் விழும் (பரஸம்ருத்தி) தன்மைக்கு மிகவும் உகந்து, ''வாரீர் **எம்பெருமானரே!**'' என்று உடையவரை வாரி அணைத்துக்கொண்டு, ''அவரோ நீர்!'' (சேதனர் வாழ்ச்சிக்காகத் தன் நிலையை குலைத்துக்கொள்ளும் குணவானை அப் பெருமாளோ நீர்! அன்றி 'பொலிக பொலிக' என்று கலியும் கெடும் கண்டுகொண்மின் என்று ஆழ்வார் கூறிய (பவிஷ்ய தாசார்யராகிய) அவர் நீர்தாமோ) எனப் பலவாறு புகழ்ந்து வியந்தார்.

## நம்பெருமாள் நாட்டிய எம்பெருமானர் தரிசனம்

பிறகு, திருக்கோட்டியூர் நம்பி சூழ்ந்துள்ள முதலிகளை நோக்கி, ''நம் சமயம் இதுநாள்வரை பரம வைதிக சித்தாந்தமென்று இருந்தது; இன்று முதல் இது '**எம்பெருமானர் தரிசனம்**' என்று வழங்கட்டும்'' என்று கூறியருளினர். இதையே மணவாள மாமுநிகள், ''எம்பெருமானர் தரிசனமென்றே இதற்கு நம்பெருமாள் பேரிட்டு நாட்டி வைத்தார்'' என்று நம்பெருமாள் திருக்கோட்டியூர் நம்பி மூலமாக ''எம்பெருமானர் தரிசனம்'' என்று உறுதிபபடுத்தினமையை அருளிச்செய்தார்.

நம்பிகளும் எம்பெருமானரைப் பார்த்து ஆனந்தமேலீட்டால், ''எம்பெருமானரே! கேளும்; இன்னும் ஒரு முடிவான ரஹஸ்யத்தின் பொருள் சிறப்பை உபதேசிக்க நினைத்திருக்கின்றேன்; இவ்வளவிலேயே திருப்தி யடைந்துவிட்டீரே! சரி; உம்முடைய உறுதியைச் சொல்லிக் காட்டும்'' என்று கேட்டனர். எம்பெருமானரும் ''தேவரீர் அருளும் பொருளைக் காட்டிலும் வேருென்று உண்டு என்றிருந்தேனுகில் நம்

பாதவனாவேன, தேவரீா சொலவதைதக கேளாமல போவேனே யாகில, தேவரீா அருளிய சிறநத பொருளகளெலலாம நெஞசிற படடதிலலை யாசககடவது'' எனறு சொலல வகை அறியாமல, அநாவது இபபடிக கூறுவது சொலலளவே எனறு எணணுமபடி ஆகிவிடாமல செயலிலும இபபோதே காடட முடியவிலலையே எனற உறுதிபபாடடை வெளியிட வகையில லாமல தேவரீா அருளுவதைக கேடக ஆவல உடையவனாய இருககினறேன'' எனறு கூறினாா ஆயின இபபோது கோயி லுககு (ஸ்ரீரஙகததுககு)ப போய மறுபடியும நீா வருவா மட டுமே வாருமென நமபிகள ஆணையிட எமபெருமானாா ஸ்ரீரஙகததுககு முதலியாணடான, கூரததாழவானுடன எழுந தருளினாா

## எமபெருமானாா சரம சலோகாாததம பெறுதல

திருககோடடியூா நமபிகள கூறியபடியே சில காலம கழிநத பினனா எமபெருமானாா மடடும தனியாக நமபிகளிடம சென்று தணடன சமாபபிதது நினறாா நமபிகள எமபெரு மானாரை அழைததுககொணடு ஏகாநதமான மேலமாடிககுச சென்று கதவைத தாளிடடுககொணடு, ''எமபெருமானாரே! இவவாாததததை யாருககும சொலலலாகாது'' எனறு தம திரு வடிகளைத தொடச செயது ஆணை யிடுவிததுககொணடு தம பெருங கருணையால,

''ஸாவ குஹயதமம பூய சருணு மே பரமம வச
இஷடோஸிமே தருடம இதி ததோ வக்ஷயாமி தேஹிதம''

(''எலலாவறறிலும மிகவும ரஹஸயமாயுளளதான எனனு டைய உததமமான வாாததைையை மறுபடியும கேள நீ எனககு மிகவும பிரியமானவனாகையால, உனககு நனமையைச சொலகிறேன) எனறு கணணன அாஜுனனுககுச சொலலி யது போல மிகவும ரஹஸயமான சரம சலோகததையும அதன அாததததையும பரககக (விரிவாக) அருளிசசெயதாா மேலும இநத அாததததை, ''பகவானிடததில பகதி இலலாத வன, பகவானை வெறுபபவன, பகதவமான பணிவிடைகள செயயாதவன ஆகிற நாஸதிகா செவியில படாதபடி பேணிக கொணடிரும'' எனறருளினாா

அதறகு எமபெருமானாா, ''அடியேன அபபடிபபடட வாகளுககுச சொலலமாடடேன, பகவானிடம பேரனபுடைய வரான கூரததாழவானுககு மடடும சொலலாதிருககக முடி யாதே!'' எனறு பணிவுடன விணணபபிததுக கொணடாா

இதைக் கேட்ட நம்பிகள், "அவருக்கு அதிகாரம் உண்டாஞ லும் ஒரு வருடமோ, ஆறு மாதங்களோ அல்லது மூன்று மாதங்களாவது பலவகையாகப் பரீக்ஷை செய்து பக்குவமறிந்து கருணையால் கைம்மாறு கருதாமல் உபதேசிககவேணும்."

"ஸம்வத்ஸரம் ததர்தம்வா மாசத்ரயமதாபிவா
பரீக்ஷ்ய விவிதோபாயை: க்ருபயா நிஸ்ப்ருஹோ வதேத்"

என்றபடி ஒரு வருஷம் பணிவிடை கொண்டு சொல்லும் என்று நியமித்தார். மேலும் தம் குமாரரான **சௌம்யநாரா யணர்** என்பவரை எம்பெருமானுரை அடைந்து உஜ்ஜீவிக்கும் படி செய்தார். எம்பெருமானுரும் தரித்திரன் பெற்ற பெரும் தனத்தைப் போல நம்பிகளிடம் இவ்வர்த்தம் கேட்ட பிறகு மிகவும் ஆனந்தத்தோடு ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளினுர்.

## ஆழ்வானுக்கு சரம ச்லோகார்த்தம் உபதேசித்தல்

தன்னை வணங்கி நின்ற கூரத்தாழ்வானிடம் எம்பெருமானுர், "ஆளவந்தார் நம்மை (அடியேனை)ப் பெருங் கண்ணோட்டத்தோடு (விசேஷ கடாக்ஷத்தோடு) பேரருளாளனிடம் செய்த ப்ரபத்தி பலித்தபடி கண்டீரே! நம்பிகள் அர்த்த விசேஷங்களால் நம்மைக் கடாக்ஷித்தபடியே!" என வியந்து கூறினுர். ஆழ்வான் எம்பெருமானுரின் அடி வணங்கி, அடியேனுக்கும் அவ்வர்த்தத்தை உபதேசித்தருள வேண்டுமென்று விண்ணப்பித்துக் கொண்டார். "உமக்குங்கூட ஒரு வருஷ சிச்ரூஷை கொண்டுதான் உபதேசிக்க வேண்டுமெனக் கட்டளை என்று பதில் கூறினுர் எம்பெருமானுர். இது கேட்டு ஆழ்வான், "அந்தோ மின்னின் நிலையிலதான இச்சரீரம் ஒரு வருஷம் இருக்குமென்று என்ன நிச்சயம்!" என்று கலங்கினுர். பிறகு, அவ்வர்த்தத்தைப் பெற்ருலல்லது தரிக்கமாட்டாமையாலே 'ஆசார்யன் திருமாளிகையில் ஒரு மாசம் பட்டினி இருந்தால், ஒரு வருஷம் பணிவிடை செய்ததற்குச் சமம்' என்ற விதிப்படி ஒரு மாசம் பட்டினி இருந்தார். எம்பெருமானுரும் இரங்கி ஆழ்வானுக்கு அவ்வர்த்தத்தை உபதேசித்தருளினுர்.

## சரம ச்லோகார்த்தம் பெற முதலியாண்டான் முயற்சி

முதலியாண்டான் தனக்கும் அவ்வர்த்தத்தை உபதேசிக்கும்படி வேண்ட, "ஆழ்வானுக்கு மட்டுமே கேட்டுக்கொள்ளப்பட்டது. அதனுல் நீர் திருக்கோட்டியூர் நம்பியிடமே சென்று ப்ரார்த்தித்துப் பெற்றுக்கொள்ளும்" என்று எம்பெருமானுர் கூறிவிட்டார். அதனுல் முதலியாணடான் திருக்

கோட்டியூர் சென்று நம்பிகளுக்குத் தண்டன் ஸமர்ப்பித்து அவருக்கு வேண்டும் பணிகளைச் செய்து கொண்டு ஆறு மாதங்கள் இருந்தார் நம்பிகளும் ஆறு மாதங்களாக முகம் கொடாதிருந்தார் ஒருநாள், "நீர் நம் ராமாநுஜனைச் சார்ந்தவர் போல் காண்கிறீர், என்ன விசேஷம்?" என்று கேட்டார் முதலியாண்டானும், 'ஆம், அடியேன் தாசரதி' என்று தண்டனிட்டு, "சரம ச்லோகார்த்தத்தை தேவரீரிடம் பெறும்படி ராமாநுஜ முநியினால் அனுப்பப்பட்டேன் அவ்வர்த்தத்தை அடியேனுக்கும் அநுக்ரஹிக்கவேணும்' (இரங்கியருளவேணும்) என்று ப்ரார்த்தித்தார் நம்பிகளும் "வித்தையினால் பணத்தால் உயர் குலத்தால் வரும் மதங்களாகிற முக்குறும்பும் நீங்கினால் உமக்கு எம்பெருமானாரே உபதேசிப்பார், இங்கு வேண்டாம், போய் வாரும்' என்று விடை கொடுத்தனுப்பினார் முதலியாண்டானும் எம்பெருமானாரை அடைந்து நடந்தவற்றை விண்ணப்பம் செய்து நின்றார்

## முதலியாண்டான் சரம ச்லோகார்த்தம் பெறுதல்

முதலியாண்டான் எம்பெருமானாரிடம் வந்து அடி பணிந்து வினயத்துடன் நின்றார் எம்பெருமானார் அங்குள்ளே வைப் பார்த்து, "நம்பிகளின் கடாக்ஷம் இருந்தபடி கண்டீரே! வித்யா மதம் தன மதம், உயர்குல மதமாகிற முக்குறும்பும் நீங்கி விளங்குகின்ற நிலையைக் கண்டீரே!" என்று கூறி, போரவுகந்து (மிகவும் சந்தோஷப்பட்டு) முதலியாண்டானுக்கு சரம ச்லோகார்த்தத்தை உபதேசித்தார் அதைப் பெற்று ஆண்டானும் பொலிவு பெற்றார் எம்பெருமானார், "இப்போதன்றோ நமக்குத் தண்டும் பவித்ரமும் கைபுகுந்தது" என்று கூரத்தாழ்வானையும் (பவித்திரம்), முதலியாண்டானையும் (தண்டு) நினைந்து கூறி ஆனந்தித்தார்

பிறகு, அருளிச்செயல் (ஆழ்வார்கள் அருளிய நாலாயிரம்) முழுவதையும் ஆளவந்தாரின் திருக்குமாரரான திருவரங்கப்பெருமாள் அரையரிடம் பெற்று அவற்றைத் தம் சிஷ்யர்களுக்கு வழங்கிக் கொண்டிருந்தார் அருளிச் செயல்களுக்கு முறையே பொருள் அறியவேணுமென்ற ஆவலோடு வாழ்ந்து வந்தார்

## ஆசார்யன் ஆணைபபடி அடிமைப பணி புரிதல்

அவவயயம பெரியநமபிகளுககு அததுழாய எனறு ஒரு மகள இருநதாா அவா மணம கொணடு மாமியாா வீடடில வாழநது வநதாா ஒருநாள ஆறறிலிருநது நீா கொணடுவரத துணை வேணடுமென மாமியாரைக கேடட போது, "உன தகபபனாிடமிருநது சீதன வெள்ளாட டியை (வேலைககாரியை) அழைதது வநது வைததுக கொள்" என அவள பதில உரைததாள இவவிஷயததை அததுழாய தன தகபபனாிடம சொலல, பெரியநமபிகள "எனககென்ன தெரியும, உன அணணன எமபெருமானாரி டம சொல" என்று அவரிடம அனுபபினாா எமபெருமா னாிடம அததுழாய இவவிஷயததை விணணபபிததாா இதைச செவியேறற எமபெருமானாா முதலியாணடானை அழைதது, "நீா அததுழாயுடன அவா புககம சென்று வீட்டுப பணிகளைச செயதிரும்" என நியமிததாா முதலி யாணடானும ஆசாாய நியமனததைத தலையால தாஙகி அததுழாயின மாமியாா வீடடில பறறு நீதயததல, நீா கொணாதல முதலான எடுபிடி காாயஙகளைச செயதுவந தாா அஙகுளளோாா அவரை ஒரு வேலையாளாகவே ஏவிக காரியங கொணடிருநதனா

ஒருநாள அவவீட்டிறகு வநதிருநத விருநதினாகளில அறிவாளிகள சிலா சாஸதரததில ஆாததவிசாரம செயது கொணடிருநதனா ஆனால, அவாகள உளள பொருளை விடடு வேறு பொருளைக கூறிககொணடிருநதனா அச்சம யம அஙகு பற்று தேயததுக கொணடிருநத முதலியாண டாள அவாகளை விளிதது, "அதறகு இது பொருளலல, இதுதான தககது" என்று பொருள கூறினா "ஓய! மடைபபளளி காாயமபாாககும உமககு என்னெஙகாணும தெரியும, படிததவாகள பேசிககொணடிருக்கும்போது படிபபு வாசனையறற நீா குறுககிடாதேயும, சுமமா இரும்" என்று அலக்ஷியமாகப பேசினா இருபபினும ஆணடான அவறறைப பொருடபடுததாமல, அவவாத ததிறகு முன்னும பின்னுமுளள வாககியஙகளை எடுத துக காட்டி, கூறுவதிலுளள பொருநதாமையைச் சுடடிக காட்டி, உணமைப பொருளை உறுதிபபடுததினாா

இதைக கேடடதும யாவரும வியபபுறறனா அவரை நோககி, "நீா யாா? எதறகாக இஙகு இககாரியஙகளைச

செய்து கொண்டிருக்கிறீர்?'' என்று பாகவதாபசாரத்துக்குப் பயந்து கேட்டனர். முதலியாண்டான் நடந்தவற்றைச் சொன்னார். ''ஸ்வாமி! எங்களை மன்னித்தருள வேண்டும். நாங்கள் ஒன்றுமறியாதவர் என்று வேலையாளைப் போல ஏவிக் காரியம் கொண்டு அபசாரப்பட்டோம். நீர் எம்பெருமானாரிடம் இப்போதே எழுந்தருள வேண்டும்'' என்றனர். ''ஆசார்யன் நியமனப்படி வந்தேன். அவர் கட்டளையின்றி நான் போகலாமோ?'' என்று முதலியாண்டான் பதில் கூறினார்.

உடனே அவ்வீட்டார் எம்பெருமானாரிடம் சென்று வணங்கி, ''ஸ்வாமி! இப்படி அபசாரப்படும்படி செய்யலாமோ!'' என்று விண்ணப்பித்தனர். என்ன நடந்ததென்று எம்பெருமானார் கேட்க, அவர்கள் நடந்தவற்றை விளக்கினார்கள். அதைக் கேட்ட எம்பெருமானார், ''நான் என்ன செய்யட்டும், நீங்கள் சீதனவெள்ளாட்டி வேண்டுமென்றீர்கள், ஸந்யாஸியான என்னிடம் வேறு யார் இருப்பார்கள்? அதனால் அவரை அனுப்பி வைத்தேன். வேண்டாமென்றால் திருப்பி அனுப்புங்கள்'' என்று சொல்ல, அவர்களும் முதலியாண்டானைத் திருப்பி அனுப்பி வைத்தார்கள்.

## திருவாய்மொழிப் பொருள் கேட்டல்

மற்றொரு சமயம் திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீரங்கத்துக்கு எழுந்தருளித் திருவரங்கனை சேவித்துத் திரும்பும் போது திருமாலையாண்டானை (ஆளவந்தாரின் மற்றொரு சிஷ்யர்) அழைத்துக்கொண்டு எம்பெருமானார் மடத்துக்கு எழுந்தருளினார். எம்பெருமானாரும் நம்பியை அடி வணங்கி நிற்க அவரைக் குளிர நோக்கி, ''யதிராஜரே! நீர் இத்திருமாலையாண்டானிடம் பக்கல் திருவாய்மொழிக்கு அர்த்தம் கேளும்'' என்று கூறி எம்பெருமானாரைத் திருமாலையாண்டானிடம் காட்டிக் கொடுத்துத் தாம் திருக்கோட்டியூர் நகருக்குச் சென்றார்.

திருமாலையாண்டான் திருவாய்மொழியைத் தொடங்கி நடத்திக்கொண்டு வந்தார். எம்பெருமானார் அதை மிக்க சிரத்தையுடன் கேட்டுக்கொண்டு வந்தார். எம்பெருமானார் இடையிடையே சில பாசுரங்களுக்கு ஆளவந்தார் சொல்லிவைத்த அர்த்தமல்லாமல் வேறு விசேஷார்த்தங்களையும் அருளிச்செய்வார்.

அதைக் கேட்டுத் திருமாலையாண்டான், "ஆளவந்தார் இப்படி அருளிச்செய்யக் கேட்டிலோம்" என்பர். இவ்வாறு முதல் பகது முடிந்து 2-ம் பத்து 3-ம் திருவாய்மொழி, "ஊனில் வாழுயிரே!" என்ற பதிகம் (பத்து பாசுரங்கள் கொண்டது) நேர்பட அதற்கு உரை அருளுகிற திருமாலையாண்டான, முதல் இரண்டு பாசுரங்களுக்கு நன்றிப் பெருக்கால் ஆனந்தப்படுகிருர் என்று அருளிச் செய்து "அறியாக் காலத்துள்ளே" என்னும 3-ம் பாசுரத்திற்கு "அறிவு உண்டாகாத காலத்திலேயே உன்னேடு உண்டான உறவை உணர்த்தி வைத்து, அந்த ஞானத்தை அழிக்கக்கூடிய



தான மதவும் மபயபறததமதாடே மேலும் வைத்தாயே என வருந்துகிருர் ஆழ்வார்" என்று பொருள் கூறினுர்.

அதற்கு எம்பெருமானுர், "இப் பாசுரத்துக்கு முன்புள்ள இரண்டு பாசுரங்களும் மேலேயுள்ள பாசுரங்களும் நன்றிபெருக்கால் ஆனந்தத்தை வெளிப்படுத்தும்படியாக இருகக, இடையிலுள்ள இம் மூன்றும் பாசுரம் மட்டும் வருத்தத்தை வெளிப்படுத்துவதாகச் சொல்லுவது பொருந்தாது. அதனுல், "அறியா மாயத்து அடியேனே, அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து வைத்தாயால்" (உன்னே அறியவிடாது தகைகின்ற ப்ரக்ருதியோடு (தேஹத்தோடு) கூடியுள்ள அடியேனே அவ்விரோதியோடு இருக்கச் செய்தே அறிவு நடையாடாத காலத்திலேயே ஸம்பந்த ஞானததை ஏற்படுத்தி வைத்தாயே) என்று நன்றிப் பெருக்கால் அருளுகிருரென்றே பொருள் கூறவேண்டுமென்று இயம்பினுர். இது கேட்ட திருமாலையாண்டான, "இது விச்வாமித்ர ச்ருஷ்டி; ஆசார்யரான ஆளவந்தார் இப்படி அருளிச்செய்யக் கேட்டிலோம்; இனி இக் காலக்ஷேபம் வேண்டாம்" எனச் சொல்லித் திருவாய்மொழிக்கு அர்த்தம் சொல்வதை நிறுத்திவிட்டார்.

இவ்விஷயம் திருக்கோட்டியூர் நம்பிக்குத் தெரிந்தது. உடனே நம்பிகள் புறப்பட்டு ஸ்ரீரங்கம் வந்து திருமாலையாண்டானிடம் சென்று, "திருவாய்மொழி காலக்ஷேபம் நடக்கின்றதா?" என்று கேட்டார். அதற்குத் திருமாலையாண்டான், "ஆளவந்தார் அருளிச் செய்யாத அர்த்தங்களை ராமாநுஜர் தம் விருப்பப்படி கற்பிக்கிறார்; அதனால் காலக்ஷேபத்தைத் தவிர்த்தேன்" என்றார் "அவ்வாறு என்ன நடந்தது?" என நம்பி கேட்கத் திருமாலையாண்டான் நடந்தவற்றைக் கூறினார். "இவ்வர்த்தம் ஆளவந்தார் அருளிச்செய்ய யான்கேட்டதுண்டு!' என்றுரைத்து, "கண்ணன் சாந்தீபினிடம் பாடம் கேட்டதுபோலே காணும் நம் ராமாநுஜர் உம்மிடம் பாடம் கேட்பது. ஆளவந்தார் நெஞ்சில் தோன்றுவதொழிய இவர்க்கு வேறொன்றும் தோற்றாது இவர் ஓர் அவதார விசேஷம்! இவருக்கு 'அறியாதவற்றை அறிவிக்கிறோம்' மென்று எண்ண வேண்டாம்" என்று சொல்லி அவரையும் பெரிய நம்பிகளையும் அழைத்துக்கொண்டு எம்பெருமானார் மடத்துக்கு எழுந்தருளினார். ஆசார்யர்களைக் கண்டதும் எம்பெருமானார் சடக்கென நிலத்தில் விழுந்து தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, "திருவாய்மொழியை விட்ட இடத்திலிருந்து தொடர்ந்து முடியும்" என்று அவருக்கு அருளித் திருமாலையாண்டானிடம், "நீர் மேல்விழுந்தேனும் அந்த ப்ரபந்தத்தை முடிக்கவேணும்" என்று நியமித்து நம்பிகள் திருக்கோட்டியூருக்குத் திரும்பினார்.

திருமாலையாண்டானும் திருவாய்மொழிக்கு அர்த்தம் அருளிச் செய்துகொண்டு வரும்போது ஓரிடத்தில், "ஆளவந்தார் இப்படி அர்த்தம் அருளிச் செய்யமாட்டார்" என்று ராமாநுஜ முநி இயம்பத் திருமாலையாண்டான், "நீர் ஆளவந்தாரை ஒருநாளாகிலும் நேரேகாணாதிருக்க, 'இப்படி அருளிச்செய்யமாட்டார்' என்று சொல்லுகைக்குக் காரணமென்?" என்ன நான் ஆளவந்தாருக்கு ஏகலவ்யன் அன்றோ!" என்றார். (அதாவது த்ரோணாசார்யரிடம் நேரில் வில்வித்தையைப் பயிலாமல் அவரிடமுள்ள பக்திப் பெருக்கால் ஆசார்யன் அறிந்த கலைகளையெல்லாம் அறிந்த ஏகலவ்யன் போன்றவன் நான் என்றபடி.) இதைக் கேட்ட திருமாலையாண்டான் திருக்கோட்டியூர் நம்பி அருளியது ஒத்துக்கிடப்பதே என்று எண்ணி, "நாம் ஆளவந்தாரிடம் கேட்கப்பெறாத அர்த்தங்களெல்லாம் இவரிடம் கேட்கப்

பெற்றோம்'' என்றுகளித்து எம்பெருமானாரை வலம்வந்து வணங்கினார். எம்பெருமானாரும் ஆசார்யரை வணங்கி நின்றார். திருவாய்மொழி அர்த்தத்தை முழுதும் கேட்டுப் பெருமை அடைந்தார். திருமாலையாண்டானும் தம் குமாரரான **சுந்தரத் தோளுடையான்** என்பாரை எம்பெருமானார் திருவடிகளை அடையச் செய்தார் (சிஷ்யராக்கினார்.)

## சரமோபாயத்தை அறிதல்

### (பேற்றுக்கு ஆசார்யனே உபாயம் (வழி) என்றறிதல்)

மீண்டும் ஒருநாள் பெரியநம்பி எம்பெருமானாரைப் பார்த்து, ''இன்னும் ஒருசிறந்த பொருள் உளது. அதனைத் திருவரங்கப்பெருமாளரையரிடம் கேளும்'' என்று நியமித்தார். யதிராஜரும் அவ்வர்த்தத்தைப் பெறவேண்டி அரையரையடைந்துஅவருக்குப்பக்குவமாகப்பால் காய்ச்சிக் கொடுத்தல், பெருமாள் திருமுன்பு அபிநயத்தோடு பாசுரங்கள் சேவிக்கும் (பாராயணம்) காலங்களில் மஞ்சள்காப்பு அரைத்துத் திருமேனியில் சாத்துதல் (பூசுதல் முதலான பணிவிடைகளை ஆறு மாதங்கள் பணிவாகச் செய்துவந்தார் இவ்வாறு ஒருநாள்மஞ்சள்காப்பு அரைத்துச் சாத்தமுற்படும்போது அரையரின்முகம் மாறியதைக் குறிப்பால் அறிந்து அம்மஞ்சள்காப்பை விடுத்து வேறு பாங்கான மஞ்சள்காப்பை அரைத்துத் திருமேனிக்குச் சாத்தி நீராடப் பண்ணினார். மனம் குளிர்ந்த அரையர் உடையவரைக் குறித்து, ''என்னுடைய எல்லா செல்வத்தையும் கொள்ளைகொள்ளவோ நீர் இப்படிச் செய்தது!'' என்றுகந்தருளினார். ''வாரீர் எம்பெருமானாரே! உமக்கு ஒருசிறந்த சரம புருஷார்த்தம் (முடிவான பேறு) சொல்கிறோம்; கேளீர்!'' என்று **பஞ்சமோபாய நிஷ்டை** என்றும், **சரம பர்வ நிஷ்டை** என்றும சிறப்பிக்கப்படுகிற **ஆசார நிஷ்டையை** அருளிச்செய்தார்.

''ஸ்ரீமதுரகவிகள், ஆழ்வாரைத் தவிர தேவு (தெய்வம்) மற்றறியாதபடி இருந்ததைப் போல நீரும்,

''குருரேவ பரம் ப்ரஹ்ம, குருரேவ பரம் தனம்
குருரேவ பர: காம:, குருரேவ பராயணம்
குருரேவ பராவித்யா, குருரேவ பராகதி: [குரு:
யஸ்மாத் ததுபதேஷ்டாஸௌ தஸ்மாத் குருதரோ

(குரு தான் உயர்நத பரப்ரஹ்மம; குருவே தான் உயாநத நிதி, குருவே தான் உயர்நத விருமபத்தககது; குருவே தான மேலான பயன, குருவே தான மேலான கலவி; குருவே தான மேலான வழி (துறை) ஏனெனருல், அப்பரம்பொருளை நமக்கு உபதேசிக்கின்ற படியால் அவனே மேலான குருவாகிருன் எனகிறபடி. தீ மனங் கெடுத்தும, பரமபொருளை மருவித் தொழும் மனமே தநதும, அறியாதன அறிவித்தும், அஸத்தா யிருநத (பரமாத்மாவைப் பறறி அறியாமையால், சத் இலலாதவஞக இருநத) சேதனனை (அறிவுடைய ஜீவாத் மாவை) ஸத்தாக (பரமாதம விஷய அறிவுள்ளவஞக ஆக்கி உளஞக) ஆக்குகின்றமையால ஆசார்யனே நம் பெறவேண்டிய பேறும, அப்பேற்றத்தைத் தரும உபாய மும் எனறு உறுதியாகஎண்ணி, "ஆசாாய: ஸ:ஹரி: ஸாக்ஷாத் சரரூபி ந சம்சய 'பீதகவாடைப் பிராஞர் ப்ரம்ம குருவாகி வந்து' எனகிறபடி. உறங்கும பெருமாள் (திருவரங்கப்பெருமாள்) தானே உலாவும் பெருமாளாய் (ஆசார்யஞய்) வந்தாரென்று இருப்பீராக!" என்று அருளிச்செய்து குளிரக் கடாக்ஷித்தார்.

## நடுநாயகமணி எம்பெருமாஞர்

ராமாநுஜருக்கு ஐந்து ஆசார்யர்கள். அவர்கள் பெரியநம்பி, திருக்கோட்டியூர் நமபி, திருமாலையாண்டான, திருவரங்கப்பெருமா ளரையா, பெரிய திருமலை நம்பி ஆவர். ஓர் அரசன தன குமாரன இளையவஞய் இருந்தால், தன சொத்துக்களைத் தன மநதிரிகளிடப ஒப்படைத்துத் தன் மகன் பெரியவன் ஆனபோது அவனிடம் ஒப்படைக்கும்படி சொலலி போகுமாப்போலே, ஆளவந்தார், "ஆம முதல்வன் இவன!" எனறு இளையாழவாரைக் கடாக்ஷித்து வைதது அவருககு உபதேசிக்குமபடி மேற்சொன்ன தம சீடர்களான ஐநது ஆசார்யாகளிடம ஒவ்வொரு அர்த்தப் பெருமையையும உபதேசிதது வைத்தார். அவவாறே அவர்களும எமபெருமாஞருககுக காலகரமததில உபதேசிதது ஆசாாயாகளாஞர்கள். எப்பெருமாஞா ஆளவநதாரிடம நேரில பெருத குறை தீர இவர்கள்பால கேட்டுக் குறை தீாநதாராஞர். அவாகளும் சிஷ்யன ஆஞலென்ன, ஆசார்யன ஆஞலென்ன, விலக்ஷணமான (சிறநத இலககணமாயுளள) உறவுதான வேணடுவ

தென்று பரமவிலக்ஷணரான (மிகச்சிறந்த இலக்கணமான) எம்பெருமானார்க்கு மேல் விழுந்து உபதேசித்தார்கள்.

இதனால் எம்பெருமானார்க்கு முன்னுள்ள ஆசார்யர்கள் எல்லோரும் உடையவரின் திருமுடி (சிரசு) சம்பந்தம் பெற்றுப் பெருமை பெற்றார்கள். பின்னுள்ளார் இவருடைய திருவடி சம்பந்தம் பெற்றுச் சிஷ்யர்களாய் உஜ்ஜீவனம் பெற்றார்கள். உத்தம மகனாலே தகப்பனுக்கும், உத்தம தகப்பனாலே மகனுக்கும் பெருமையும் வாழ்ச்சியும் உண்டாமாப் போலே ஒரு ஹாரத்தின் நடுவே ஒரு மாணிக்கம் இருந்து இரு பக்கங்களுக்கும் அழகு சேர்க்குமாப் போலே எம்பெருமானார் முன்புள்ள ஆசார்யர்களுக்கும் பின்புள்ள சிஷ்ய ப்ரசிஷ்யர்களுக்கும் நடுநாயக மணியாய் விளங்கினார்.

## ராமாநுஜ முனிக்கு விஷ உணவு இடுதல்

எம்பெருமானார் இக்காலத்தில **கத்யத்ரயம், நித்யத் திருவாராதனப்படி** ஆகிய நூல்களை இயற்றி பரப்ரஹ்மம் ஸ்ரீமந் நாராயணனே என்று உறுதிப்படுத்திச் சமயத்தை வளர்த்து வந்தார். திருவரங்கன் செல்வத்தைக் கண்காணித்து வருகையில் தவறு செய்த கோயில் கைங்கர்ய காரர்களைச் சிக்ஷிக்க வேண்டியிருந்தது. அவ்வாறு பாதிக்கப்பட்டவர்களில் ஒரு ப்ராம்மணன் எம்பெருமானாரைக் கொல்ல நினைத்தான். எம்பெருமானார் ஸந்யாஸி யாகையாலே தினசரி ஏழு வீடுகளில் மாதூகரம் (பெண்கள் கையால் பிக்ஷான்னம்) பெற்றும் புசித்து வந்தார். அதனால் அவரைக் கொல்லநினைத்த ப்ராம்மணன் தன்மனைவியிடம் அன்னத்தில் விஷமிட்டு பிக்ஷை இடும்படி நிர்பந்தித்தான். அவள் அவ்வாறு செய்யமாட்டேனென்று மறுத்தாள். பலவாறாகப் பயமுறுத்தி வற்புறுத்தினதால் வேறு வழியில்லாமல் அவள் அதற்கு இசைய வேண்டியதாயிற்று.

வழக்கம் போல் எம்பெருமானார் பிக்ஷைக்கு வந்தார். அவளும் விஷம் கலந்த பிக்ஷான்னத்தை இட்ட பின்னர் கையை விரித்துக் கும்பிட்டு, 'இதை உண்ணவேண்டாம்' என்பதைக் குறிப்பாக உணர்த்திப் போனாள். இதைக் கண்ட எம்பெருமானார் அது விஷம் கலந்த உணவு என்பதை யறிந்து, அன்றைய பிக்ஷையை ஆற்றில் கரைத்து விட்டு உண்ணாமல் பட்டினி கிடந்தார். அது முதல் பிக்ஷைக்குப் போகாமல் பட்டினியே இருந்தார்.

## திருக்கோட்டியூர் நம்பிகளின் நியமனம்

இவ்விஷயத்தைத் திருக்கோட்டியூர் நம்பி அறிந்து எம்பெருமானாரைக்காண ஸ்ரீரங்கத்திற்குவிரைந்து பயண மாகிக் காவேரியாற்றுப் பக்கம் வரும்போது ஆசார்யரின் வருகையை யறிந்த எம்பெருமானார் தம் சிஷ்யர்களுடன் காவேரிக்கு எழுந்தருளினார். ஆற்றுமணல் சூடேறிக் கால் வைப்பதற்கும் முடியாதபடி இருந்தது. அந்த மணலில் எம்பெருமானார் தம் ஆசார்யரின் முன் மரம் போல் கீழே விழுந்து வணங்கினார். வணங்கிய சிஷ்யனை எழுந்திருக்கச் சொல்லாமலேயே நெடுநேரம் சும்மா நின்றுகொண்டிருந் தார் நம்பிகள். இதைப்பார்த்துக்கொண்டிருந்த எம்பெரு மானாரின் சீடர்களில் ஒருவரான **கிடாம்பியாச்சான்** (ப்ரண தார்த்திஹரர்)என்பவர் "இதென்ன சிஷ்யாசார்யமுறை; ஒரு கருமுகைப் பூவைக் கடு வெய்யிலில் போகடுவார்கள் உண்டோ?'' என்று சொல்லிக்கொண்டு எம்பெருமானா ரைப் பரிந்தெடுத்து தம் மேலே கிடத்திக் கொண்டார். உடனே நம்பிகளும் "உம்மைத் தேடுவதற்காகத் தான் நாமும் இப்படிச் செய்தது!'' என்று கூறி இருவரையும் வாரி எடுத்து ஆச்சானைப் பார்த்து, "நீர் இவருடைய திரு மேனிக்கு (சரீரத்துக்கு) மிகவும பரிவு கொண்டீர். ஆகை யால், நீரே இவருக்குத் தளிகை (சமையல்) செய்து பரி மாறும்'' என்று நியமித்தார். எம்பெருமானாரையும் "இனி வெளி பிக்ஷைக்குப் போகவேண்டாம்; ஏக மாதுரகரம் (ஒரே பெண் கையாலிடும் பிக்ஷை) ஆக இவர் தளிகை யையே கொள்ளும்'' என்று சொன்னார். நம்பிகள் நிய மனப்படியே எம்பெருமானாருக்குக் கிடாம்பியாச்சான் தவறாது தளிகை செய்து பரிமாறி வந்தார்.

மற்றும் ஒருநாள் எம்பெருமானார் ஸந்நிதியில் பெரு மாளைச் சேவிக்கச் சென்றபோது அவர் மட்டும் தனிமை யாக வந்ததால், அர்ச்சகன் ஒருவன் தீர்த்தத்தில் விஷம் கலந்து கொடுத்தான். விஷம் கலந்த தீர்த்தம் என்றறிந் தும் அதை எம்பெருமானார் பகவத் ப்ரஸாதமென்று உட் கொண்டு அவ்விஷத்தை ஜீரணித்துக்கொண்டார். இதன் பிறகு மாறுபட்டவர் திருந்தினர். உடையவரும் தம் பெருங் கருணை உள்ளத்தால் இது போன்றவர்களை யெல் லாம் தண்டிக்காமல் அரவணைத்துக்கொண்டு அரங்கன் கார்யங்களைச் செம்மையாக நடத்தி வந்தார்.

## யஜ்ஞமூர்த்தி எம்பெருமானாருடன் வாதம் செய்தல்

எம்பெருமானாரின் கீர்த்தி திக்கெட்டும் பரவியிருந்தது. இத்தருணத்தில் மாயாவாத மதமான அத்வைதத்தைச் சார்ந்த **யஜ்ஞமூர்த்தி** என்ற மகா வித்வான் ஒருவன் கங்கா ஸ்நானதத்துக்குச் சென்று அங்கு கங்கைக் கரையிலுள்ள வித்வான்களை யெல்லாம் வெற்றி கொண்டவனாய் எல்லா சாஸ்த்ரங்களிலும் கரை கண்டவனாய்ப் பெரும் புலவனாய் இருந்தான். அங்கேயே ஏகதண்ட (ஒரு கோல்) ஸந்யாஸியாய்ப் பல சிஷ்யர்களோடு கூடியவனாய் இருந்தான். அங்கேயும் நம் எம்பெருமானாருடைய வைபவம் பரவி அவன் காதிலும் விழுந்தது. உடனே ஸ்ரீரங்கம் போய் ராமாநுஜரோடு தர்க்கிக்க வேணுமென்று உறுதி கொண்டான். அதற்குத் தக்கவாறு அநேக சாஸ்த்ரங்களை எழுதிச் சுமையாகக் கட்டி வண்டியில் ஏற்றிக் கொண்டு ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தான்.

எம்பெருமானாருடைய மடத்துக்குத் தன் கல்விச் செருக்கெல்லாம் தெற்றெனத் தெரியும்படி பெரு மதிப்புடன் சென்று, என்னுடன் தர்க்கம் செய்யவேணும் என்று கேட்டான். எம்பெருமானாரும் அதற்கிசைந்து, "அப்படியே செய்வோம்; நீர் தோற்றால் என்ன செய்வீர்?" என்று வினவினார். "நான் தோற்றால் உம்முடைய பாதரக்ஷைகளைச் சுமப்பேன்; என் பெயரை மாற்றி உம்முடைய பெயரையும் ஏற்றுக்கொள்வேன்; தவிரவும் உம்முடைய சமயத்தையே சார்வேன்" என்று கூறி, "நீர் தோற்றால் என்ன செய்வீர்?" என்று கேட்டான் யஜ்ஞமூர்த்தி. "நான் தோற்றேனாகில், என்னுடைய நூல்களை நான் தொடுவதில்லை; உமக்குத் தோற்றேனென்று சொல்வேன்; இத்தனை" என்று பதில் விளம்பினார் எம்பெருமானார்.

இவ்வாறு ப்ரதிக்ஞை செய்துகொண்டு 'வாதப் போர் பதினெட்டு நாள்கள்' என்று எல்லைப்படுத்திக்கொண்டு இருவரும் ஒருவரையொருவர் வெற்றி காணவேணுமென்று மத்தகஜங்கள் போல வாதப்போர் புரிந்தனர். ஒருவர் யுக்தியை ஒருவர் மறுத்துக்கொண்டு 16 நாள்கள் வாதம் செய்தனர். 17-வது நாள் யஜ்ஞமூர்த்தியின் யுக்தி பலமாக இருந்தது. எம்பெருமானார் மறு யுக்தி எதுவும்

தோன்ருமையால் பதில் கூருமல் தம் மடத்துக்கு எழுந்தருளினுர்.

எம்பெருமானுருக்குப் பெரிய மனக்கவலை ஏற்பட்டு விட்டது தமது திருவாராதனைப் பெருமாளான பேரருளாளனுக்கு அமுது படைத்துப் பின் பெருமாளிடம் வெறுப்போடு, "பெருமானே! ஆழ்வார் தொடங்கி ஆளவந்தார் வரை இந்த தரிசனம் (சமயம்) இடையீடின்றி ஓங்கி வளர்ந்து வந்தது; இன்று அடியேனுல் இத்தரிசனம் தோற்கக்கடவதோ! இதுநாள்வரை உம்முடையதான ஆத்மா, திருமேனி, அவற்றைப் பற்றிய உருவம், குணங்கள், உலகங்கள், இவை யாவும் சத்தியமென்று வேத சாஸ்த்ரம் முதலான ப்ரமாணத்தை நடத்திக்கொண்டு வந்தீர்; இப்போது ஒரு மாயாவாதியைக் கொண்டுவந்து அடியேனுடைய காலத்தில் எல்லா ப்ரமாணங்களையும் அழித்துப் போட்டு விளையாட்டுக் கொள்ளத் திருவுள்ளமோ! அப்படியாகில் நும் திருவுள்ளப்படிசெய்தருள்க" என்று விண்ணப்பித்துத் தாம் உண்ணுமல் மனவேதனையுடன் கண்ணயர்ந்தார்.

அன்றிரவு பேரருளாளன் எம்பெருமானுரின் கனவில் தோன்றி, "இளையாழ்வீர்! நீர் கவலுவதேன்? உமக்கு மிகச் சிறந்த சிஷ்யனை ஆக்கித் தந்திருக்கிருேம்; உம்முடைய பரமாசார்யரான ஆளவந்தார் அருளிய **மாயாவாத கண்டனத்தைச்** சொல்லி அவனை வெற்றி கொள்வீர்!" எனத் திருவாய்மலர்ந்தருளினுர்.

## யஜ்ஞமூர்த்தி தோல்வியை ஏற்றல்

"இது ஒரு ஸ்வப்னம் இருந்தபடி என்" என்று உகப்போடு எம்பெருமானுர் விடியலில் எழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு தம் திருவாராதனைப் பெருமாளான பேரருளாளனை வணங்கி, ஆளவந்தார் அருளிய மாயாவாத கண்டன யுக்திகளை மனதில் ஆய்ந்துகொண்டு பெரு மிடுக்குடனே வாதத்துக்கு எழுந்தருளினுர். எம்பெருமானுரின் அந்த நடையின் மிடுக்கையும் நேற்றிருந்த நிலைக்கு இன்றிருக்கும் நிலையின் வேறுபாட்டையும், அவர் திருமுகத்தில் வெற்றியின் நிழல் தெற்றென விளங்குவதையும் கண்டு, "இது மானுடமன்று; தெய்வம்!" என்று நிச்சயித்து யஜ்ஞமூர்த்தி சடக்கென எழுந்து, "தேவரீருக்குத் தோற்றேன்" என்று சொல்லிக்கொண்டு எம்

பெருமானாரின் திருவடிகளில் சாஷ்டாங்கமாகத் தண்டம் சமர்ப்பித்து. அடியேனை இரங்கி யருளவேணுமென்று வேண்டி நின்றார். எம்பெருமானாரும் "இதுவென்! வாதும் செய்யவேண்டாவோ?" என்ன, "தேவரீருக்கும் பெரிய பெருமாளுக்கும் (அரங்கனுக்கும்) பேதமில்லை யென்று நன்றாக அறிந்துகொண்டேன்; இனி அடியேன் தேவரீரின் முன்னிலையில் வாய் திறக்கவொண்ணாது" என்று யஜ்ஞமூர்த்தி பதில் கூறினார்.

## எம்பெருமானாரின் பரப்ரஹ்ம விளக்கம்

பிறகு, ராமானுஜர் யஜ்ஞமூர்த்தியைப் பார்த்து, "ஆயினும் யுக்திகளாலேயே காட்டப்படுகிறதான உம்முடைய சித்தாந்தம் அடிப்படையிலேயே அஸ்திவாரமற்றிருப்பதை உணர்த்துகிறேன்; கேளும்" என்று பின்வருமாறு விளக்கினார்:

"'ப்ரஹ்மம் ஒன்றுதான் உள்ளது; அதற்குக் குணங்கள் கிடையாது' என்று சொல்கிறீர். அப்படிச் சொன்னால் ப்ரஹ்மத்துக்குச் சத்யம், ஞானம், ஆனந்தம் முதலான குணங்கள் உண்டென்று வேத வாக்கியங்கள் உள்ளனவே அவற்றிற்கு என்ன பொருள் கொள்வது? என்ற கேள்வி வரும். அதற்காக அந்த ப்ரஹ்மமானது அறியாமை (அஜ்ஞானம்) வடிவான அவித்யை (மாயை)யாலே மறைக்கப்பட்டுள்ளது. அப்படி மாயையால் மறைக்கப்பட்ட ப்ரஹ்மத்துக்குக் குணங்கள் உண்டென்று யுக்தி சொல்கிறீர்கள். ஆனால், அது உங்கள் சித்தாந்தத்துக்குப் பொருந்தாது. ஏனெனில்,

ஜ்ஞானரூபம் பரம் ப்ரஹ்ம தந்நிவர்த்யம் ம்ருஷாத்மகம்
அஜ்ஞானம் சேத் திரஸ்குர்யாத் க: ப்ரபுஸ்
தந்நிவர்த்தனே.

(பரப்ரஹ்மமானது அறிவு (ஞானம்) வடிவாயுள்ளது. அது அந்த ஞானத்தால் போக்கத்தக்கதாயும் பொய்யாயுமுள்ள அறியாமையால் மூடப்படுகிறதென்றால், அந்தப் பொய்யான அஞ்ஞானத்தைப் போக்குவதற்கு யார் அதிகாரி?) என்கிறபடி, அறிவே வடிவான ப்ரஹ்மத்தை அறிவினால் அழியக்கூடியதான அறியாமை உருவான மாயை, அறிவை (ப்ரஹ்மத்தைச் சூழ்ந்ததென்றால், யுக்திக்குப் பொருந்துமோ? வெளிச்சத்தை இருள் மறைக்குமா? தவிர

ப்ரஹ்மம் நித்யமானது (அழிவற்றது); அதனால் அதை மறைத்திருக்கிற மாயையும் அழிவற்றதாகிறது. ஏனென்றால், அறிவினால்தான் அறியாமையைப்போக்கவேண்டும். இருளை விளக்கத்தால் (விளக்கால) போக்குவது போல. அறிவையே அறியாமை மறைக்கிறதென்றால் அந்த மறைக்கிற அறியாமையை யார் போக்குவது? போக்குவார் இல்லாமையால் அறிவு மயமான ப்ரஹ்மம் ஒன்று; அந்த அறிவை மறைக்கிற அறியாமையாகிய மாயை ஒன்றுஆக இரண்டு பொருள்கள் உண்மையாகி (அழிவற்றதாக) விடுகின்றனவே! அப்படி இரண்டு வஸ்துக்கள் நிலையானவது என்றபோது அத்வைதம்(இரண்டாவது பொருளற்றது) என்கிற சித்தாந்தமாகிற உங்கள் மத்தகஜம் த்வைதமாகிற (ப்ரஹ்மம், மாயை என்ற இரண்டு பொருளுடைய) ஆழ்ந்த "சேற்றிலே அமிழ்ந்துவிட்டது" என்றது முதலான யுக்திகளைக் கூறி அத்வைதத்தின் சிறுமையை எடுத்துக் காட்டினார்.

## யஜ்ஞமூர்த்தி அருளாளப்பெருமாள் எம்பெருமானார் ஆதல்

எம்பெருமானார் கூறிய விளக்கத்தைக் கேட்ட யஜ்ஞமூர்த்தி அதை உண்மையென உணர்ந்து தான் வைத்திருந்த ஏக தண்டத்தை (அத்வைத ஸந்யாஸிகள் கையில் வைத்திருப்பது) முறித்தெறிந்தார். உடையவர் திருவடிகளில மறுபடியும் வணங்கிக் கிடந்தார். ஸ்வாமியும் அவரை எடுத்தணைத்துக் கொண்டு மிகவும் கருணைகூர்ந்தார் யஜ்ஞமூர்த்தியும் அடியேனுக்கு த்ரிதண்டம் (முக்கோல்), காஷாயம் முதலியவைகளைத் தந்து அடியேனை அடிமை கொண்டருள வேண்டுமென்று வேண்டினார். உடையவரும் அப்படியே ஆகட்டுமென்று அருளி, முன்பு அத்வைத ஸந்யாஸியாய் இருந்தபோது ப்ராம்மணனுக்கு இன்றியமையாத சிகை (குடுமி), யஜ்ஞோபவீதம் (பூணூல்) இரண்டையும் விட்டதனால் அதற்குச் சாஸ்த்ரங்களில ப்ராயச்சித்தம் (பரிகாரம்) விதித்திருப்பதனால் அதன்படி ப்ராயச்சித்தம் செய்வித்துக் குடுமி, பூணூல்களைத் தரிக்கச்செய்து, பிறகு பஞ்ச ஸம்ஸ்காரத்தையும் செய்வித்து, த்ரிதண்டம், காஷாயம் முதலியவைகளையும் தந்து, நீர் உள்ளதனையும் தரித்திருமென்று சொல்லி வைஷ்ணவ ஸந்யாஸியாக்கினார். மேலும் தமக்குக் கன

வின் மூலம் பேரருளாளன் அருள் செய்த உபகாரத்துக்கு ஞாபகார்த்தமாக அவருக்கு **அருளாளப்பெருமாள்** என்ற பெயரையும், வாதத்தின் ஆரம்பத்தில் சொன்னபடி தம் முடையதான எம்பெருமானார் என்ற பெயரையும் ஒன்று சேர்த்து **அருளாளப்பெருமாள் எம்பெருமானார்** என்று திரு நாமம் சூட்டினார். பேரருளாளனின் மற்றொரு பெயர் **தேவராஜன்** என்பது. அந்த நாமத்தைக் கொண்டும் யஜ்ஞ மூர்த்திகருத் **தேவராஜமுனி** என்று மறுபெயரும் சூட்டினார். அன்று முதல் யஜ்ஞமூர்த்தி அருளாளப்பெருமாள் எம் பெருமானார் என்று வழங்கப்படலானார்.

பின்னர் ராமானுஜ முநி தேவராஜ முநியை அழைத் துக்கொண்டு சென்று திருவரங்கத் தம்பெருமானைச் சேவிக்கப்பண்ணி, தீர்த்த ப்ரஸாத ஸ்ரீசடகோபங்களையும் பெறச்செய்தார். அப்படியே அவரைத் தம் மடத்துக்கும் அழைத்துச் சென்று தம் பேரருளாளனையும் திருவடி தொழச் செய்து, "இவர் காணும் உம்மை நம்மிடம் சேர்ப்பித்தது!" என்று உகந்து கூறித் தீர்த்த ப்ரஸாதங் களை அடையச்செய்து வாழ்வித்தார். எம்பெருமானாரிடம் அருளாளப்பெருமாள் எம்பெருமானார் **திருப்பல்லாண்டு** தொடங்கி நாலாயிரம் ஓதியுணர்ந்து தத்வ சிக்ஷைகளை யும் பெற்றார்.

இப்படி எம்பெருமானார் கூரத்தாழ்வான், முதலியாண் டான், அருளாளப்பெருமாளெம்பெருமானார் முதலானோ ரைக் கடாக்ஷித்துக்கொண்டு பேரறிஞர்களின் பெருங் கூட்டமாகச் சமயத்தை நிர்வகித்துவரும் காலத்தில் அக் காலத்திய மற்று முண்டான பெரியோர்களெல்லாம் ஸ்வாமி திருவடிகளில் சிஷ்யர்கள் ஆனார்கள். இதை யறிந்த **அநந்தாழ்வான், எச்சான், தொண்டனூர் நம்பி, மருதூர் நம்பி,** முதலியவர்கள் உடையவருக்குச் சிஷ்யர் கள் ஆகவேண்டுமென்று வந்தார்கள். அவர்களை ஸ்வாமி எம்பெருமானார், அருளாளப்பெருமாளெம்பெருமானாருக் குச் சிஷ்யர்கள் ஆக்கினார். அப்போது அருளாளப்பெருமா ளெம்பெருமானார் பயந்தவராய் தம்மை அடைந்த அவர் களைக் குறித்து, "குருவியின் கழுத்திலே பனங்காயைக் கட்டினாற்போல் உடையவர் செய்தார்; எனக்கு ஆசார்ய ஸ்தானம் தகாது; நான் உடையவருக்கு அவயவம் போலே; அதனால், நீங்கள் என்னை உங்களுக்கு ஆசார்ய னாக நினைத்திராமல் எம்பெருமானாரையே ஆசார்யராகக்

கொண்டு, 'எம்பெருமானுர் திருவடிகளே தஞ்சம்' என்றிருங்கோள்'' என்றருளினுர்.

## அருளாளப்பெருமாள் எம்பெருமானுர் தனி மடம் தவிர்த்தல்

பிறகு உடையவர் அருளாளப்பெருமாள் எம்பெருமானுரின் பெரும் புலமையை மதித்து அவருக்காக அழகான ஒரு மடத்தையுண்டாக்கி அதில் அவரை வாழச்செய்தார். ஒரு சமயம் மேல்நாட்டிலிருந்து (மைசூர் ப்ரதேசம்) சில ஸ்ரீவைஷ்ணவர்கள் எம்பெருமானுரைச் சேவிக்க வேண்டுமென்று ஸ்ரீரங்கத்துக்கு வந்தனர். அவர்கள் அங்குள்ள ஒருவரைக் கண்டு எம்பெருமானுர் மடம் எங்கேயிருக்கிறது என்று கேட்டனர். அதற்கு அவர், ''எந்த எம்பெருமானுர் மடம்?'' என்று பதில் வினு எழுப்பினர். இதைக் கேட்ட அவர்கள், ''இதென்! உலகிற்கு ஒரு சூர்யனேயன்றே இருப்பது! அதுபோல ஜகதாசார்யரான எம்பெருமானுர் ஒருவரே எங்களால் அறியப்பட்டவர். மற்றுமொரு எம்பெருமானுரும் உளராவரோ?'' என்று கேட்டனர். அதற்கு உத்தரமாக ''அருளாளப்பெருமாளெம்பெருமானுர் என்ற ஒரு ஸந்யாஸியும் இந்த ஸ்ரீரங்கத்தில் தனியாக மடத்தில் வாழ்கிருர். அதனுலே தான் நாம் அவ்வாறு வினவினேம்'' என்று கூறி ராமாநுஜ முநியின் மடத்துக்குப் போகும் வழியைச் சொல்லியனுப்பினர். அவர்களும் ஸ்வாமி எம்பெருமானுரைச் சேவித்துச் சுகமே சென்றுர்கள்.

இவ்விஷயத்தை அறிந்த அருளாளப்பெருமாள் எம்பெருமானுர், ''ஐயோ! நாம் தனியாகக் குடியிருந்து ஸ்வாமி எம்பெருமானுருக்குப் போட்டியாக ஆனேமே; அபசாரப்பட்டோமே!'' என்று நெஞ்சு கலங்கினுர். உடனே தம் மடத்தை இடித்துவிட்டு எம்பெருமானுர் மடத்தே வந்து ஸ்வாமிக்குத் தண்டனிட்டு, ''ஸ்வாமி! அடியேன் இதுநாள் வரையிலும் சுதந்திரத்தாலே அஹங்கரித்து (அகம்பாவம் கொண்டு) திரிந்தேன்; இன்று தான் அகந்தை அழிந்து ஒரு பொருளாக உள்ளவனுக தேவரீரின் திருவடி யடைந்து ஸத்தைப் பெற்றேன். (உள்ளவனுக ஆனேன்). மறுபடியும் அகந்தையாலே ஸத்தை அழிந்து அநர்த்தப்படவோ? தனியே மடம் அமைந்ததால்

இந்நிலை யுண்டாயிற்று. அதனால் அடியேனைத் தனியே வைக்காமல் தேவரீரின் திருவடி நிழலிலேயே வைத்துக் காக்க வேண்டுகிறேன'' என்று வேண்டினார். எம்பெருமானாரும் ''அவ்வாறே'' என்று அணைத்துத திருவாராதனை கைங்கர்யத்தைக் கொடுததுவாழ்வித்தார். அருளாளப்பெருமா ளெம்பெருமானாரும் தம்முடைய நிஷ்டையான 'ஆசார்யனே எல்லாமாவான் எனகிற பொருளைத் தெளிவு படுததி **ஞானசாரம், ப்ரமேயசாரம்** எனகிற இரண்டு ப்ரபந்தங்களைச் செய்து உலகை உயவித்தார்.

## திருமலை மேல் நந்தவனம்

இப்படிப் பேரறிஞர்களோடு சூழப்பட்ட எம்பெருமானார் **திருவாய்மொழி**க்குப் பொருள உரைத்துக்கொண்டிருநதார். அப்போது **ஒழிவில் காலமெல்லாம்** என்ற பதிகத்தில் **சிந்துபூ மகிழும் திருவேங்கடம்** எனற தொடர் வந்ததும் தம் கோஷ்டியை நோக்கி, ''திருவேங்கடமுடையானுக்கு நந்தவனம் திருத்திப் பூக் கொடுப்பார் இங்கு யாரேனும் உண்டோ?'' என்று கேட்டார். உடனே அநந்தாழ்வான், ''அடியேன அக்கைங்கர்யத்தை ஏற்றுக் கொள்கிறேன்; விடை தரவேணும'' என்றதும், ஸ்வாமி, 'அப்படியே செய்க' என்று அநுமதி கொடுத்தனுப்பினார். அநந்தாழ்வானும் திருமலை சென்று திருநந்தவனம் திருத்தினார். அதற்காக ஏரி தோண்ட முற்பட்டுத் தாமும் தம் தேவிகளுமாக (பாரயை) செய்து வந்தார். தேவிகள் கருவுற்றிருந்த நிலையிலும் மண் சுமந்தார். சற்று நேரத்தில் ஒரு சிறு பையன் தான் உதவுவதாக அநந்தாழ்வானிடம் வரத் தம் கைங்கர்யத்தில் மற்றவர்க்கு இடமில்லை என்று மறுத்துவிட்டார்.

அச்சிறுவன் அநந்தாழ்வான் தேவிகளை மண் கொட்டுமிடத்தில் சந்தித்துத் தான் உதவுவதாகக் கூறி இடையிலேயே அவரிடமிருந்து மண்ணை வாங்கிக் கொட்டுமிடத்தில் கொட்டி வந்தான. அநந்தாழ்வானுக்கும் அச்சிறுவனுக்கும் நடந்த நிகழ்ச்சி தேவிகளுக்குத் தெரியாததால் அச்சிறுவனின் கவர்ச்சியிலும் வாக்கு நயத்திலும் கவரப்பட்டு உடன்பட்டார். விரைவாக மண்ணைக் கொட்டி வருவதை யறிந்த ஆழ்வான் தம் தேவிகளைக் காரணம் வினவினர். நடந்தவற்றை அவரும் தெரிவிக்க ஆழ்வானுக்குக் கோபம் வந்தது.

நம் கைங்கர்யத்தில் மற்றொருவரும் பங்கா! எங்கே அப்பையன் என்று தம் செயலை விட்டுவிட்டு அவனைக் காண விரைந்தார். தம்மோடு பேசின பையனே அவன் என்பதை யுணர்ந்ததும் அவனை அடிக்க ஓட அப்பையனும் அகப்படாமல் ஓடினான். ஆழ்வான் கோபத்தோடு கையி லிருந்த மண்வெட்டுக் கருவியை அவன்மேல் வீசினார். அது அவன் மோவாயில் பட்டு இரத்தம் சிந்தியது. அதோடு அப்பையன் ஆழ்வானுக்கு அகப்படாமல் சந்நிதியில் நுழைந்து மறைந்தான். துரத்திச் சென்ற ஆழ்வானும் சந்நிதியில் எங்கு தேடியும் சிறுவன் காணாது "எம்பெரு மானே இப்படி நம்மைச் செய்தான்' என்று உணர்ந்து "அவனை அடித்துவிட்டோமே' என்று மனம் நொந்தார். அதனால்தான் ஸ்ரீநிவாசனுக்கு இன்னும் மோவாயில் மருந்திடுகின்றனர் என்று பெரியோர் கூறுவர். இப்படி மலை திருத்தி நந்தவனம் செய்து அதற்கு ராமாநுஜன் என்று நாமம் சூட்டிப் பூக்கொடாப் பெருமானுக்கு— ஸ்ரீநிவாஸனுக்கு நித்யமாகப் பூக் கொடுத்து வந்தார்.

இதை யறிந்த ராமாநுஜர் தாம் திருமலை சென்று திருநந்தவனத்தையும் அநந்தாழ்வானின் பூக்கைங்கர்யத் தையும் கடாக்ஷித்துத் திருமலைமே லெந்தையை வணங்கி வரவேணுமென்று நம்பெருமாளிடம் அநுமதி பெற்றுப் புறப்பட்டார். இடையிலுள்ள திருவெள்ளறை, திருக் கரம்பனூர், திருக்கோவலூர் முதலான திவ்ய ஸ்தலங் களைச் சேவித்துக்கொண்டு சித்திரகூடம் (சிதம்பரம்) செல்ல நினைத்தார். அங்கு ஸந்நிதியைச் சைவர்கள் தங் கள் வசப்படுத்திக் கொண்டுள்ளனர் என்று அறிந்து அங்குப் போதல் இது சமய மல்லவென எண்ணி அஷ்ட ஸஹஸ்ர (எண்ணாயிரம்) க்ராமம் என்கிற ஊருக்குப் பயணமானார்.

## லக்ஷ்மி அம்மாளின் மஹத்தான த்யாகம்

அங்கு சிஷ்யர்களான இரு அந்தணர்களில் எச்சான் என்று ப்ரஸித்தரான யஜ்ஞேசர் தனவந்தராகவும், பருத் திக்கொல்லை யம்மாள் என்கிற சிறப்பையுடைய வரதா சார்யர் என்பவர் ஏழையாயு மிருந்தனர். எம்பெருமா னார் தனவந்தரான யஜ்ஞேசரிடம் வரவைத் தெரிவித்துத் தம்முடன் வந்திருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அமுது அளித்து ஆராதிக்க வேணுமென்று சொல்லி வரும்படி

இரண்டு சிஷ்யர்களை அனுப்பினார். அவர்களும் அவ்வாறே யஜ்ஞேசரிடம் தெரிவித்தனர். யஜ்ஞேசரும் தன்னிடம் வந்து விவரம் சொன்னவர்களான வைஷ்ணவர்களை கௌரவிக்காமல் எம்பெருமானாரை வரவேற்பதற்கான வேலைகளில் ஈடுபட்டார். இந்த விவரத்தை அந்த இரண்டு வைஷ்ணவர்கள் எம்பெருமானாரிடம் தெரிவித்தனர். ஸ்வாமி ராமானுஜரும் அடியாரை ஆராதிக்காத யஜ்ஞேசரிடம் செலவதை விட்டு மற்றொரு சீடரும் ஏழையுமான வரதாசார்யரின் வீட்டுக்குச் சீடர்களுடன் எழுநதருளினார்.

அவ்வமயம் வரதாசார்யர் வெளியே சென்றிருந்தார். வீட்டினுள்ளே அவரின் மனைவி லக்ஷ்மியம்மாள் இருந்தாள். வரதாசார்யரைக் குறித்து ஸ்வாமி குரல் கொடுத்தார். உள்ளேயிருந்த அம்மையார் மேலாடையின்றி இருந்ததனால் வெளியே வராமல் வரதாசார்யர் உள்ளேயில்லையெனக் கூறித் தன் நிலையையும் குறிப்பால் உணர்த்தினாள். இதை யுணர்ந்த ஸ்வாமி தம் திருமுடியில் (தலையில்) சுற்றும் துணியை உள்ளே வீச, அதை மேலே உடுத்திக்கொண்டு வெளியே வந்து கோஷ்டியுடன் கூடிய எம்பெருமானாருக்குத் தண்டன் ஸமர்ப்பித்து ஆநந்தித்தாள். ஆசார்யரான அவருக்கும் கோஷ்டிக்கும் அமுது படைக்க நினைத்தாள். உஞ்ச வ்ருத்தி (பிச்சை)க்குப் போன கணவர் வீடுதிரும்பவில்லை; என்ன செய்வதெனச் சிந்தித்தாள். உடல், பொருள், ஆவி யனைத்தும் ஆசார்யனுக்காகவே ஆக்கியிருப்பான் எவனோ அவனே யன்றோ சீடனாகிறான். அதனால் அவருக்காகப் பயன்படாத இந்த சரீரத்தாலோ மற்றொன்றாலோ நமக்கு என்னபயன்? சரீரம் நிலையற்றது. அதைக் கொண்டு நிலையுடையதான இவ்வாத்மாவுக்குரியதான அடிமைக் குணத்துக்குத் தக்கவாறு ஆசார்யனுக்குப் பணிவிடை செய்வதன்றோ சிறந்தது! சரீரத்தாலே ஆத்மாவுக்கு உண்டாகும் கற்பு எனும் சுதந்திரமான தர்மத்தைக் காட்டிலும் ஆசார்ய கைங்கர்யமாகிற பரம தர்மத்தைச் செய்வதுதான் சிறந்தது என்று துணிந்தாள்.

ஆசார்யரை யணுகி, "கோஷ்டியோடு தேவரீரை ஆராதிக்கவேணும்; சற்று இளைப்பாறுவீராக" என்று கூறி, முன்பு தன உடலில் ஆசை கொண்டவனாய், ஆனால் அதைப் பெறமுடியாதவனாயிருந்த வியாபாரியான ஒரு வைச்யனிடம் சென்றாள். "ஐயா! இன்று உம் மனோ

ரதம் நிறைவேறும்; என் ஆசார்யருக்கு நான் அமுது படைக்கவேணும்; அதற்காக இந்த சரீரத்தை இன்றிரவு உமக்குத் தருகிறேன்; அதனால் கோஷ்டியுடன் கூடியுள்ள என் ஆசார்யருக்கு ஆராதனைக்கு உரியதான சகல வஸ்துக்களையும் அனுப்பிவையும்'' என்று அந்த வைச்யனிடம் பகர் தாள். அவன் மிகவும் வியந்தான். ''இதுநாள்வரை எந்த நல்வார்த்தைக்கும் எவ்வளவு உயர்ந்த ஆபரணங்களுக்கும் முகம் காட்டாதவள் இன்று வலிய வருகிறாளே! எப்படியோ இன்று நம்எண்ணம் நிறைவேறப்போகிறது'' என்று நினைந்து வேண்டிய அரிசி, பருப்பு முதலான மளிகைப் பொருள்களையெல்லாம் பூரணமாக வரதாசார்யர் வீட்டுக்கு அனுப்பிவைத்தான்.

ஸ்வாமியின் அநுமதியுடன் தளிகை செய்து முடித்து ஆராதனைக்கு வேண்டியவைகளைச் சித்தப்படுத்தினாள் லக்ஷ்மியம்மாள். எம்பெருமானாரும் பேரருளாளனுக்குத் திருவாராதனம் செய்து அமுது செய்வித்துத் தம் சிஷ்யர்களோடு ததீயாராதனம் கண்டருளினார். (அமுது செய்தார்). பவித்ரமான இந்தஉபசாரத்தால் ஸ்வாமி பேரானந்த மடைந்தார். அற்றை நாள் அங்கேயே தங்கியிருந்தார்.

பிக்ஷைக்குப் போயிருந்த வரதாசார்யர் வீடு திரும்பினார். ஆசார்யரைக் கண்டு பரவசமானார். திருவடிகளில் விழுந்து வணங்கினார். அநுக்ரஹிக்கப்பட்டேன் என்று சொல்லி வீட்டுக்குள் நுழைந்தார். லக்ஷ்மியம்மாள் தான் நினைந்ததையும் செய்ததையும் எல்லாம் விவரமாகச் சொன்னாள். அது கேட்டு, ''நல்லது செய்தாய்; உன்னை அடைந்த நான் பாக்யவான்'' என்று அவளைக் கொண்டாடினார். பிறகு யதிராஜரால் அநுக்ரஹிக்கப்பட்டு அவருடைய ஸ்ரீபாத தீர்த்தத்தையும் (திருவடி அலம்பின தீர்த்தம்) ஸ்வாமி சேஷ ப்ரஸாதத்தையும் உண்டு களித்தனர். எல்லாம்அறிபவரான எம்பெருமானார் அவர்களின் தாம்பத்யப் பெருமையை எண்ணி வியந்தார்.

பிறகு அத்தம்பதிகள் இருவரும் எம்பெருமானாரின் ஸ்ரீபாத தீர்த்தத்தையும் அமுது சேஷத்தையும் (உண்டமிச்சம்) எடுத்துக்கொண்டு அந்தவைச்யனுடைய வீட்டுக்குப் போயினர். அந்தக் காமுகனை வைச்யனைத் திருத்த வேணுமென்ற எண்ணமுடைய லக்ஷ்மியம்மாள் அந்த

வைச்யனுக்கு முதன் முன்னம் ஸ்வாமியின் ஸ்ரீபாத தீர்த்தத்தையும் சேஷ ப்ரஸாதத்தையும் (மீதமான சாதம்) கொடுத்தாள். ""போனகம் செய்த சேடம் தருவரேல் புனிதம் அன்றே!'' என்றபடி அந்த வைச்யனுக்கு அத்தீய எண்ணங்களெல்லாம் அக்கணமே அழிந்துபோயின. லக்ஷ்மியம்மாளைத் தாயென வணங்கினான்; தான் முன் நினைந்த பாபத்துக்கு அஞ்சி வெட்கினான்; தன்னை யதிராஜரிடம் சேர்க்கும்படி வேண்டினான். இதுகண்டு ஆனந்தமடைந்த தம்பதிகள் இருவரும் அவ்வைச்யனை யழைத்து வந்து ராமாநுஜரின் திருவடி உறவு கொண்டு சீடனாகி வாழும் படி செய்தனர். அவனும் எல்லாவற்றையும் எம்பெருமானார்க்கே ஆக்கித் தொண்டு பூண்டிருந்தான். இப்படி இருபாலும் குளிர நோக்கிய எம்பெருமானார் சில நாள் அங்கு தங்கியிருந்தார். (இந்தச் சம்பவம் '**ப்ரபந்நாம்ருதம்**' என்ற நூலில் சொல்லப்பட்டது.)

## திருமலையில் உடையவர் எழுந்தருளல்

பிறகு அங்கிருந்தும் புறப்பட்டு எம்பெருமானார் பெருமாள் கோயிலுக்கு (காஞ்சிக்கு) எழுந்தருளி திருக்கச்சி நம்பிகளை முன்னிட்டுக் கொண்டு தேவராஜனைச் சேவித்துப் பெருமாளிடமும் திருக்கச்சி நம்பிகளிடமும் அநுமதி கொண்டு திருமலைக்குப் பயணமானார். போகும் வழியில் திருமலைக்கு வழி தெரியாமல் திகைத்தார். அங்கே ஏற்றம் இறைத்துக் கொண்டிருந்த ஒருவனைத் திருமலைக்கு வழி எது என்று கேட்டார். அவன் நேரான வழியைக் காட்டினான். உடனே உடையவர், 'இப்படி உபகரிப்பதே; இதொரு தெய்வச் செயல்' என்று எண்ணி அவனுக்குத் தண்டன் ஸமர்ப்பித்தார். அவன் சொன்ன வழியே சென்று கீழ்த் திருப்பதியை அடைந்து **கபிலதீர்த்த**மென்னும் **ஆழ்வார் தீர்த்தத்தில்** தீர்த்தமாடி ஆழ்வார்களை வணங்கிச் சிலநாள் தங்கினார்.

அப்போது உடையவரின் பெருமைகளை நன்கறிந்த அத்தேச அரசனான **விடலதேவன்** உடையவரைத் தொழுது அவரிடம் பஞ்சஸம்ஸ்காரங்களைப் பெற்றுச் சிஷ்யனானான். உடையவர் திருப்பதி வந்திருப்பதை அறிந்த அநந்தாழ்வான் தொடக்கமான ஸ்ரீவைஷ்ணவர்கள் திருமலையினின்றும் (மேல் திருப்பதி) கீழிறங்கி உடையவரைச் சேவித்துத் திருமலைக்கு எழுந்தருளும்படி வேண்டினர்.

"ஆழ்வார்களெல்லாம் அடிமிதித் தேறாது அடிவாரத் திருந்தே மங்களாசாசனம் செய்திருக்க, அடியேன் ஏறி வருவது தகுதியாகுமா?" என மறுக்க, அவர்களும் அங்ஙனமானால் அடியோங்களும் இங்கேயே இருந்து விடுகிறோம் என்று கூறினர். உடனே எம்பெருமானார், 'நாம் ஏறாவிடில் பெருமாளுக்குக் கைங்கர்யங்கள் கெடும்' என எண்ணித் தம் தேகத்தை மலைமேல் மலஜலம் கழியாமல் இருக்கும்படி சுத்தி செய்துகொண்டு அவர்களுடன் திருமலை அடிவாரம் வணங்கி ஏறிச் சென்றார்.

திருமலையை அடைகிறபோது பெரிய திருமலைநம்பி தீர்த்தம், ப்ரஸாதம் முதலானவைகளை எடுத்துக்கொண்டு உடையவரை எதிர்கொண்டார். அவரை உடையவர் அடி வணங்கி அம்மரியாதைகளைத் தலையாலே ஏற்றுக் கொண்டு, "ஸ்வாமி! யாரேனும் சிறியாரை அனுப்பியிருக்கக் கூடாதோ! தேவரீர் எழுந்தருளவேணுமோ?" என வினவினர். பெரிய திருமலைநம்பி, "நான்கு வீதிகளிலும் தேடினேன்; என்னைக் காட்டிலும் சிறியாரைக் கண்டிலேன்" என்றார். **இதனால் அகந்தையழிந்த நிலையைப்** பெற வேண்டுமென்பதும் ஞானத்தாலே சிறப்புடையார் ஆசார்யராலேயும் கொண்டாடத் தக்கவரென்பதும் விளங்குகிறது.

உடையவரும் திருமலை மேல் எந்தையைத் திருவடி தொழுது, ராமாநுஜ நந்தவனத்தையும் கடாக்ஷித்து மீண்டும் கீழ் திருப்பதிக்குப் பயணமானார். பெரிய திருமலை நம்பிகளும் திவ்ய தேசத்தில் மூன்று நாள்கள் தங்க வேணும் என்ன, அவ்வாறே இருந்து மலையினின்றும் கீழே இறங்கினர். அங்கேயே இருந்துகொண்டு பெரிய திருமலை நம்பியிடம் ஒருவருஷ காலம் ஸ்ரீராமாயணம் காலக்ஷேபம் கேட்டருளினர்.

## எம்பார் குண விசேஷங்கள்

உடையவரின் தம்பியும் **எம்பார்** என்கிற மறுபெயரையும் உடைய கோவிந்தப் பெருமாள் தமக்குத் தாய் மாமனும் ஆசார்யருமான பெரிய திருமலைநம்பிக்கு எல்லாவித ஊழியங்களையும் செய்து கொண்டிருந்தார். ஒருநாள் ஆசார்யருக்குப் படுக்கை அமைத்து அதில் முதலில் தாம் படுத்து உறங்கி எழுவதை உடையவர் கண்டார். இதனை

நம்பிகளிடம் விண்ணப்பஞ் செய்தார். நம்பிகள் கோவிந்தப்பெருமாளை, "இப்படிச் செய்யலாமோ! இதற்குப் பலன் என்ன தெரியுமோ?" எனக் கேட்டார். கோவிந்தப் பெருமாளும் "படுக்கையில் ஏதேனும் உறுத்துதல், ஊறுதல், கடித்தல் முதலானவற்றால் தேவரீரின் தூக்கத்திற்கு ஊறு விளையாமல் இருக்கவேணுமென்பதே அடியேனுடைய குறிக்கோள். அதனால் அடியேன் செய்த செயலுக்குப் பலன் நரகம் தான் என்றாலும் அது அடியேனுக்கு விருப்பமே" என்று பதில் கூறினார். இது கேட்டு உடையவர் வியந்தார்.

மற்றொரு நாள் உடையவர் நந்தவனத்தில் ஸ்விர நோக்கி வருகையில், கோவிந்த பட்டர் ஒரு பாம்பின் வாயில் கையிட்டு வாங்கித் தீர்த்தமாடி (ஸ்நானம் செய்து) வந்ததைக் கண்டார். என்ன காரணம் என்று உடையவர் வினவினார். அதற்கு, "பாம்பு நாக்கை நீட்டிக்கொண்டு துன்பப்பட்டுக் கொண்டிருந்தது; அதன் நாவில் முள்ளிருந்தது; அதை எடுத்துவிட்டு நீராடினேன்" என்று பதில் கூறினார். அது கேட்டு உடையவர், "என்னே இவரின் பூததயை!" (மற்ற பிராணிகளிடம் கருணை) என உளங் கனிந்தார்.

ஸ்ரீராமாயண காலக்ஷேபம் முடிந்ததும், 'திருவரங்கம் புறப்படுகிறேன்; விடை தரவேணும்' என்று திருமலை நம்பிகளிடம் வணங்கி வேண்டினார். நம்பிகள், "இத்தனை தூரம் வந்து செல்லும் உமக்கு நாம் ஒன்றும் கொடுக்க முடியவில்லையே" எனக் குறைபட்டார். உடனே உடையவர், "அப்படியானால், அடியேனுடைய எண்ணப்படியே திருத்திப் பணிகொண்ட கோவிந்தப்பெருமாளைத் தந்தருளவேணும்" என்று வேண்டினார். நம்பிகளும் கோவிந்தப்பெருமாளை அழைத்து, "நம்மைப் போலே இவரையும் நினைத்திருப்பீராக!" என்று நியமித்து, தாரை வார்த்துத் தத்தம் பண்ணி எம்பெருமானாரோடு அனுப்பி வைத்தார்.

உடையவரும் கோவிந்தப்பெருமாளை அழைத்துக் கொண்டு **சோளசிங்கபுரம்** என்கிற **திருக்கடிகையில் அக்காரக்கனிப் பெருமாளையும் திருப்புட்குழியில் போரேற்றெம் பெருமானையும்** திருவடி தொழுது காஞ்சீபுரம் சேர்ந்து திருக்கச்சி நம்பிகளை வணங்கியிருந்தார். அவ்வளவில்

கோவிந்தப்பெருமாள் ஆசார்யரான பெரிய திருமலை நம்பியைப் பிரிந்த துயராலே உடல் மெலிந்து முகம் வெளுத்துப் போனார். இந்நிலையை அறிந்த எம்பெருமானார், "வாரீர் கோவிந்தப்பெருமாளே! திருமலை சென்று பெரிய திருமலைநம்பியைச் சேவித்து வாரும்" என்று கூறி இரண்டு சிஷ்யர்களுடன் அவரை அனுப்பி வைத்தார். அவரும் பேராவலுடன் திருப்பதி சென்று நம்பிகளை வணங்கி நிற்க நம்பிகளும் முகம் கொடாமல், 'பித்தனைப் போகச் சொல்லுங்கோள்' என்று வெறுத்துக் கூறினர். இது கேட்ட நம்பிகளின் தேவியார், "இதென்; இத்தனை தூரம் இளைத்து வந்தவரை அழைத்து முகம் காட்டித் தீர்த்த ப்ரஸாதங்களும் கொடுத்து அனுப்பவேண்டாவோ" என்ன, 'விற்ற பசுவுக்குப் புல் இடுவாருண்டோ?' என்று கடிந்து முகங் கொடாதே யிருந்தார் நம்பிகள். கோவிந்தப்பெருமாளும் திருமாளிகை வாசலில் தண்டனிட்டுக் காஞ்சிக்குத் திரும்பி உடையவரைத் தண்டனிட்டு நின்றார். உடன் வந்தவர்கள் நடந்த விவரங்களைச் சொல்ல எம்பெருமானார் பெரிய திருமலை நம்பியின் எல்லாம் உணர்ந்த நிலையை எண்ணி மகிழ்ந்தார். பிறகு, கோவிந்தப்பெருமாளுடன் புறப்பட்டுத் திருவரங்க மடைந்து பெரியபெருமாளை வணங்கினார். நம்பெருமாளும் "சுகமே வந்து சேர்ந்தீரே!" என்று வாய் நேர்ந்தான்.

எம்பெருமானாரின் கோஷ்டியில் கலந்து எம்பெருமானாரின் எளிமை, நீர்மை முதலான குணங்களால் ஈர்க்கப் பட்டு கோவிந்தப்பெருமாள் உடையவரை விட்டகலாது தொண்டு பூண்டு, ஞான பக்தி வைராக்யங்கள் வெளித் தோன்ற வாழ்ந்து வந்தார். ஒருநாள் உடையவரும் ஸ்ரீவைஷ்ணவர்களுமாகக் கூடியிருக்கையில் எல்லா ஸ்ரீவைஷ்ணவர்களும் சேர்ந்து கோவிந்தப்பெருமாளின் ஞானம், பக்தி, வைராக்யம், ஆசார்யனே தனக்கு எல்லாம் என்ற உயர் குணங்களைக் கொண்டாடினர். அதற்குக் கோவிந்தரும், "ஒக்கும்; நீங்கள் கூறுவதெல்லாம் பொருந்துவதே" என்று கொண்டாடினார். இப்படி தன் குணங்களைத் தானே கொண்டாடிக்கொள்வது ஆணவத்தைக் காட்டுமதா யிருக்கையாலே உடையவர், "எல்லாரும் உம்மைப் புகழ்ந்தால், நீர் உம்முடைய நைச்யத்தை (தாழ்மையை) யன்றோ சொல்லிக்கொள்ளவேணும்;

அதை விடுத்து உம்மை நீரே புகழ்ந்து கொண்டு, தற்பெருமையைக் காட்டலாமா?'' என்று கோவிந்தரைக் கேட்டார். அதற்கு அவர், ''ஐயோ! இந்த குணங்களையெல்லாம் அடியேனிடம் தோற்றுவித்தது தேவரீராகையாலே இந்த புகழ்ச்சிகளெல்லாம் தேவரீருக்கேயாம். அடியேனைக் கொண்டாட வேண்டுமென்றால் காளஹஸ்தியிலிருந்த நிலைமையையன்றோ சொல்லவேணும்'' என்று பதில் கூறினார். இது கேட்டு எல்லோரும் அவரது நிலையை வியந்து கொண்டாடினர். எம்பெருமானார், ''நல்லீர்! இந்த உம்முடைய குணங்களெல்லாம் எமக்கும் உண்டாகும்படி உம்முடைய நன்னெஞ்சாலே அணைத்துக்கொள்வீர்!'' என்று வாரி யணைத்துக்கொண்டார்.

ஒருநாள் கோவிந்தப்பெருமாள் தம் காலைக்கடன்களையும் மறந்து ஒரு தேவதாசி வாசலிலே நின்றிருந்தார். இதைக் கண்டவர் எம்பெருமானாரிடம் தெரிவித்தார்கள். ''இப்படிச் செய்யலாமோ?'' என்று உடையவர் கேட்க ''தேவரீரின் குணங்கள் நிறைந்த தாலாட்டுப் பாட, தேவரீரின் குணங்கள் அடியேனை ஈர்க்க அநுபவித்துக் கொண்டு நின்றுவிட்டேன்'' என்று தம்முடைய ஆசார்ய ப்ரேமையை வெளியிட்டார்.

## கோவிந்தப்பெருமான் சந்யாஸம் ஏற்றல்

முக்கரணங்களாலும் எம்பெருமானாரையே நோக்கிக்கொண்டிருந்த கோவிந்தப்பெருமாளை அவர்தாயார், ''உம் பார்யை பக்குவமானாள்; அவளோடு தனித்திருக்க வேணும்'' என்ன, ''இருட்டும் தனிமையுமா யிருக்கும் போது சொல்லுங்கள்'' எனப் பதில் கூறினார். பலநாள் கழிந்தும் அது கூடாமையாலே அவருடைய தாயார் உடையவரிடம் தெரிவித்தாள். உடையவரும் ''கோவிந்தரே! நம்மாணை; ருது காலத்திலே நும் மனைவியோடு இருந்து வாரும்'' என்று சொல்லி யனுப்பி வைத்தார். கோவிந்தரும் ஏகாந்தத்தில் அந்தர்யாமியையும் அவன் குணங்களையும் எடுத்துக் கூறிப் பார்யையை அனுப்பி வைத்தார். இது கண்ட தாய் மனம் வருந்தி, 'இப்படிச் செய்யலாமோ!' என்ன, ''அந்தர்யாமிப் பெருமான் முன்னே இந்த தவற்றைச் செய்யலாமோ!'' எனப் பதில் சொன்னார் இவருடைய விஷய வைராக்யத்தை யறிந்த எம்பெருமானார், 'இல்லற மல்லேல் துறவறம்' என்றபடி

கோவிந்தப்பெருமாளுக்கு த்ரிதண்டம், காஷாயம் முத லானவைகளைக் கொடுத்துச் சந்யாஸியாக்கித் தம் பெய ரைச் சுருக்கி எம்பார் என்று திருப்பெயரும் சூட்டினார்.

## உடையவர் ப்ரஹ்ம ஸூத்ரங்களுக்கு உரை எழுதுதல்

ப்ரஹ்ம ஸூத்ரங்களுக்கு விசிஷ்டாத்வைத பரமாக பாஷ்யம் செய்யத் திருவுள்ளம் கொண்டார். அதற்காக அந்த ப்ரஹ்ம ஸூத்திரங்களுக்குப் போதாயனர் அருளிய வ்ருத்தி க்ரந்தம் (விரிவுரை) வேண்டியிருந்தது. அதைப் பெறுவதற்காக ஆழ்வானை அழைத்துக்கொண்டு காஷ் மீரம் சென்று சாரதா பீடத்தை அடைந்தார். அங்குள்ள வித்வான்களை யெல்லாம் வாதத்தில் வென்று சாரதா தேவியை உகப்பித்து அவளால் தரப்பட்ட அந்த போதா யன விருத்தி க்ரந்தத்தைக் கைக்கொண்டு வேகமாகத் திரும்பினார். அங்குள்ள வித்வான்கள் நூல் நிலைய நூல் களை ஆராய்கையில் அவ்ருத்தி க்ரந்தம் காணாமையால், எம்பெருமானார் தாம் கொண்டு போயிருக்க வேண்டு மென்று அவரைப் பின் தொடர்ந்தனர். பல நாள்களுக் குப் பின் வழியிலேயே எம்பெருமானாரிடமிருந்து அந்த க்ரந்தத்தை அபகரித்துச் சென்றனர். க்ரந்தம் இழந்த மைக்கு வருந்திய உடையவரைப் பார்த்துக் கூரத்தாழ் வான், "ஸ்வாமீ! வருந்தவேண்டாம்; இரவு நேரங்களில் அந்த க்ரந்தத்தைப் படித்து அப்படியே நெஞ்சில் தேக்கி வைத்துள்ளேன்; தேவரீரின் திருவடி பலத்தால் மறவாம லிருக்கிறது; பாஷ்யம் செய்யத் தடையிருக்காது" என்ற னர். ஸ்வாமி செவிக்கினிய அச்சொல் கேட்டு ஆநந்த மடைந்தார்.

ஆழ்வானுடன் ஸ்ரீரங்கம் எழுந்தருளிய பின்னர் வியா சர் அருளிய ப்ரஹ்ம ஸூத்ரங்களுக்கு விரிவுரை செய்யத் தொடங்கிய உடையவர் ஆழ்வானைப் பார்த்து, "நான் சொல்வதை எழுதிக் கொண்டு வாரும்; நும் மனதிற் கிசையவில்லையானால் நிறுத்தும்" என்று சொல்லி வைத்து உரை சொல்லிக்கொண்டு வர ஆழ்வான் எழுதிக் கொண்டு வந்தார். ஆத்ம விஷயம் வந்தபோது, 'ஞானத் தோடும் ஆனந்தத்தோடும் கூடியவன் ஆத்மா' என்று பர மாத்மாவோடு ஒத்திருக்கும்படி உரை சொல்ல, அது ஒவ்வாமையாலே ஆழ்வான் எழுதாமல் நிறுத்தினார். அது கண்டு எம்பெருமானார் கோபத்தோடு ஆழ்வானைத் தள்ளி

விட்டார். ஆழ்வானை மற்றவர்கள், 'இப்படிச்செய்தாரே! நீர் என்ன நினைக்கிறீர்?' என்று கேட்க, ""சொத்துக்குரியவன் சொத்தை எப்படியும் செய்வான்; சொத்துக்கு அதிலே ஒரு சுதந்திரமுமில்லை; அவன் இஷ்டப்படியிருக்கையே நிலை'' என்று பதில் கூறினார். பிறகு எம்பெருமானார் நன்கு யோசித்து ஆழ்வானை அருகில் அழைத்துத் தம் செயலுக்கு வருந்தி, பரமாத்மாவைக் காட்டிலும் வேறுபட்டிருக்கும் குணமான பகவானுக்கு அடிமைப் பட்டிருக்கும் தன்மையையும் சேர்த்து, ""ஆத்மா ஞானத்தோடும் ஆனந்தத்தோடும் கூடி பகவானுக்கு அடிமையாயிருக்கும்'' என்று கூறி எழுதும்படி பணித்து ஸ்ரீபாஷ்யத்தை முழுதும் முடித்தருளினார். மேலும், **வேதாந்த தீபம், வேதாந்த ஸங்க்ரஹம், கீதா பாஷ்யம்** என்னும் நூல்களையும் செய்தருளினார். இப்படி விசிஷ்டாத்வைதத்துக் கிணங்க உரை செய்து ஸ்ரீஆளவந்தாரின் முதல் குறையை நீக்கினார்.

## எம்பெருமானார் திக்விஜயம் செய்தல்

பிறகு எம்பெருமானார் அடியார்களின் கருத்துக்கிசைய திக்விஜயம் செய்து **பரவாதியரை** (இதர சமயத்தினரை) வென்றும் திவ்ய தேசங்களைச் சேவித்தும் வரத் திருவுள்ளம் கொண்டு நம்பெருமாளிடம் அநுமதி கொண்டு புறப்பட்டார். **திருக்குடந்தை** (கும்பகோணம்) முதலான திவ்ய தேசங்களை வணங்கி அங்குள்ள வேறு மதத்தாரை ஜயித்துத் **திருமாலிருஞ்சோலை, திருப்புல்லாணி, ஆழ்வார் திருநகரி** முதலானவற்றைச் சேவித்தும் அங்குள்ள வாதியரை வென்றும் **திருக்குறுங்குடிக்கு** எழுந்தருளினார்.

திருக்குறுங்குடி நம்பியை வணங்கியபோது அப்பெருமான், ""ராமாநுஜரே! நாம் சன்மம் பலபல செய்து திருத்தப் பார்த்தும் இந்த ஆத்மாக்கள் திருந்தவில்லையே! நீர் எப்படித் திருத்தினீர்'' என வினவினன். உடையவர் ""கேட்கும் கிரமத்திலே கேட்டருளவேணும்!'' என்ன, பெருமாள் தம் ஆசனத்தை உடையவருக்கு வைத்துத் தாம் கீழே இறங்கி ரத்ன கம்பளத்தில் வீற்றிருந்தார். உடையவர், பெருமானிட்ட ஆசனத்தில் தம் ஆசார்யரான பெரியநம்பிகள் இருப்பதாகப் பாவித்துத் தாம் நிலத்திலே இருந்துகொண்டு பெருமானின் திருச்செவி

யிலே மந்த்ர ரத்னமான த்வயத்தை உபதேசித்தார். நம்பியும் உகப்போடு, "ராமானுஜனை யுடையோம்" என்றாள, உடையவரும் அவருக்கு **ஸ்ரீவைஷ்ணவ நம்பி** என்ற திருப்பெயரைச் சூட்டினார்.

## எம்பெருமானார் பாஷ்யகாரர் திருநாமம் பெறுதல்

பிற அங்கிருந்து **திருவனந்தபுரம்**, மற்றுமுண்டான மலையாளத் திவ்ய தேசங்களைச் சேவித்துக் கொண்டும் வித்வான்களை வெற்றி கொண்டும் மேற்குக் கடற்கரை வழியே உத்தரதேசம் சென்று **வடமதுரை, சாளக்ராமம்** முதலான திவ்ய தேசங்களை வணங்கியும். வாதிகளை வென்றும் பட்டிமண்டபத்தை யடைந்து **ஸரஸ்வதி பண்டார** (நூல் நிலைய)த்தை யடைந்தார். ஸரஸ்வதிதேவி எம்பெருமானாரை வரவேற்று, "தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீக மேவ மக்ஷிணீ" என்பதற்குப் பொருள் சொல்லுக என்றலும் முன்போலவே "சூரியமண்டல மத்யவர்த்தியானப்ரஹ்மத்துக்கு நீரை உறிஞ்சுகிறவனான சூரியனாலே அலர்த்தப்படுகிற தாமரை போன்ற கண்கள்" என்று பொருளுரைத்தார். இதுகேட்ட ஸரஸ்வதிதேவி மிகவும் ஆனந்தமடைந்து அவர் செய்த பாஷ்யத்தைத் தலையால் தாங்கி, உடையவரின் கைகளைப் பிடித்துக் கொண்டாடி, "**ஸ்ரீபாஷ்யகாரர்**" என்ற பெயரையும் சூட்டி, ஹயக்ரீவப் பெருமாள் விக்ரஹத்தையும் கொடுத்து ஆதரித்தாள். 'இப்படிக் கொண்டாடுகைக்குக் காரணமென்ன?' என்று எம்பெருமானார் கேட்க, அதற்குக் கலைவாணி, "முன் சங்கரன் இங்கு வந்தபோது இதே வாக்யத்துக்குப் பொருள் கேட்டேன்; அதற்கு குரங்கினுடைய ப்ருஷ்டம்(பின்புறம்) போலிருக்கும் ப்ரஹ்மத்தினுடைய கண்களென்று வேதம் கேலி செய்கிறது என்று நெஞ்சு நோகும்படி பொருள் சொன்னான்; நீர் என் மனம் குளிரப் பொருள் சொன்னீர்; அதுதான் காரணம்" என்றாள்.

## எம்பெருமானார் வித்வான்களை வாதில் வெல்லல்

இந்த விவரமறிந்த அத்தேசத்திலுள்ள வித்வான்கள் எம்பெருமானாருடன் வாதத்துக்கு வந்தார்கள். அவர்களையெல்லாம் ஜயித்துத் தம் சித்தாந்தத்தை நிலைநாட்டினார். இந்தப்பெருமையை அறிந்த அத்தேசத்து அரசன் ஸ்வாமி திருவடிகளையடைந்து உஜ்ஜீவித்தான். அரசன் ஸ்ரீபாஷ்ய

காரருக்குத் தொண்டனானதை அறிந்து மற்றுமுண்டான பொறாமைக்காரர்கள் உடையவருக்குச் சூந்யம் வைக்கப் பார்த்தார்கள். இது தெரிந்த எம்பெருமானார், "இதைக் காண்போம்!" என்றிருக்க, அப்பொறாமைக்காரர்கள் தங்களில் தாங்களே அடித்துக்கொண்டு பித்துப் பிடித்து அலைந்தனர். இதைப் பார்த்த அவ்வரசன் ஸ்வாமியை வேண்ட, அவர்கள் யாவரும் நல்ல நிலையை அடைந்து ஸ்வாமிகளைச் சரணடைந்தனர். அங்கிருந்தும் **வாராணசி** (காசி)யை யடைந்து கங்கையில் நீராடி, பின்னர் இமய கிரியைக் கடந்து கண்டமென்னும் **கடிநகர், பத்ரி, ஸ்ரீபுருஷோத்தமம்** எழுந்தருளி அங்குள்ள அத்வைதிகளை வென்று ராமாநுஜ மடத்தை ஸ்தாபித்தார். பின்னர் ஆந்திரம் வழியாக **ஸ்ரீகூர்மம்** வந்து, **ஸிம்மாத்ரி, அஹோபிலம்** முதலானவற்றைச் சேவித்துக்கொண்டு **திருவேங்கட** மடைந்தார்.

## ஸ்ரீநிவாசன் சங்கு சக்ர மேந்திச் சந்தேகம் தீர்த்தல்

"தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்—சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமே லெந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றா யிசைந்து"

என ஆழ்வா ரருளியபடி திருமலைமே லெந்தைக்கு ஜகத் காரண வஸ்துவுக்கு இலக்கணமாக நீள்முடியும் சங்க சக்ர திவ்யாயுதங்களும் திரு யஜ்ஞோபவீதமும் (பூணூலும்) கூடியிருக்கிற விஷ்ணு நிலையும், அக்காரண வஸ்துவை உபாசனை செய்கிற வஸ்துவுக்கு இலக்கணமான தாழ்சடையும் ஒள்ளிய மழுப்படையும் பாம்பாபரணமும் கூடியிருக்கும் சிவன் நிலையும் ஒன்றாக இசைந்திருந்ததாலே அங்குள்ள சைவர்கள் அந்த ஸ்ரீநிவாசனைத் தங்கள் சிவன் என்று வாதாடினர். பல சொல்லியும் கேளாமையால் உடையவர், "உங்கள் தேவனுக்கு அடையாளமான திரிசூலத்தையும் உடுக்கையையும், எங்கள் பெருமானுக்கு அடையாளமான சங்க சக்ரங்களையும் இத் தெய்வத்துக்கு முன்னே வைப்போம்; எதை ஏற்றுக் கொள்ளுமோ அத்தெய்வமாகக் கொள்வோம்" என்று கூறினர். எல்லோரும் சம்மதித்தனர். அதுபோலவே ஆயுதங்களைப் பெருமான் திருமுன்பு வைத்துக் கர்பக்ருஹத்தை யாருமில்லாதபடியும் புக முடியாதபடியும்

நனகு ஆராயநது கதவைப பூட்டி வைததனா மறுநாள விடிநத பிறகு கதவைத திறநதனா பெருமாளை சஙக சகரஙகளைக கையிலேநதி நினறு சேவை சாதிததான இதைக கணட சைவாகள தம அறியாமைககு வருநதி ஸ்ரீநிவாசனைப புகழநதனா எமபெருமானாா ஆநநதக கணணீா பெருக நினறு அடி வணஙகினாா "அபபனுககுச சஙகாழி அளிதத பிரான" எனறு ஸ்ரீபாஷயகாரரைக **கொணடாடினர்**

உடையவா அஙகிருநதும புறபபடடுப **பெருமாள கோயில்** (காஞசி), **திருவல்லிககேணி**, **திருமலை**, **மதுராந்தகம்**, அஙகு பெரியநமபி தமமை அங்கீகரிதத **மகிழமரத்தடி**, **திருவகீநதிரபுரம்**, **வீரநாராயணபுரம**, அஙகு நாதமுனிகள யோகம செயதிருநத இடம முதலாகச சேவிதது அஙகாஙகு வாதுககு வநதவாகளை யெலலாம வெனறு பூபரதக்ஷிணம செயது மீணடும திருவரஙகம சோநது பெரியபெருமாளையும அழகிய மணவாளனையும அடி வணஙகித தம சிததாநதததைப பெருககிககொணடிருந**தார்**.

## பட்டர் திருவவதாரம

கூரததாழவான நிததும உஞசவருததி (**சிஷடாசார ஸம்பனநரிடம**அமுதுபடி ஏறறு)செயது தளிகை கணடருளவது வழககம அனெருரு நாள காலையிலிருநது பெருமழை பகல வரை மழை விடவிலலை பகலுககு மேல உபாதாநம (பிக்ஷை ஏறறல) செயயககூடாமையால திருவாராதனைப பெருமாளுககு ஒரு பழததை அமுது செயவித்து பகல படடினியே கிடநதாா சாயஙகால சநதயாவநதனாதிகளை முடிததுப பெரியபெருமாளை முறை தபபாமல சேவிதது வநது தம திருமாளிகையில படடினியே உறஙகினாா ஸநநிதியில அரவணைபபெருமாளுககுத தளிகை கணடருளச செயகிற போது திருச்சினன ஓசை எழுநதது அது ஆழவானின தேவிகளான ஆணடாள காதில விழுநதது அபபோது ஆணடாள, "உமது பகதன படடினியே கிடககக நீா கூடிககுலவி அமுது செயவதே!" எனபெருமாளை வெறுததாள அதனை உளளுவாா உளளிறறெலலாம உடனிருநது அறிகிறவரான நம பெருமாள அறிநது, உததம நமபியின கனவில தோனறி, "நமபீ! ஆழவான படடினி கிடககிறாா, நீா இவவரவணைப

பிரசாதத்தைக் குடை, சாமரம் முதலான விருதுகளோடு கொண்டுபோய்க் கொடுத்து வாரும்'' என்றன் அவ வாறே நம்பிகளும் பிரசாதம் கொண்டு செல்ல, படுத்துக் கிடந்த ஆழ்வான் வாத்ய ஒலி கேட்டு, ''இதென்ன இன்றைக்கு என்ன விசேஷம்!'' என்று பதறி எழுந்து வெளியே வந்தார் நம்பிகளும், 'அரவணையான கட்டளை' என்று கூறிச் சாக்கரைப் பொங்கலைத் தர ஆழ்வானும் ''முன்னமே பூரணமாக அநுக்ரஹம் செய்திருக்க இப்போது இதுவென்ன'' என்று எண்ணி இரண்டு திரளைகளை மட்டும் எடுத்துக்கொண்டு மற்றவற்றைத் திருப்பி யருளினார். பொங்கலைக் கையிலேந்தி உள்புகுந்த ஆழ்வான், ''ஆண்டாள்! நீ ஏதேனும் நினைந்தாயோ?'' எனக் கேட்க, ஆண்டாள் தாம் நினைந்ததைச் சொல்ல ''இப்படிச் சொல்லலாமோ?'' என்று வருத்தத்துடன் கூறி பரஸாதத்தைத் தாமும் அமுது செய்து (உண்டு) ஆண்டாளுக்கும் கொடுத்தார் இத்தத் திரளைகள்தான் பட்டரும் **சீராமப்பிள்ளையும்** அவதரிப்பதற்குக் காரணமாயின

இப்படி நம்பெருமாள் அநுக்ரஹத்தாலே பொங்கலே வியாஜமாக ஆழ்வானுக்கு வைகாசியில் அநுஷத்தில் ஒரு குமாரர் அவதரித்தார் அக்குழந்தையைப் பற்றிய எல்லாவற்றுக்கும் எம்பெருமானாரே உரியவர் என்று ஆழ்வான் பற்றற்றிருந்தார் பத்து நாள் கடந்த இரண்டாம் நாள் எம்பெருமானார் எம்பாருடன் ஆழ்வான் திருமாளிகைக்கு எழுந்தருளி உள்ளிருந்து குழந்தையைக் கொண்டு வரும்படி எம்பாருக்குக் கட்டளையிட்டார் எம்பாரும் அவ்வாறே குழந்தையைக் கொண்டு வந்து ராமாநுஜரின் முன் நீட்டினார். பொசுகு பொசுகு என்று சுடரொளி வீசுகின்ற அக்குழந்தையைக் கண்ட எம்பெருமானார், ''த்வயம் பரிமளிக்கிறதே! எம்பார் என்ன செய்தீர்?'' எனக்கேட்க, எம்பார், ''இக்குழந்தைக்கு தோஷம் வாராதபடி காப்பாக **த்வயாநுஸந்தானம்** பண்ணிக்கொண்டு வந்தேன்'' என்று பதில் கூறினார். இது கேட்டு உடையவர் உகந்து, 'உட்லுக்குப் பரிந்த நீரே ஆத்ம உஜ்ஜீவனத்துக்கும் (மிகச் சிறந்த வாழ்வுக்கும்) உரியவர்'' என்று கூறித் தம் கையாலே அக்குழந்தைக்குப் பஞ்சாயுத ஆபரணம் அணிவித்துப் பெயரிட்டு (நாமகரண) விழாவில் எம்பார் கையாலேயே திருவிலச்சினை செய்வித்து **பராசர**

**பட்டர்** என்று திருப்பெயர் இட்டு மகிழ்ந்தார். இதனால் ஆளவந்தாரின் இரண்டாவது குறையைப் போக்கினார்.

எம்பாருக்கு ஒரு தம்பியார் இருந்தார். அவர் பெயர் **சிறிய கோவிந்தப்பெருமாள்**. அவருக்கு ஒரு குமாரர் அவதரித்தார். அக்குழந்தைக்குப் **பராங்குச நம்பி** என்ற பெயரிட்டு ஆளவந்தாரின் மூன்றாவது குறையையும் நீக்கினார்.

## பட்டரின் பால்யம்

**பட்டர்**என்று கொண்டாடப்படுகிற பராசரபட்டரை நம்பெருமாள் மஞ்சள் நீர் குடிப்பித்துத் தம் குமாரராக அங்கீகரித்துக் கொண்டார். திருமணத்தூண் (அரவணைப் பெருமாள் திருமுன்புள்ள தூண்) அருகே தூளி கட்டி வளர்த்தார். தவழும்பருவத்தே பெருமாளுக்குப் படைத்துள்ள பிரசாதங்களைத் தவழ்ந்து சிறு கை அளையும்படி பட்டர் வளர்ந்தார்.

பட்டருக்கு வயது ஐந்து. ஆழ்வான் "நெடுமாற்கடிமை" என்ற திருவாய்மொழிப் பதிகத்தை அநுஸந்தித்துக்கொண்டிருந்தார். "சிறுமாமனிசராய் என்னை ஆண்டார்" என்று அநுசந்தித்த போது, பட்டர் ஆழ்வானை நோக்கி, "ஐயா! ஒரு பொருள் சிறியதா யிருக்கலாம், அல்லது பெரியதா யிருக்கலாம் அப்படியிருக்க ஆழ்வார் ஒரே பொருளில் சிறுமையும் இருக்கிறது, பெருமையு மிருக்கிறதென்கிறரே! எப்படி?" என்று கேட்டார். ஆழ்வானும் அதிசயித்து, "நல்லாய்! உமக்கு இன்னும் உபநயனம் (பூணூல் தரித்தல்) ஆகாமையாலே சாஸ்த்ரங்களின் பொருள் கொண்டு



உமக்கு விளக்கக்கூடாது. ஆனால் ப்ரத்யக்ஷத்திலே காட்டுகிறேன். இதோ சிறியாச்சான் அருளாளப்பெருமாள் எம்பெருமானார். இவர்களெல்லாம் உடல் மெலிந்து

சிறுமையுடையராயும் ஞானம் பெருத்துப் பெருமை யுடையராயும் இருக்கிறார்களல்லவா? இப்படிப்பட்டவர் களைத் தான் ஆழ்வார் **சிறுமாமனிசர்** என்று அருளிச்செய் தார் என்று அருளினார்.

மற்றொருநாள் பட்டர் வீதியில் விளையாடிக்கொண் டிருந்தார். அப்போது "**ஸர்வஜ்ஞ பட்டர் வந்தார்**" என்று எக்காளம் ஊதிக்கொண்டு ஒரு வித்வான் வந்தான். பட்டர் இதைக் கேட்டார். "இது யாரடா? உடையவர், ஆழ்வான், முதலி ஆண்டான், அருளாளப்பெருமாளெம் பெருமானார், எம்பார் முதலான பெரியோர்கள் இருக் கிற இடத்திலே ஸர்வஜ்ஞ பட்டன் என்று விருது ஊதி வருவது" என்று எண்ணி வீதியிலுள்ள புழுதியை இரு கைகளாலும் அள்ளிக் கொண்டு, அவ் வித்வானிடம் சென்று, "நீர் ஸர்வஜ்ஞரன்றோ! இது எத்தனை சொல் லும்?" என்று புழுதியைக் காட்டினார். 'அவன் பிடிமண் என்றால் இது தெரியாதா? எண்ணிக்கை எத்தனை யென் றால் எப்படிச் சொல்வது" என்று சொல்லமாட்டாமல் வெட்கித் தலை குனிந்தான். உடனே பட்டர், "ஒரு பிடி மண் என்று சொல்லமாட்டிற்றிலையே! உனக்கு ஸர்வஜ்ஞ பட்டம் வேண்டுமோ?" என்றார். இதுகேட்டு அவ்வித் வான் இன்னாரென் றறிந்து, "பறப்பதின் குட்டி தவழு மா?" என்று சொல்லி பட்டரைத் தன் பல்லக்கிலேற்றி ஆழ்வான் திருமாளிகையில் விட்டுப் போனான். இஃ தறிந்த பொன்னாச்சியார் (பிள்ளையுறங்காவில்லி தாஸ ரின் பார்யை) கண்ணெச்சில் படுமே என்று த்வயாநுஸந் தானம் பண்ணி உள்ளே அழைத்துச் சென்றார்.

உபநயநம் (பூணூல் தரித்தல்) ஆன பின்பு, வேதம் ஓத விட்டார்கள். மறுநாள் சென்றவர், "முதல் ஓதின தையே ஓதுகிறார்கள்!" என்று ஓதாமல் திரும்பிவந்து விளையாடிக் கொண்டிருந்தார். "இதென்?" என்று ஆழ்வானும் ஆண்டாளும் கேட்க, பட்டர் விவரம் சொன் னார். அவ்வாறாகில் ஓதினதை ஓதிக்காட்டு என்றார்கள். ஸ்வரம் தப்பாமல் ஓதிக்காட்டினார் பட்டர். ஆழ்வானும் ஆண்டாளும் "இது இந்த வயதுக்குத் தகாது!" எனப் பயந்து இன்னும் சில நாள் கழித்து ஓதவிடுவோம் என்று நிறுத்தி வைத்துப் பிறகு ஓத விட்டார்கள்.

பட்டருக்கு எம்பார்தான் ஆசார்யர். அவரும் ஆழ்வானும் பட்டருக்கு எல்லா அர்த்த விசேஷங்களையும் உண்மைப் பொருள் நிலைகளையும் அறிவித்தார்கள். பட்டரும் அறிவுக் கூர்மையுடன் விளங்கினார்.

ஒரு சயயம் பட்டர் நம்பெருமாளைச் சேவிக்கச் சென்றபோது பெருமாள் திரைக்குள் இருந்தார். பட்டர் திரையை நீக்கி உள்ளே புகுந்தார். பெருமாள் கோபித்து வெளியே போகச் சொன்னார். பட்டரும் வெளியே வந்து விட்டார். பின்னர் பெருமாள் பட்டரை அழைத்தார். உள்ளே வந்த பட்டரைப் பெருமாள், "நாம் வெளியே போகச் சொன்னபோது நம்மை என்ன நினைத்தீர்? உள்ளே வரச் சொன்னபோது நம்மை எவ்வாறு நினைத்தீர்?" என்ன, "வெளியே போகச் சொனனபோது பெருமாளும் நாச்சியாருமாக நினைத்தேன்; உள்ளே வரச் சொன்னபோது ஆழ்வானும் (தகப்பனார்) ஆண்டாளுமாக (தாயார்) நினைத்தேன்" எனப் பதில் கூறினார் பட்டர். உடனே பெருமாள், "நம் ஆணை! நம்மை ஆழ்வானும் ஆண்டாளுமாகவே நினைத்திரும்" என அருளினான். இதனால் நம்பெருமாள் தன்னுடைய புத்ர வாத்ஸல்யத்தை வெளியிட்டான்.

பட்டருக்குக் கல்யாண வயது வந்தது. ஆழ்வானுக்குத் தம் உறவினர்கள் விலக்ஷணமாயில்லாமையால் அங்கிருந்து பெண் கொள்ள விரும்பவில்லை. உடையவரோடு ஆலோசித்துப் பெரியநம்பிகள் வம்சத்தில் பெண்கொள்ள இணங்கினார். ஆனால், புது ஸம்பந்தம் என்று பெண்வீட்டார் தயங்கினர். ஆழ்வான், "ஈசுவர குடும்பத்துக்கு நாம் கவலுவதேன்?" என்று ஆண்டாளுக்குக் கூறினர். ஒருநாள் பெருமாளிடம், "பிள்ளைகள் மூத்தார்கள்; விவாகம் செய்யவேணும்" என்று உறவின் முறையைக் கூறுகிறார்கள் என்றார். "நாமே செய்கிறோம்" என்ற பெருமாள், முன் பெண் கொடுக்கத் தயங்கியவர் கனவிலே கொடுக்கும்படி நியமித்தார். அவர்களும் மேல் விழுந்து வந்து **அக்கச்சி** என்ற பெண்ணைப் பட்டருக்கு விவாகம் செய்துவைத்தனர். பட்டரும் தம் திருத்தம்பியாரான சீராமப பிள்ளையுடனும் பெரியார்க் காட்பட்டு வாழ்ந்து வந்தனர்.

## பிள்ளையுறங்காவில்லி தாஸர்

இவர் உறையூரில் சோழ ராஜாவிடம் மெய்காப்பாள ராக இருந்தார். அவருக்குப் **பொன்னுச்சியார்** என்ற மனைவி மிகவும் கண்ணழகு படைத்தவளாக இருந்தாள். கண்ணழகில் ஆழ்ந்த பிள்ளையுறங்காவில்லி தாஸர் அவளைப் பிரிய மனமில்லாமல் ஊழியத்துக்குப் போகும் போதும் உடன் அழைத்துச் செலவது வழக்கம். ஒரு சமயம் எம்பெருமானார் காவேரியில் நண்பகலில் சீடர் களுடன் இருக்கும்போது அக்கடும் வெயிலில் தாஸர் தம் மனைவிக்கு வெயிலால் தாபம் உண்டாகாமலிருக்குமாறு குடை பிடித்தும் நடைபாவாடை இட்டும் அழைத்து வந் தார். இந்நிலையைக் கண்ட எம்பெருமானார், "இப்படி யொரு பெண்பித்தனா?'' எனக் கூறித் தம் சீடரிடம் அவரை அழைத்துவரச்சொன்னார். வந்தடைந்த அவரைப் பார்த்து எமபெருமானார், 'இதென்ன நீர் செய்வது!' என்று கேட்க, அவரும் 'இவள் கண்ணழகில் ஈடுபட்டுச் செய்கிறேன்' என்று பதில் கூறினார். ஸ்வாமி, "இது அழிந்தோடுமன்றே! அழியாத கண்ணழகைக் கண்டால என செய்வீர்?'' என்ன, 'அதற்கு அடிமைப்படுவேன்' என்று தாஸர் பதில் சொன்னார். அவரை ஸ்வாமி அழைத் துர் போய் பெரியபெருமாளைச் சேவிக்கப் பண்ணினார். பெருமாளும் தம்முடைய செவ்வரியோடி நீண்டு பரந்த அப் பெரியவாய கண்களின் அழகைக் காட்டியருளப் பிள்ளையுறங்காவில்லி தாஸரும் அவ்வழகில் ஆழ்ந்து அழ கிய மணவாளரைப் பிரியாதவராகி, எம்பெருமானாரின் திருவடிகளை யடைந்து சீடராகி, ஆசார்யரையும் பிரியாத வராகி வாழ்ந்து வந்தார். ஸ்வாமி அவரைப் பூரண மாகக் கடாக்ஷித்தார். அதனால் அவருக்கு ஞான பக்தி வைராக்யங்கள் வளர்ந்தன.

எம்பெருமானார் பங்குனியன்று ப்ரும்மோத்ஸவத் தீர்த்தவாரியன்று நீராடப்போம்போது முதலியாண்டான் கரம் பற்றி யெழுந்தருளி, நீராடி மீளும்போது பிள்ளை யுறங்காவில்லி தாஸரின் திருக்கரம் பற்றி யெழுந்தருள் வர். இது வர்ணாச்ரம தர்மத்துக்கு அதாவது ப்ராம்ம ணன் சூத்ரரைத் தொடல் கூடாது என்ற முறைக்கு விருத்தமாக இருந்ததால் மற்றவர்கள் ஸ்வாமியைக் கார ணம் கேட்டனர். அதற்கு, "எத்தனை தான் ஞானம்

பெறறேனுயினும, உயாகுலததில பிறநதோம என்ற என்ணம ஓஙகி நின்று ஆணவங காட்டி, அடியாாககு அடியோம எனற நைச்யம (தாழநத நிலை) பெறமுடியாமற செயது விடுகிறது, அநதப பிறவியால உணடான அஹங்காரததை, அஹஙகாரம சிறிதும எவவாறறுனும கலசாத நிலையையுடைய இவரைத திணடிக காயசுததி செயதுகொளளகிறேன்' என்று ஸவாமி பதில கூறினா

ஸவாமி தாஸாிடம மிகவும பரிவு கொணடு பழகுவதை மறறவாகள குறைவாக எணணினா மேலும அவவடியாரை அலக்ஷியமாகக கருதினா அதனுல ஸவாமி அவவிலலி தாஸரின உணமை நிலையை உணாததவேணடுமென்று கருதி ஒரு நாடகம நடததினா தமககு அநதரஙகமான ஒருவரைக கொணடு அமமடததில உடனிருபபவாகளின வஸதிரஙகளில ஒரு சாண அகலத துணியைக கிழிததுவிடச செய்தாா விடிநததும அவரவாகள தமதம வேஷடி கிழிநதிருபபதைப பாாததுக கோபததால தகாதன பேசினா. ஸவாமி, "மடததில எலலோரும நமமவாகளதாமே! யாரோ அறிநதோ அறியாமலோ செயததைப பொறுககலாமே" எனனவும அவாகள பொறுததிலா

மூனறு நாளகள கழிநத பின சிலா பிளளையுறஙகாவிலலி தாஸரும பொனனுசசியாரும பிணஙகியிருககின்றனா என்று ஸவாமியிடம விணணபபிததனா ஸவாமி விலலிதாசரிடம காரணம கேடடனா அதறகுத தாஸா, "மூனறு நாளகளுககு முன நாசசியாா ஒரு பகக ஆபரணஙகளோடு நின்றுள காரணம கேடடேன. உறஙகிக கொணடிருககுமபோது யாரோ சில ஸ்ரீவைஷணவாகள உளளே வநது பொனனுசசியாரின காதணி, கையணிகளைக கழறறினராம வைஷணவாகள கழறறுகிறாாக ளென்று உணாநது, மறு பாதியும கழறறிக கொளளட்டும என்று மறுபுறம புரணடு படுததாளாம இதைக கணடவாகள விழிததுக்கொணடாள என்று எணணி ஒரு பாதிஆபரணஙகளை விடடுவிடடுபபோயவிடடாாகளாம! இவளுககென்ன சுதநதிரம! பரதநதரையாக இருநதிருநதால மறறவைகளையும அவவைஷணவாகள கொணடு போயிருபபாாகளலலவா? அவாகளுககு என்ன கஷடமோ? அவாகளுககு உதவாதவாறு தன சுதநதிரததால செயது

விடடாளே! இபபடி சுதநதிரையாயிருககும இவள முகத
தில விழிககவும விருமபவிலலை' எனறு பதில கூறினா.

இதைக கேடடு ஸவாமி பறறவாகளைப பாாதது,
"கேடடீரே! மறு பாதி நகைகளையும கொடுககவேணடு
மெனறே மனைவி நினைககிறுள சுதநதிரததா லலலவா
மறுபாதி நகைகளை அவாகள கொளளாமல போயவிட
டாாகள எனறு கணவா கோபிககிறுா மேலும சுதநதிர
மானவள எனறும மனைவியைப பழிககிறுா இவாகளின
நிலை எஙகே! ஒரு சாண துணிக கிழிநததெனப பதறுகாக
படடதனதயே கலககிய உஙகள நிலை எஙகே!' எனறு கூற
வும எனையோாகளெலலாம அவாதம ஞான வைராக
யஙகளுககு வியநதும தம நிலை கணடு வெடகியும போயி
னா பிறகு ஸவாமி இவை யாவும தாம நடததிய நாட
கமதான எனறு கூறிப பொனனாசசியாரின நகைகளைத
திருமபத தநது அவா தம குணபூாததிககு மிகவும
கொணடாடினா இவவிலலிதாஸரின மைததுனமாா
களும தஙகளுடைய ஊதியததை அபபடியே எமபெருமா
னிடம கொடுதது மடததுக கைஙகாயஙகளுககெலலாம
இடையறுது உதவி ஸவாமியின திருவுளளததுககுப
பாஙகாயிருநதனா

பினனையுறஙகாவிலலி தாஸா ஆசாாயன காடடிய
அழகிய மணவாளனை திறதது அனபுகொணடு அவனுககு
ஏதேனும நேரின (ஒரு திருவாபரணம அசைநது அவன
திருமேனிககு நோவு தநதால) தனனையே முடிததுக
கொளவதெனற உறுதியுடன உறுவிய வாளைக கையி
லேநதிப பெருமாள புறபபடுமபோதெலலாம உடன
செலவா இவாதம பெருமைகள பலபபல

இவர் திருநாடடலஙகரிததபோது (இறநதபோது) அவ
ருடைய இறுதியான அததிருமேனிககு (சரீரததுககு)
ஸ்ரீசூாணபரிபாலனம முதலான சடஙகுகளுககுப பொன
னாசசியாா கணணீா உகுககாமல உடனிருநது ஆறறி,
அநதப திருமேனியைப பீடயானததில எழுநதருளவிதது
கொணடு போகையில அது தன பாாவையிலிருநது மறை
யுநதனையு மிருநது, மறைநததும தன உடலைவிடடு உயிா
பிரியப பெறறுள. இநத ஆசசாாயததை யறிநது முதலிகள
இரணடு திருமேனிகளையும ஒனறுகத தகனம செயதனர்.

இப்படி எல்லாப்படியாலும் அவர்கள் பெருமை பெற்று விளங்கினர்.

## பெரியநம்பிகளின் த்யாக உள்ளம்

பெரியநம்பிகள் தம் ஆசார்யரான ஆளவந்தாரின் மற்றொரு சீடராய்த் தாழ்குலத்தவராயுள்ள மாறனேரி நம்பிக்கு அவருடைய ஆசார்ய ப்ரஸாதமான ராஜ பிளவை என்கிற புண்ணைக் கழுவி மருந்திட்டு உணவும் அளித்து வருவது வழக்கம். அதனால் அவர் மற்ற ப்ராம் மணர்களின் நிந்தையையும் பொருட்படுத்தவில்லை. மாற னேரி நம்பியும் பெரியநம்பிகளிடம், "ஆசார்யரின் அபி மானத்தைப் பெற்ற இந்த சரீரத்தை ஸம்ஸாரிகளிடம் (தேகமே ஆத்மா வெனத் திரியும் தன் பந்துக்களிடம்) காட்டிக் கொடுக்கவேண்டாமெனக் கூறி ஆளவந்தாரை த்யானித்துக்கொண்டு திருநாடலங்கரித்தார். அவருக்குப் பெரியநம்பிகள் ப்ரஹ்ம ஞானத்தாலே சிறந்துள்ள அந்த ணர்க் குரியதான **ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரம்** என்ற சிறந்த நிலையால் பள்ளிபடுத்தினர். இதற்கு "வர்ணாச்ரம தர்மத்தின் வரம்பை மீறி இப்படிச் செய்யலாமோ?" என்று எம்பெருமானார் பெரியநம்பிகளைக் கேட்டார். அதற்குப் பெரியநம்பிகள், சாமான்ய தர்மத்தை நிலை நாட்டுகிற சக்ரவர்த்தித் திருமகனார். பக்ஷிஜாதியரான பெரிய திருவுடையாருக்கு (ஜடாயுவுக்கு) இந்த ஸம்ஸ் காரத்தைச் செய்தாரே! அவரிலும் நான் பெரியனோ? பெரியவுடையாரிலும் இவர் சிறியவரோ? இது கிடக்க, சாமான்ய தர்மத்தைக் கொண்ட யுதிஷ்டிரன் ஸ்ரீவிதுர ருக்கு இதைச் செய்யவில்லையா? நான் என்ன தர்மபுத்தி ரனைக் காட்டிலும் பெரியனோ! இவர் ஸ்ரீவிதுரரைக் காட் டிலும் தண்ணியரோ! (தாழ்ந்தவரோ) சரி, இதுவுமிருக் கட்டும். ஆழ்வார், 'பயிலுஞ் சுடரொளி' என்ற பதிகத் திலும், 'நெடுமாற்கடிமை' என்ற பதிகத்திலும் பாகவதர் களின் சிறப்பைக் கூறி, "எம்மையாளும் பரமர் என்றும் எந் தொழுகுலந் தாங்களே என்றும் கூறினவை யெல்லாம் வெற்று வார்த்தைகளேயோ! அவை அநுஷ்டிக்கத் தக்க வையேயன்றோ?" என்று கூறி பாகவதோத்தமர்கள் எவ் வாற்றானும் சிறப்பிக்க வேண்டியவரே என்பதை நிலை நிறுத்தினர். இவை யாவும் செவியேற்ற உடையவர் நம் சந்தோஷமடைந்தார். இங்கு எம்பெருமானாரின் கேள்வி

தாம் அறிந்ததேயாயினும், பெரியோர் மூலமாக உணர—உணர்த்தவேண்டும்'' என்பதைக் காட்டுகிறது.

மேலும் பெரியநம்பிகள் உடையவரிடம், ''மாறனேரி நம்பி திருமேனியை விடும்போது, ''பெரியபெருமாள் திருவடிகளே சரணம் என்றோ, ஆளவந்தார் திருவடிகளே சரணம் என்றோ சொல்லுதல் கேட்டிலோமே!'' என்றார். உடையவர், மனம் ஸ்திரமாயும், சரீரத்தில் வாத பித்த ச்லேஷ்ம தாதுக்கள் சமநிலையில் இருக்கப் பெற்றுமிருக்கும்போது எந்தச் சேதனன் உலகமயனும் பிறப்பிலியாயிருக்கும் என்னை நினைக்கிறானோ, அவனை—என் பக்தனை, கட்டையைப் போலும் கல்லைப் போலும் நினைவிழந்த நிலையில் இறந்து போம்போது நான் நினைத்திருந்து என் பெரிய வீட்டுக்குக் கொண்டு செல்வேன்'' என்ற வராஹ சரம ச்லோகங்களை நினைத்திருக்கலா மென்ன, ''அது (பார்வண்ணமட) மங்கைப் பித்தன் வார்த்தை யல்லவா?'' என்று நம்பி பதில் கூற, ''ஸ்ரீமந் நாராயணன் ஸ்ரீய:பதி என்று பிராட்டியினுடைய பிரியாத நிலையன்றோ வேண்டுவது என்று உடையவர் கூறினார். இதனால் அந்திமகால ஸ்மரணை ஸ்ரீவைஷ்ணவனுக்கு அபேக்ஷையில்லை என்பதை வெளியிட்டாராயிற்று.

## உடையவரின் காரேய் கருணை

ஒருநாள் ஓர் ஊமையை அழைத்துக்கொண்டு எம்பெருமானார் மடத்தினுள்ளே சென்று கதவைத் தாளிட்டார். அந்த ஊமை விலக்ஷணமான நிலையிலிருந்தும் அறிவுக்குத் தகுதி யற்றிருந்தார். அதனால் ஊமைக்குத் தம் திருவடிகளைத் தொட்டுக் காட்டி, ''இதையே தஞ்சமாக எண்ணிக்கொண்டிரும்'' என்று ஜாடையினாலே உணர்த்தினார். அவ்வூமையும் அதை யுணர்ந்து விழுந்து வணங்கி முகம் மலர்ந்தான். இந்த நிகழ்ச்சியை ஆழ்வான் கதவின் இடுக்கு வழியால் கண்டு, ''ஐயோ! நாம் சாஸ்த்ரங்களையெல்லாம் அறிந்ததனாலல்லவா இப்பெருங் கருணை (நிர்ஹேதுக க்ருபை—வெறிதே யருள்) நமக்குக்கிட்டவில்லை; ஊமையாய்ப் பிறந்திலோமே!'' எனப் புழுங்கினார்.

திருக்கோட்டியூர் நம்பி மேல்தளத்தில் தனியே த்யானம் செய்து கொண்டிருந்தார். அதுகண்டு உடையவர்

""த்யானத்துக்கு விஷயம் (உரு) என்ன? மந்திரம் எது?'' என்று கேட்டார். நம்பிகள், ''ஆசார்யரான ஆளவந்தார் ஸ்நானம் செய்யும்போது குனிந்த நிலையில் தெரியும் அவரின் முதுகுதான் என் த்யானத்துக்கு விஷயம்; மந்த்ரம் அவருடைய திருநாமமாகிற 'யமுனைத்துறைவர்' என்பதே'' என்று கூறி, ஸ்ரீவைஷ்ணவனுக்கு ஆசார்யனுடையதிருமேனியே ஸதா த்யானிக்கத்தகுவது என்றும், அவன் திருநாமமே ஸதா ஜபிக்க(உருப்போட)த் தகுவது என்றும் உணர்த்தினர்.

## உடையவர் மேனாட்டுப் பயணம்

எம்பெருமானார் முன்னுள்ளார், பின்னுள்ளாரான ஸ்ரீவைஷ்ணவத் திரளோடு வாழ்ந்தருளுங் காலத்திலே அந்த தேசத்துக்கு அதிபதியான சோழ அரசன் சைவ சமயத்தில் ஊற்றங் கொண்டு, ''சிவனைக் காட்டிலும் மேலான தெய்வமில்லை' (சிவாத் பரதரம் நாஸ்தி) என்று ஓலையில் எழுதி அதில் எல்லா வித்வான்களையும் நிர்பந்தம் பண்ணியும் வேண்டுவன தந்தும் பயமுறுத்தியும் கையொப்பமிடச் செய்து நல்லோர்களை நலிந்து வந்தான். இதுகண்ட நாலூரான் என்பவர் அரசனுக்கு, ''விஷ்ணுவே பரன்'' என்று உணர்த்த வெண்ணி அரசனின் ஆணவத்தின் விளைவைச் சிறிதும் உணராமல் அரசனிடம், ''இவர்கள் கையெழுத்திட்டதால் பயன் என்? ராமாநுஜர் இட்டாலன்றோ சம்மதமாகும்'' என்று கூறினர். உடனே அரசன் ராமாநுஜரை அழைத்து வரும்படி ஆளனுப்பினன். ஆள் வரும்போது பாஷ்யகாரர் நீராடிக்கொண்டிருந்தார். ராஜமனுஷ்யன் வந்ததை யறிந்த கூரத்தாழ்வான் எம்பெருமானருக்கு ஏதும் தீங்கு நேரக்கூடாது என்று எம்பெருமானாரின் காஷாய த்ரிதண்டங்களைத் தரித்துக்கொண்டு அம்மனுஷ்யருடனே புறப்பட்டார். இதை யுணர்ந்த பெரியநம்பிகளும் ஆழ்வானுக் கென் வருமோ என்று துணையாகத் தம் மகளான அத்துழாயுடன் புறப்பட்டார்.

உடையவர் நீராட்டம் முடிந்ததும் காஷாயம் முதலியவற்றைத் தருமாறு கேட்டார். அங்கிருந்தவர்கள் ராஜ மனுஷ்யன் வந்து நடந்தவற்றை யெல்லாம் விவரமாக ஸ்வாமிக்குக் கூறினர். 'அப்படியா!' என்று ஆழ்வானுடைய வெள்ளை வஸ்த்ரத்தை உடுத்திக்கொண்டார்.

ஐயோ! ஆழ்வானுக்கும் பெரியநம்பிகளுக்கும் என்ன நேரிடுமோ என்று வேதனைப்பட்டார். பெரியோர்களும் முதலியாண்டான் முதலானோரும், "ஸ்வாமி! தேவரீர் இங்கிருக்கவொண்ணாது; விரைவாக இத்தேசத்தைவிட்டு நீங்கவேண்டும்" என்று வற்புறுத்தினர். எம்பெருமானாரும் முதலியாண்டான் முதலானவர்களுடன் ஸ்ரீரங்கத்தை விட்டு மேல்திசை நாட்டுக்கு எழுந்தருளினார்.

## ஆழ்வான், பெரியநம்பிகளின் த்யாகம்

கூரத்தாழ்வானும் பெரியநம்பிகளும் ராஜ சபையை அடைந்ததும் அரசன், "சிவாத் பரதரம் நாஸ்தி" என்ற ஓலையில் கையெழுத்திடச் சொன்னான். "ஒருவன் உலகளந்தான்; அவன் திருவடிகளை ஒருவன் கழுவினான்; அந்தத் தீர்த்தத்தை மற்றொருவன் (சிவன்) தன் தலையில் தாங்கிப் புனிதனானான். இதனால் யார் சிறந்தவனென்பதை நீயே உணர்ந்து பார்!" என்று பலபடியாக ஸ்ரீமந் நாராயணனே பரன் என்று அறுதியிட்டார் ஆழ்வான்.

"நீர் வித்வான்; பலபடிப் பேசவல்லவர். இதில் நீர் கையெழுத்திடும்" என்று அரசன் ஆணையுடன் நிர்பந்திக்க, ஆழ்வான் "த்ரோண மஸ்தி ததபரம்" அதைக் காட்டிலும், அதாவது சிவம் என்ற குருணியைக் காட்டிலும், பரம் (தத: = பெரியதாய், த்ரோண மஸ்தி = பதக்கு இருக்கிறது) என்று கையெழுத்திட்டார். அரசன் இந்த நையாண்டியை உணர்ந்து கோபங் கொண்டான். பெரிய நம்பியும் மறுக்கவே, இரண்டு பேர்களுடைய கண்களையும் பிடுங்கும்படி தன் ஆட்களைப் பணித்தான். உடனே ஆழ்வான் துஷ்டனான உன்னைக் கண்ட கண்கள் எனக்கு உதவாது என்று கூறித் தம் நகங்களாலேயே தம் கண்களைப் பிடுங்கி அவன் மேல் வீசினார். பெரியநம்பிகளின் கண்கள் பிடுங்கப்பட்டன. நம் தரிசனத்துக்காக (சமயத்துக்காக)த் தரிசனம் (கண்) தந்தார் ஆழ்வான்.

இருவரும் ராஜ சபையினின்றும் வெளியேறினர். வழியில் பெரியநம்பிகள் வலி தாங்காமையால் அந்திம காலத்தை யணுகினார். அதனால் விரைவில் ஸ்ரீரங்கத்தை யடைவோம் என்று ஆழ்வானும் அத்துழாயும் கூறினர். அது கேட்டுப் பெரியநம்பிகள், "அது வேண்டாம்; அப்படிச் செய்வோமானால், பெரியநம்பிகள் திருமேனியை விடு

வதற்கு ஸ்ரீரங்கம் போயினர்; அதனால் நாமும் திவ்ய தேசத்திலேதான் சரீரம் விடவேண்டுமென்று எலலோரும் எண்ணுவர். முதலிலே ஆசார்யனாலே அங்கீகரிக்கப்பட்ட வனுக்குப் பரமபதம் நிச்சயமாகையாலே அந்த தேச நியமம் வேண்டுவதில்லை'' என்று கூறி ஆளவந்தாரை த்யானித்துக்கொண்டு ஆழ்வான் மடியிலே திருமுடியும் அத்துழாய் மடியிலே திருவடியுமாகப் பரமபத மடைந்தார். இதனால் ப்ரபந்நனுக்கு (பகவானே பேற்றுக்கு உபாயம் என்று பகவானைத் தஞ்சமாகப் பற்றினவனுக்கு) இறுதிக் காலத்தில் இன்ன தேசத்தில்தான் தேகத்தை விடவேண்டுமென்கிற கட்டுப்பாடில்லை என்பதை நிலைநாட்டினாராயிற்று.

ராமாநுஜரை அழைத்து வரும்படி மீண்டும் ராஜா சில ஆட்களை ஏவினான். அவர்கள் மேனாடு நோக்கிப் புறப்பட்ட எம்பெருமானாரைப் பின்தொடர்ந்தனர். இவர்கள் பின் தொடர்வதை யுணர்ந்த முதலிகள் (பெரியோர்கள்) உடையவரிடம் 'ராஜ மநுஷ்யர்கள் வேகமாக வருகிறார்கள்; நாமும் வேகமாகப் போகவேண்டுமே' என்ன, உடையவர் மணலை அள்ளி, "கொடுமை செய்யும் கூற்றமும் என் கோலாடி குறுகப்பெறா, தடவரைத் தோள் சக்கரபாணி! சார்ங்கவிற் சேவகனே! என்று இதைச் சொல்லி முதலிகளிடம் கொடுத்து ராஜ மனிதர்கள் வரும் வழியில் இதைத் தெளித்து வாருங்கோள்'' என்றார். அவர்களும் அப்படியே செய்தனர். அது அந்த ராஜமனிதர்களை அனல் போல் கொளுத்தி மேல்நடக்கமுடியாமல் செய்யவே அவர்கள், 'போகும் பார்ப்பனர் மந்த்ரம் பண்ணிப் போனார்கள்!' என்று சொல்லிக்கொண்டு திரும்பிப் போயினர். உடையவரும் பயணம் தொடர்ந்தார்.

ஒரு மலையடிவாரம். அங்கே திருமலைநல்லான் என்கிற ஸ்ரீவைஷ்ணவரின் சீடர்களாகிய வேடுவர்கள் நிலத்தை உழுது கொண்டிருந்தனர். அப்போது ஒரு ஸ்ரீவைஷ்ணவர் அங்கே வந்தார். அவரைக் கண்டதும் நிலம் உழுபவர்கள் 'ஸ்ரீரங்கத்தில் எம்பெருமானார் சுகந்தானே!' என்று கேட்டனர். அந்த ஸ்ரீவைஷ்ணவரும் உடையவருக்கு நிகழ்ந்ததைக் கூறி, 'அவர் எங்குச் சென்றாரென்று தெரியவில்லை; தேடி வந்தேன்' என்றார். இதைக் கேட்டு அவர்கள் உழுவதை விட்டு 'கோ' வென்று கதறினர். அன்று முதல் ஆறு நாள்கள் பட்டினியே கிடந்தனர். ஆறும் நாள் இரவு

மழையில் நனைந்து கொண்டு எம்பெருமானார் வழி திகைத்து விளக்கொளியையே குறியாகக் கொண்டு தம்மைச் சார்ந்தாரோடு அங்கே வந்தார். அவர்களின் குரல் கேட்டு அந்நிலம் பாவுவார், 'இதோ ப்ராம்மணக் குரலாயிருக்கிறது'எனச் சடக்கென வெளிவந்து படலைத் திறந்து அவர்களை உள்ளே அழைத்துச் சென்று ஈரம் போக்கி மாற்றுடை தந்து ஆதரித்து அமர்த்தினர். "நீங்கள் எவ்விடத்தீர்?" என்று கேட்க, 'ஸ்ரீரங்கத்தினின்றும் வருகிறோம்' என்று பதில் கூறினர். 'ஆயின், எம்பெருமானார் செய்கிறது என்ன?' என்று அவர்கள் கேட்க, 'உங்களுக்கு எம்பெருமானாரை எப்படித் தெரியும்?' என்று கேட்டனர் அதற்கு அவர்கள் "நாங்கள் நல்லானடியார்கள்; அவர் 'நமக்கெல்லாம் பரமாசார்யர் எம்பெருமானாரே'.அதனால் நீங்களும் எம்பெருமானார் திருவடிகளையே தஞ்சம் என்றிருங்கள் என்று ஹிதம் சொன்னார்; அதனால் நாங்களும் அப்படியிருக்கிறோம்" என்று பதில் கூறினர். 'ஆகில் இவரே எம்பெருமானார்' என்று ஸ்வாமியைக் காட்டித் தந்தனர். உடனே அந்நிலம் பாவுவார் ஸ்வாமி திருவடிகளைப் பிடித்துக்கொண்டு கதறி வணங்கியெழுந்து ஸ்வாமி முதலானார்க்குத் தினைக்கதிரை வறுத்து மாவாக்கி அதில் தேன் கலந்துண்ணும்படி அவற்றைத் தந்து அமுது செய்யும்படி செய்து உறங்கச் செய்தனர்.

மறுநாள் காலை எம்பெருமானார் வேடர்களில் ஒருவரைத் துணை சேர்த்து ஸ்ரீரங்கத்தில் நடப்பதை அறிந்து வரும்படி ஒரு ஸ்ரீவைஷ்ணவரை ஸ்ரீரங்கத்துக்கு அனுப்பி வைத்தார். பிறகு, அந்த நல்லானடிமைகள் எம்பெருமானாரையும் அவரைச் சேர்ந்த நாற்பத்தைந்து பேர்களையும் அழைத்துக்கொண்டு ஆறு காத தூரம் நடந்து மற்றொரு வேடர் தலைவனிடம் ஒப்படைத்தனர். அவ்வேடர் தலைவன் அவர்களுக்கு அருகிலுள்ள ஒரு ப்ராம்மணர் வீட்டில் வேண்டிய உணவுப் பொருள்களைக் கொடுத்துச் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்தான்.

## கொங்கில் பிராட்டியின் பாகவதாபிமானம்

அந்த வீட்டு ப்ராம்மணியும் அப்பெரியார்களுக்குத் தண்டன் சமர்ப்பித்து, "உங்களுக்கு அமுது படைக்க வேண்டாமா?' என்று கேட்டாள். அவர்கள் "வேண்டாம்' என்றனர். அவளும் 'நீங்கள் சந்தேகப்படவேண்டாம்;

நானும் எம்பெருமானார் சம்பந்தமுடையேன்; நானும் என் கணவரும் இங்கு மழை யில்லாமையால் ஸ்ரீரங்கம் போயிருந்தோம். அப்போது எம்பெருமானார் மாதுகரத்துக்கு எழுந்தருளும்போது அரசர்களும் தனிகர்களும் அவர் திருவடிகளில் தண்டனிடுவார்கள். "தேவரீர் மாதுகரம் பெறுகிறீர்; அரசர்கள் அடி பணிகிறார்கள்; இதற்குக் காரணம் என்ன?" என்று வினவினேன். அதற்கு ஸ்வாமி, "இவர்களுக்கு நான் சில ஹிதவார்த்தைகள் சொல்வேன்: அதுதான் காரணம்" என்றார். அடியேனும் "அடியேனுக்கும் ஹிதமருளவேணும்" என்று ப்ரார்த்தித்தேன். ஸ்வாமியும் ஹிதமருளினர். சில நாள்களில் இவ்விடம் மழை பெய்து வளமானதை யறிந்து இவ்விடத்துக்குப் புறப்படும்போது மறுபடியும் அவ்வீதி வழியே ஸ்வாமி எழுந்தருளியபோது "தேவரீர் அருளிய நல்வார்த்தைகளை மறந்தேன்; மறுபடியும் அருளிச் செய்ய வேணும்" என்று வேண்டியபோது மறுபடியும் த்வயார்த்தத்தை உபதேசித்தார். மேலும் அவருடைய திருவடி நிலைகளை வேண்டிப் பெற்று அதையே ஆராதனமாகக் கொண்டுள்ளேன்" என்றனள். முதலிகள், "எம்பெருமானாரை அறிந்தீரானால் இங்கே அவரைக் காட்டும்?" என்ன, அவளும் ஸ்வாமியின் திருவடிகளைக் கண்டு "இவை ஸ்வாமி திருவடிகளா யிருந்தன; ஆயின் காஷாயாதிக ளில்லையே" என்றபோது நிகழ்ந்தவற்றைச் சொல்லினர். அது கேட்டு மிகவும் துக்கித்தாள். எம்பெருமானாரும், 'நான் சொல்லிய நல்வார்த்தையை என் காதில் சொல்லிக் காணாய்' என்ன, அவளும் அவ்வாறே சொல்ல, ஸ்வாமியும் 'ஒக்கும்' என்றனர். பிறகு அத்திருவடி நிலைகளை ஸ்வாமி திருவடிகளில் சேர்த்து ஒத்திருக்குமது கண்டு எல்லோரும் அவள்சொல்லியதை ஆமோதித்தனர். பிறகு ஸ்வாமியும் தளிகை செய்யச் சொல்லி, அதைக் கண்காணிக்கும்படி ஒரு ஸ்ரீவைஷ்ணவரை நியமித்தார்.

அவளும் தளிகை செய்து அத்திருவடி நிலைகளுக்கு அமுது செய்வித்தாள். இதைக் கண்ட வைஷ்ணவர் நிகழ்ந்ததை எம்பெருமானாரிடம் விண்ணப்பித்தனர். தம் திருவடி நிலைகளுக்கு அமுது கண்டருளப் பண்ணியதால் தாம் அமுது செய்யாமல் எம்பெருமானார் மற்றவர்களை அமுது செய்யப் பண்ணினார். அதனால் ஸ்வாமிக்குத் தேனும் தினைமாவும் தந்து அமுது செய்யப் பண்ணினள்.

பிறகு ஸ்ரீவைஷ்ணவர்கள் அமுது செய்த மீதத்தைத் தன் கணவனுக்குப் படைத்துத் தான் உண்ணாமல் படுத்தாள். கணவன் 'ஏன் உண்ணவில்லை?' என்று கேட்டான். "நீர் ஆசார்ய ஸம்பந்தம் பெறாமையால் ஸ்ரீவைஷ்ணவர்கள் நம் அகத்தில் உண்ணாமல் பட்டினி கிடக்க நான் உண்ணவோ?'' என்று அவள் பதில் சொன்னதும், "அப்படியே ஆசார்யனை அடைகிறேன்' என்று உண்மை கூறி அவளை உணவருந்தப் பண்ணினான். அவளும் களிப்புடன் உறங்கி எழுந்து ஆசார்யரான எம்பெருமானாரிடம் தன் கணவனைப் பஞ்ச ஸம்ஸ்காரம் முன்னாகச் சீடராக்கினாள். இவளையே சைலாசலாம்பாள் என்றும் கொங்கில்பிராட்டி என்றும் கூறுவர். எம்பெருமானாரும் அவருக்கு ஸ்ரீரங்க தாசர் என்ற நாமமிட்டு மிகவும் உகந்து அங்கேயே நாலைந்து நாள்கள் தங்கினார். அப்போது த்ரிதண்டக் காஷாயாதிகளை ஏற்பாடு செய்து அவைகளைத் தம் பெருமாளிடம் வைத்துச் சம்மதி பெற்றுத் தரித்துக்கொண்டார்.

## அத்வைதிகளின் அஹங்காரம் அழிந்து வழிபடுதல்

பிறகு அவர்களாலே வழி யனுப்பப்பட்டு மேற்கு நோக்கி எம்பெருமானார் பயணப்பட்டு வஹ்நிபுஷ்கரிணி என்னும் கிராமத்தை யடைந்து அங்கு மூன்று நாள்கள் தங்கிப் பின் மிதிலாபுரியில் சில நாள் தங்கி அதன் சமீபத்திலுள்ள சாரக்ராமம் என்னும் ஊரை அடைந்தார். அவ்வூரிலுள்ளார் அத்வைதிகளா யிருந்தமையால் ஸ்ரீவைஷ்ணவர்களான எம்பெருமானார் முதலானோரை ஸத்கரிக்கவில்லை. அவர்கள் அறியாமையை அறிந்த எம்பெருமானார் அவ்வூரார் குடிநீர் முகக்குந் துறையிலே தம் திருவடிகளை நனைத்துக் கொண்டிருக்கும்படி முதலியாண்டானைப் பணித்தார். அந்த ஸ்ரீபாத தீர்த்த மகிமையாலே அதை உபயோகித்த மற்றை நாள் பாலர் முதல் கிழவர் வரை எல்லாரும் அஹங்காரம் கழியப்பெற்று எம்பெருமானாரை வணங்கி அவரை அடைந்தார்கள். அது முதல் தான் அவ்வூர் சாளக்ராமம் என எம்பெருமானாரால் பெயரிடப்பெற்றது.

அப்போது ஆந்த்ரபூர்ணர் என்கிற வடுகநம்பி எம்பெருமானாரை அடைந்து பஞ்சஸம்ஸ்காரம் முன்னாக ஸகல அர்த்தங்களையும் உபதேசிக்கப்பெற்றுப் பேரறிஞ

ராகி ஆசார்யனே பரதெய்வம் என்று தெளிந்து ஸ்வாமிக்கு நிழலாக வாழ்ந்து வந்தார். ஸ்வாமி அவரையும் அழைத்துக்கொண்டு தம் சிஷ்யர்களுடன் நரசிப்பபுரம் எனனும் க்ஷேத்ரத்தை அடைந்து, விஷ்ணுவையும் அவனடியார்களான வைஷ்ணவர்களையும் வெறுத்து நலியும் குணமுடைய சைவனுன அந்த சோழன் அழிந்துபோமாறு அபிசாரம் செயதார்.

## விடலதேவராயன் எம்பெருமானுர் சீடராதல்

அங்கு நின்றும் தம் சீடரான தொண்டனூர் நம்பியை அபிமானிக்கத் தொண்டனூருக்கு ஸ்வாமி தம் பரிவாரத்துடன எழுந்தருளினுர். ஆசார்யரைக் கண்டதும் நிதி கண்ட வர் போலத் தொண்டனூர் நம்பி தொழுது ஆசி பெற்று அவர்களை அமுது செய்தருளும்படி செயதார். ஸ்வாமி அங்கு சில காலம் எழுந்தருளியிருந்தார்.

அந்நாட்டை ஆண்டு வந்த விடலதேவராயன் என்னும் அரசனுடைய பெண்ணைப் பிசாசு பிடித்திருந்தது. அப்பெண் நிர்வாணமாகத் திரியும் நிலைகண்டு அநத ராஜ பத்னி மிகவும் வருந்தி யிருந்தாள். அவ்வரசனுக்குக் குருவாக விளங்கியவர் முதற்கொண்டு யாராலும் அதை ஓட்ட முடியவில்லை. தொண்டனூர் நம்பி பிக்ஷைக்காக அரண்மனை சென்றபோது அரசியின் அவல நிலை யறிந்து தம் ஆசார்யரால் அது தீரும் என்றுர். இதற்கு முன அரசன் தம் வீட்டுக்கு விருந்துக்கு வரும்படி தம் குருவான பௌத்த குருவைக் கூப்பிட 'டில்லி அரசனுல் ஒரு விரல் துண்டிக்கப்பட்டு அங்க ஹீனனுகையால் வரமாட்டோம்" என குரு மறுத்து விட்டான். அதனுல் அக்குரு மீது வெறுப்பு ஏற்பட்டிருந்தது. அதனுல் அரசன் தன பெண்ணின் பிசாசைப் போக்கி விட்டால் அவரையே ஆசார்யராகக் கொள்வேன் என்று கூறி எம்பெருமானுரைத் தம் அரண்மனைக்கு வரும்படி ஆளனுப்பினுன். அரண்மனை செல்ல விரும்பா . எம்பெருமானுரைத் தொணடனூர் நம்பி முதலானேர் அரசனைச் சீடனுக்கிக் கொண்டால் நமக்குப் பல கார்யங்களைச் சாதித்துக் கொள்ளலாம் என று பலவாறு சொல்லி எம்பெருமானுரை இசைய வைத்தனர். எம்பெருமானுர் அரண்மனைக்குச் சென்றுர். ஸ்வாமியுடன் சென்றவர்கள் ஸ்வாமியின் ஸ்ரீபாத தீர்த்தத்தை (திருவடி விளக்கியது) அப்பெண்ணுக்கு உள்ளுக்

குக் கொடுத்துத் தலை மீதும் தெளித்தனர். உடனே அப் பெண் அப்பிசாசினால் விடுபட்டுத் தன் நிலை யடைந்து ஸ்வாமிக்குத் தண்டனிட்டாள். இதைக் கண்ட அரசனுள் ளிட்டார் பெரு வியப்படைந்தனர். பிறகு ஸ்வாமியிடம் அடிபணிந்து அவருக்குச் சீடர்களாயினர். அவ்வரசனுக்கு விஷ்ணுவர்த்தனராய னென்று பெயர் வழங்கினார்.

அரசன் வைணவனானமையை அறிந்த பௌத்தர்கள் ஸ்வாமியுடன் வாதத்துக்கு வந்தனர். ஆயிரக்கணக்கான வர்களாதலால் ஓரிடத்தில் திரையிட்டுத் தம் சுய உரு வான ஆதிசேஷனாகி ஆயிர நாவால் அவரவர்களுக்குப் பதில் வாதம் செய்து அத்தனை பேரையும் வென்று அவர் களையெல்லாம் தண்டனைக்குள்ளாக்கினர். இங்கு ஸ்வாமி தம் சுய ரூபத்தை வெளிப்படுத்தினாராயிற்று. ஸ்வாமி, தொண்டனூரில் தொண்டனூர் நம்பி அபிமானித்திருந்த பெருமாளுக்கு நம்பி தம்பிரான் என்று திருநாமம் சாத் திச் சேவித்து மகிழ்ந்து அங்கேயே சிலகாலம் கால க்ஷேபங்கள் செய்து கொண்டிருந்தார்.

## திருமண் பெறத் தீவிர முயற்சியும் திருநாராயணப் பெருமாள் தரிசனமும்

இச்சமயம் தம்மிடமிருந்த திருமண் தீர்ந்து போயிற்று. சுமங்கலிக்கு நெற்றியில் திலகம் போல ஸ்ரீவைஷ்ணவனுக் குத் திருமண் அவசியம். அதனால் அத்திருமண் கிடைக்கு மிடம் தெரியாது நெற்றி முதலான பன்னிரு இடங்களில் திருமண் இட்டுக்கொள்ள வழியில்லையே என்று வருந்தி கண் வளர்ந்தருளினார். திருநாராயணப் பெருமாள் (மேல் கோட்டைப் பெருமாள்) அவர் கனவில் ""பக்கத்திலுள்ள யதுகிரியில் நிறையத் திருமண் கிடக்கிறது; நாமும் உம் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்; உடனே புறப்பட்டு வாரீர்!'' என்று கூறினார். அதன்படி விடிந்த வாறே அக்கனவைக் கூறி எல்லோரும் மகிழ்ந்து விஷ்ணு வர்த்தனராயனைக் கொண்டு காடு திருத்திக்கொண்டு போய் பகுதான்ய வருஷம் தை மாதம் யதுகிரியின் மேல் ஏறி வேதபுஷ்கரிணியைக் கண்டு அதில் நீராடி அதன் கரையிலுள்ள, முன் தத்தாத்ரேயர் காஷாய மேற்ற— பெருமையுற்ற பெரிய உருவான 'பரிதான சிலை'யை வணங்கி மறுபடியும் அச்சிலையின் மீது வைத்தெடுத்துக்

காஷாயம் தரித்தருளிப் பெருமாளைத் தேடினார்; காண விலலை. நாம் என்ன அபசாரம் பண்ணினோமோ; பெரு மாள் நேரில் காட்சி தரவில்லையே' என வருந்திக் கண் அயர்ந்தார். பெருமாள் நேரில் காண்பதுபோலே கனவில் தோன்றி, "திருத்துழாய்க் கொழுந்து சிந்தியிருக்கும் அடையாளத்தைக் குறியாகக் கொண்டு வாரும்; அங்கே கல்யாண தீர்தத்துக்குத் தென் மேற்கில் ஒரு திருத் துழாய்ச் செடியின் கீழே புற்றுக்குள் இருக்கிறோம்; காண் பீராக! மேலும் அக்கல்யாண தீர்த்ததுக்கு வடமேற்கு மூலையில் ஸ்வேத த்வீபத்தினின்றும் பெரிய திருவடியால் (கருடனால்) கொணர்ந்து குறையாது சேமித்து வைததிருக் கும் திருமண்ணையும் கொண்டு பன்னிரு திருமண்ணையும் தரிப்பீராக" எனக் கூறி மறைய ஸ்வாமியும் அத்யாச்சர் யப்பட்டு எழுந்து அவ்வடையாளப்படியே சென்று அத் திருத்துழாய்ச் செடியைக் கண்டார்; வேர் மண்ணைக் கிளறியெடுத்தார். திருநாராயணன் அப்புற்றிலிருப்பதைக் கண்டு ஆநந்தபரவசராய் ஆடிப் பாடினார். எலலோரை யும் காணச் செய்தார். இது பகுதான்யவருஷ தைமீ சுக்ல சதுர்தசி புனர்வசு நக்ஷத்திரத்தன்று நிகழ்ந்தது. அப் பெருமாளை மேலே எழுநதருளச் செய்து ஸ்வாமி தம் திருக்கரங்களாலேயே பாலால் திருமஞ்சனம் செய்தருளி மூன்று நாள்கள் திருவாராதனம் செய்தருளினார்.

ஸ்வாமி பெருமாள் காட்டியபடி கல்யாணியின் மேற் குத் திசையில் திருமண் கண்டு பேரானந்தங் கொண்டு திருமண் சாத்திப் பெருமித மடைந்தார். பிறகு அவ் விஷ்ணுவர்தன ராஜாவைக் கொண்டு மலைமேல் நாடாக் கிப் பெருமாளுக்குப் பெருங்கோயில் செய்து பாஞ்சராத்ர முறைப்படி ஸம்ப்ரோக்ஷணாதிகளைச் செய்து, நித்ய திரு வாராதனம் நடைபெறும்படி செய்தார். அந்நகரத்துக் குத் திருநாராயணபுரம் எனப் பேரிட்டார். தாம் நம் மாழ்வாருக்கு 'மாறனடி பணிந்துய்ந்தவன்' என்னும் பேறு பெற்று இதத்தாயாக விளங்கினமை தோற்ற அத் திருநாராயணப் பெருமாளுக்கு ஆழ்வாரின் திருவாய் மொழியில் 'ஒரு நாயகமாய்' என்ற பதிகத்தைஆழ்வாரின் மங்களாசாசனமாக வழங்கினார்.

## உத்ஸவ மூர்த்தியைப் பெற டில்லி ப்ரயாணம்

பிறகு எம்பெருமானார் பெருமாளுக்கு ப்ரஹ்மோத்ஸவம் செய்யக் கருதினார். அதற்கு உத்ஸவமூர்த்தி வேண்டுமே; என் செய்வது என்று கலங்கியபோது அத்திருநாராயணன் முன்போல கனவில் ராமப்ரியர் என்ற உத்ஸவமூர்த்தி டில்லியில் பாதுஷாவிடமிருக்கிறதாகக் கூறினான். எம்பெருமானாரும் தம் சீடர் சிலருடன் டில்லி சென்றார். டில்லியரசன் ஸ்வாமியின் திவ்ய தேஜஸ்ஸால் கவரப்பட்டு அவரை எதிர்கொண்டு வரவேற்று வரவுக்குக் காரணம் கேட்டறிந்தான். பின் நாடெங்குமுள்ள சிலைகளைக் கொள்ளை கொண்டுவந்து அடைத்திருக்கும் அறைகளைத் திறந்து காட்டித் தங்கள் பெருமாளை எடுத்துக்கொள்ளச் சொன்னான். ஸ்வாமிக்குக் காட்சி தந்த பெருமாள் அங்குக் காணவில்லை. கலக்கத்தோடு அன்றிரவு உறங்கும்போது மறுபடியும் பெருமாள், பாதுஷாவின் பெண்ணின் அறையிலே அவளால் நேசிக்கப்பட்டு ராமப்ரியர் இருக்கிறார் என ஸ்வாமிக்குக் கூறினார். விடிந்ததும் எம்பெருமானார் இவ்விவரத்தை அரசனிடம் தெரிவிக்க, அவனும் ஆச்சர்யப்பட்டு அவ்வறையைக் கொண்டு காட்டினான். ஸ்வாமி அங்கு கனவில் கண்ட ராமப்ரியர் இருப்பதைக் கண்டு ஆநந்தப்பட்டு, "இவரே எங்கள் பெருமாள்!" என்றார். அரசன் "உங்கள் பெருமாள் என்றால் கூப்பிடுங்கள்! வரட்டும்!" என்றான். எம்பெருமானார், "கோவில் பிள்ளாய்! இங்கே போதராயே!" என்று அழைக்கவும் அப்பெருமாள் காலில் பாடகம் ஒலிக்க அர்ச்சா நிலையிலும் குதித்துக் குதித்து வந்து எம்பெருமானாரின் மடியின்மீது அமர்ந்து கொண்டான். ஸ்வாமிக்கு ஆநந்தக் கண்ணீர் சொரிந்தது. "என்னுடைய ஸம்பத் குமாரனே!" என்று அணைத்துக் கொண்டார். அரசனும் பெரு வியப்புடன் விடை கொடுத்து அப்பெருமாளோடு ஸ்வாமியை அனுப்பி வைத்தான்.

எம்பெருமானார் நெடுந்தூரம் வந்துவிட்டார். பின்னால் பாதுஷாவின் ஆட்கள் தேடிவரும் சங்கதி தெரிந்தது. பாதுஷாவின் மகள் தன் பெருமாளைக் காணாமல் கலங்கியழவே அரசன் அச்சிலையைத் திரும்பப் பெற்று வாருங்கள் என்று ஆட்களையனுப்பினான். எம்பெருமானார் மாறிமாறி

வழி நடந்து யாதவாத்ரிக்கு அருகில் வரும்போது அரசனுடைய ஆட்கள் மிக நெருங்கி விட்டதை யறிந்து வேறு வழியின்றி அருகிலிருந்த சேரியில் நுழைந்தார். அரசனின் ஆட்கள் ப்ராமமணர்கள் சேரியில் நுழையமாட்டார்கள் என எண்ணி நேரே நெடுந்தூரம் போய்ப் பார்த்துக்கிடைக்காமையால் திரும்பிவிட்டனர். பின்னர் எம்பெருமானார் சேரியினின்றும புறப்படும்போது அங்குள்ளார் அந்தப் பெருமாளை நாங்கள் சேவிக்கவேணும்; அதற்கு வழி சொல்லுமாறு கேட்டனர். ஸ்வாமியும் அவர்கள் அநுகூலம் செய்தமைக்காக ப்ரம்மோத்ஸவத்தில் 'மூன்று நாள்கள்' அவர்கள் கோயிலுக்குள் சென்று பெருமாளைச் சேவிக்க அநுமதி தந்தார். பிறகு பெருமாளைத் திருநாராயணபுரத்தில் தக்கவாறு பிரதிஷ்டை செய்து, ஆராதனைக்குத் தக்கவாறு ஐம்பத்திருவரை அங்குக் குடியேற்றி அவரவர்களுக்குத் தகக கார்யங்களை நியமித்து நித்ய பக்ஷ மாஸ ஸம்வத்ஸர உத்ஸவங்களை நடத்திக்கொண்டு பன்னிரண்டு ஆண்டுகள் வாழ்ந்திருந்தார். அந்த மலைக்குத் 'திருநாராயணபுரம்' எனப் பெயரிட்டு அங்கு குடியிருப்பார், 'பெரியோர்களுக்கும் தமக்கு முண்டான பரமபதத்தையும் இங்கு ஆசார்ய கைங்கர்யத்தையும் பெற்று இன்புறுவர் என்று அநுக்ரஹித்துச் சுற்றிலுமுள்ள புற மதஸ்தர்களை யெல்லாம் வாதில் வென்று விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை நிலை நிறுத்தித் திருநாராயணபுரத்தில் காலக்ஷேபங்கள் அருளிச் செய்துகொண்டிருந்தார்.

இந்த மலை க்ருத யுகத்தில் ஸநத்குமாரர் பெருமாளை ப்ரஹ்மாவிடமிருந்து பெற்று வந்து இங்கு வைத்து ஆராதித்ததால் "நாராயணாத்ரி" என்றும, த்ரேதா யுகத்தில் தத்தாத்ரேயர் வேதங்களைச் சீடர்களாகக் கொண்டு வேதாத்யயனம் பண்ணிக்கொண்டிருந்தமையால் "வேதாத்ரி' என்றும், த்வாபரயுகத்தில் கண்ணபெருமான், பலராமர்கள் **ராமப்ரியர்** என்னும் உத்ஸவமூர்த்தியைச் சேர்த்து வழிபட்டதனால் 'யாதவாத்ரி' என்றும், இக்கலியுகத்தில் மறைந்து நின்ற அவர்களை எம்பெருமானார் ப்ரதிஷ்டை செய்து வழிபட்டதனால் 'யதிகிரி' என்றும் பெயர் பெற்று விளங்குகிறது.

பெரியகோயிலிலிருந்து முன்பு அனுப்பிவைக்கப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர் திருநாராயணபுரம் வந்து, ஸ்ரீரங்கராஜ

னுக்கு எம்பெருமானு ரில்லாத குறை தவிர மற்றொரு குறைவுமில்லையென்று கூறி, மேலும் சோழன் சபைக்குச் சென்ற கூரத்தாழ்வான், பெரியநம்பிகளுக்குக் கண்கள் போன விருத்தாந்தத்தை முழுதும்சொல்லிப் பெரியநம்பி கள் சபையினின்றும் திரும்பும்போது இடை வழியிலேயே திருநாடலங்கரித்தார் என்றும் விவரமாக எம்பெருமா னுருக்குத் தெரிவித்தனர். இவ்விவரங்களைக் கேட்டு எம் பெருமானுர் 'கோ' எனக் கதறி, ""இது முறையோ! அர வணைப்பெருமானே! அடியேற்கும் இச்சரீரம் போயிற் றில்லையே! ஐயோ என் செய்கேன்!"" என அரற்றி யழுது பின் முதலிகள் தேற்றத் தேறி, 'ஆழ்வானையேனும் திரு மேனியுடன் இருக்கப்பெற்றோமே' என ஆறுதலடைந்து தம் ஆசார்யரான பெரியநம்பிகளுக்கு ஸ்ரீசூர்ண பரிபால னமும் (ஸ்ரீவைஷ்ணவர்களுக்குச் சரம திருமேனிக்காகச் செய்யும் இறுதிச் சடங்கு), திருவத்யயனமும் (கடைசி நாளில் செய்யும் சடங்கு) செய்தருளினுர். தம்சீடர்களில் ஒருவரான மாறொன்றில்லா மாருதிச் சிறியாண்டானை மேலும் ஆழ்வானைப் பற்றிய விவரங்களை அறிந்து வரும் படி ஸ்ரீரங்கத்துக்கு அனுப்பிவைத்து முன்போலவே கால க்ஷேபங்கள் செய்துகொண்டிருந்தார்.

## கூரத்தாழ்வானின் ஆசார்ய நிஷ்டை

வைஷ்ணவ த்வேஷியைக் கண்ட கண்கள் கூடாவென தரிசனத்துக்காகத் தம் தரிசனங்களைத் தந்த ஆழ்வான் ஸ்ரீரங்கத்தில் நம்பெருமாளைச் சேவிக்கப் போனபோது கோபுரவாசலில் சோழ அரசனுல் நியமிக்கப்பட்டிருந்த காவலர்கள், ""ராமாநுஜரைச் சார்ந்தவர்கள் உள்ளே புகக்கூடாது"" என்று தகைய, ""இவர் நல்லவர்; ஸாது; இவரை மட்டும் உள்ளே விடுங்கள்"" என்று ஒருவன் சொன்னுன். இதுகேட்ட ஆழ்வான் மிக்க வேதனையுற்று, ""இராமாநுஜரின் ஸம்பந்தம் தான் வேண்டுவது; அவரை விட்ட பகவத் ஸம்பந்தம் தேவையில்லை"" என்று சொல்லித் திரும்பிவிட்டார். ஆசார்ய ஸம்பந்தமே (உற வே) பகவத் ஸம்புந்தத்தைக் காட்டிலும் சிறந்ததென் பதை இதனுல் விளக்கினுர். பின்னர் ஆழ்வான் குடும்பத் தோடு அவ்விடத்தினின்றும் திருமாலிருஞ்சோலை (மது ரைக் கருகில் சுமார் 11 மைலிலுள்ளது)க்குச் சென்று பெருமாளைச் சேவித்துக்கொண்டு சில நாள்கள்

வாழ்ந்திருந்தார். அந்தச் சமயத்தில் **ஸ்ரீஸ்தவம், சுந்தர பாஹூஸ்தவம், அதிமானுஷஸ்தவம், ஸ்ரீவைகுண்டஸ்தவம்** என்ற நான்கு துதி நூல்களை இயற்றியருளி பின்னர் ஸ்ரீரங்கத்துக்கு எழுந்தருளி வாழ்ந்திருந்தார்.

## திருக்கோட்டியூர் நம்பியின் திருவுள்ளம்

திருக்கோட்டியூர் நம்பி 105-வது பிராயத்தில் முடிவுத் தருணத்தில் ஸ்ரீவைஷ்ணவப் பெரியோர்கள் நம்பிகளிடம் திருவுள்ளக் கருத்து எது? என்று கேட்டனர். அப்போது நம்பி, "சக்ரவர்த்தித் திருமகன் (ராமபிரான்) நெஞ்சை ஒரு பக்ஷி புண்படுத்திற்று. "ஒரு புறு தனக்குத் தீங்கு செய்து தவனிடம் அடைந்த வேடனுக்குக் குளிர் போக்கி மேலும் தன்னையே அவனுக்கு ஆகாரமாக்கி அடைந்தவனை ரக்ஷித்ததே! நாம் அத்தனை செய்திலோமே என்று எண்ணைச்செய்தது" என்று கூறித் தம் ஆசார்யரான ஆளவந்தாரை த்யானித்துக்கொண்டு திருநாட்டுக்கு எழுந்தருளினார். அவருக்கு அவர் குமரர் தெற்காழ்வான் ப்ரஹ்மமேத விதிப்படி ஸம்ஸ்காரம் (இறுதிச் சரீரச் சடங்கு) செய்தார். இதனால் நம்முடைய காப்புக்காக (ரக்ஷணத்துக்காக) நாம் முயலவேண்டாம்; அவனே முயலும் என்ற நிலை உணர்த்தப்பட்டது.

## மாறொன்றில்லா மாருதிச் சிறியாண்டான் ஆழ்வானைச் சந்தித்தல்

மேல்கோட்டை (திருநாராயணபுரம்)யிலிருந்து புறப்பட்ட மாறொன்றில்லா மாருதிச் சிறியாண்டான் ஸ்ரீரங்கமடைந்து ஆழ்வானைத் தண்டனிட்டு எம்பெருமானாரின் நிலையை விளக்கி, ராமாநுஜர் பெரியநம்பிகளின் பிரிவுக்கு வருந்தினமையையும், ஆழ்வான் கண்கள் போனமைக்குக் கதறிக் கலங்கினமையையும், அதனால் ஆழ்வானின் நிலைமையை அறிந்துவரச் சொல்லித் தம்மை அனுப்பினமையையும் விளக்கிக் கூறினார். ஆழ்வானும் கேட்டு, "உயிருக்கோர் உயிரான எம்பெருமானார் அங்கே எழுந்தருளியுள்ளாரென்று கேட்டதும் அடியேன் உள்ளம் குளிர்ந்தது. அடியேன் தங்களுக்கு என்ன கைம்மாறு செய்வேன்" என்று மிகவும் கொண்டாடி அவரிடம், "அடியேற்குக் கண்கள் மாத்திரம் தான் போயிற்று; மற்றப்படி ஒரு

குறையுமில்லை; உலகுக்குக் கண்ணான உடையவர் பாங்காக எழுந்தருளியிருப்பதுவே அடியேன் வேண்டுவது'' என்று கூறினார்.

இவ்வளவில் 'சிவாத் பரதரம் நாஸ்தி' என்ற சோழன் ஆழ்வான், பெரியநம்பிகளின் கண்களைப் பறித்த பிறகும் விடாது விஷ்ணு கோயில்களையெல்லாம் இடித்தும் தில்லைக் கோவிந்தராஜன் மூலவபேரத்தை(சிலையை)க்கடலில் தள்ளியும் வரும் சமயம் உத்ஸவ பேரம் காப்பாற்றப்பட்டுத் திருப்பதிக்கே கொண்டு செல்லப்பட்டது. இப்படி விஷ்ணு த்வேஷியாய் வாழ்ந்து வரும்போது அச்சோழனுக்குக் கழுத்தில் புழுத்த புண் உண்டாகப்பெற்று வருந்தி இறந்தான் என்ற செய்தி ப்ரவிற்று. அதையும் நிச்சயப்படுத்திக்கொண்டு மாருதிச் சிறியாண்டான் ஆழ்வானிடம் விடை பெற்றுக்கொண்டு ஸ்ரீரங்கத்தினின்றும் திருநாராயணபுரத்துக்குத் திரும்பினார்.

மாருதிச் சிறியாண்டானும் இடையில் கலந்து கொண்ட அம்மங்கியம்மாள் என்ற பெரியாருடன் திருநாராயணபுரம் அடைந்தார். கல்யாண சரஸ்ஸில் அநுஷ்டானம் முடித்துக் கொண்டிருந்த எம்பெருமானாரிடம் ஆழ்வானைச் சந்தித்த விவரத்தையும் விவரமாகக் கூறிச் சைவனான சோழன் இறந்த செய்தியையும் தெரிவித்தார். இது கேட்டு ஸ்வாமி ''வைஷ்ணவ த்வேஷி மாண்டு வைஷ்ணவம் தழைக்கப் பெருமாள் உபகரித்தானே'' என்று ஆனந்தித்துத் திருநாராயணப் பெருமாளையும் யதிராஜ ஸம்பத்குமாரனையும் வணங்கினார். பின் பக்கத்துக் குன்றின்மீதுள்ள நரசிங்கனையும் வணங்கி, ப்ரஹ்லாதனுக்கு உண்டான இடர் போக்கியது போல வைஷ்ணவத்துக்குண்டான இடரைப் போக்கியருளியதே!'' என்று கூறி விடைபெற்றார்.

எம்பெருமானார் ஸ்ரீரங்கம் விரோதி யற்றிருப்பதால் உடனே புறப்பட்டுப் பயணமாக எண்ணிப் பெருமாள்களிடம் விடைகொண்டு அவ்வூரிலுள்ள தம் சிஷ்யர்களையும் சந்நிதி ஸ்ரீகார்யம் (கைங்கர்யம்) செய்கிறவர்களையும் அழைத்துத் தம் கருத்தைத் தெரிவித்தார். அதைக் கேட்ட அனைவரும் இடி விழுந்தது போல ஸ்தம்பித்துப் பின் பிரிவிற்கு ஆற்றாது ஸ்வாமி திருவடிகளில் விழுந்து அழுதனர். இந்நிலை கண்ட எம்பெருமானார் இவர்களுக்கு

நாம் என் செய்வோம் எனச் சிந்தித்துப் பின் சிற்பியைக் கொண்டு தம்மைப்போல் பிம்பத்தை யுண்டாக்கி அதைத் நாம் நழுவித் தக்கவாறு ப்ரதிஷ்டை செய்வித்தார். பின் அங்குள்ளாரின் விருப்பங்களை அத்திருமேனியில் கேட்டு உத்தரவு பெற்றுத் தெளியும்படி செய்து, 'எம்பெருமானாரின் உண்மையான ப்ரதிபிம்பமே' எனக் காட்டி, அவர்களை யெல்லாம் திருநாராயணனையும் செல்வப்பிள்ளையையும் பிரியாது கைங்கர்யங்களைச் செய்வனே செய்து வரும்படி நியமித்து அவர்களை அங்கேயே இருக்கச்செய்து, மற்றுமுண்டான அடியார்களுடன் ஸ்ரீரங்கத்துக்கு எழுந்தருளினார்.

## உடையவர் ஸ்ரீரங்கம் அடைதல்

எம்பெருமானார் பயணமாக எழுந்தருளி பெரிய கோயிலை (ஸ்ரீரங்கம்) அடைந்தார். நீராடி அநுஷ்டானங்களை முடிக்கிறபோதே அங்குள்ளாரெல்லாரும் எம்பெருமானாரை எதிர்கொண்டனர். எம்பெருமானாரும் வணங்கி அவர்களுடன் சென்று ஸந்நிதிக்குள் முறை தப்பாமல் சேவித்துக்கொண்டு நம்பெருமாளைச் சேவித்தார். பெருமாளும் உடையவரைக் கடாக்ஷித்து, "ராமாநுஜ முநியே! நம்மைப் பன்னிரண்டு ஆண்டுகள் பிரிந்தீரே! போர (மிகவும்) மெலிந்தீரே!" என்று இரங்கி தீர்த்த ப்ரஸாதம், சடகோபன் முதலானவைகளை அருளி மடத்துக்கு அனுப்பினார். ஸ்வாமியும் அங்கு நின்றும் வந்து அடியாருடன் ஆழ்வானுடைய திருமாளிகைக்கு எழுந்தருளினார். ஆழ்வானும் 'சடக்'கென எம்பெருமானாரின் திருவடிகளில் விழுந்து வணங்கினார். அவரை வாரி எடுத்து அணைத்துக் கொண்டு எம்பெருமானார் பெருங் கண்ணீர் உகுத்து, நெடும்போது பேச நா எழாமல் வருந்தி விம்மல் பொருமலாய் தழுதழுத்தகுரலுடன் "ஆழ்வான்! இந்தத்தரிசனத்துக்காக (சமயத்துக்காக)க் கண்போன்றவரான நும் கண் போவதே!" என்று கூற, ஆழ்வான், "ஒரு ஸ்ரீவைஷ்ணவருடைய திருமண்ணைப் பார்த்துக் கோணலென்று நினைத்திருக்கமாட்டேனோ; அதற்கு இது பலமாகுமல்லவா" என்று பதில் கூற, ஸ்வாமி, "ஐயோ! உமக்கும் பாபம் வருமோ! அடியேன் செய்த தீவினைதான் நும் கண்கள் போகக் காரணம்" என்றுசொல்லி மேலும் கதறினார். பின்புதேறி எம்பெருமானார் தம் மடத்துக்குச் சென்றார். இதனால்

பகவத் பக்தனுனல், சிஷ்யனேயானுலும் அவன் துன்பத்தை ஆசார்யனேயானுலும் தன்னதாக நினேக்கக்கடவன் என்ற உண்மை உணர்த்தப்படுகிறது.

ஊரிலுள்ள பெரியவர்களெல்லாம் எம்பெருமானுரைச் சேவித்து, ''ஐயோ! ஆழ்வான் கண் போயிற்றே; பெரியநம்பிகள் திருநாட்டுக்கு எழுந்தருளினுரே!'' என்று வருத்தங் கூறி. ''தேவரீரையாகிலும் க்ஷேமமாகச் சேவிக்கப் பெற்றேமே!'' என்று ஆனந்தமடைந்தனர்.

இப்படி வாழுங் காலத்தில் சைவஆக்ரமிப்பால் திருச்சித்ரகூடத்தில் (சிதம்பரம்) கோவிந்தராஜர் (உத்ஸவர்) திருப்பதிக்கு எழுந்தருளினுர் என்று சிலர் சொல்லக் கேட்டு உடனே எம்பெருமானுர் திருப்பதிக்குச் சென்று கோவிந்தராஜனுக்குக் கோயிலெழுப்பி ப்ரதிஷ்டை செய்துவைத்துத் திருமலேயேறிப் பெருமாளேச் சேவித்துக் கொண்டு அன்றே அடிவாரம் அடைந்து ஆழ்வார்களேயும் சேவித்துக்கொண்டு புறப்பட்டுக் காஞ்சிப்பேரருளாளனேயும் சேவித்துக்கொண்டு ஸ்ரீரங்கம் அடைந்தார். முன்பு போலே தர்சன அர்த்தங்கள் அருளிக்கொண்டிருந்தார்.

## ஆழ்வான் கண் பெறுதல்

ஒருநாள் உடையவர் கூரத்தாழ்வானே யழைத்து, ''ஆழ்வான்! வேண்டுவார் வேண்டுவன தருவதையே குணமாக வுடையவர் பேரருளாளர். அவர் விஷயமாக நுமக்குக் கண் வேண்டி ஒரு துதி விண்ணப்பம் செய்யும்'' என்று கூற, ஆழ்வான் மறுத்துத் தமக்கு இக்கண் வேண்டாம் என்றனர். அதனுல் ஆழ்வான் வரதராஜன் விஷயமாக இரண்டு சுலோகங்கள், ''பெருமாளேக் காணும்படியான திவ்யநேத்ரம் வேண்டி அருளிச்செய்தார். அன்றிரவு பேரருளாளன் கனவில், 'தந்தோம்' என்று அநுக்ரஹித்தார். விடிந்ததும் ஆழ்வான் மகிழ்வுடன் **வரதராஜஸ்தவம்** என்ற தோத்ர நூலே ஆக்கி அதை எம்பெருமானுரிடம் சொல்லிக் காட்டினுர். உடையவரும் மிகவும் உகந்தார். ஆழ்வான் பேரருளாளன் தமக்குத் திவ்ய நேத்ரம் தந்தமையைத் தெரிவித்தார். அதுகேட்டு ராமாநுஜர் அது கூடாது என்று ஆழ்வானே அழைத்துக்கொண்டு காஞ்சியை அடைந்து வரதராஜனிடம் அந்த தோத்ரமாலேயை விண்ணப்பஞ் செய்யச் சொன்னுர். ஆழ்வானும் அவ்

வண்ணம் செய்யும்போது பாஷ்யகாரர் வேறுகார்யமாகச் சற்று அகல அச்சமயத்தில் துதி கேட்டுத் தலை குலுக்கிய பேரருளாளன், "ஆழ்வான்! உமக்கு என்ன வேணும்" என்ன ஆழ்வான், "நான் பெற்றபேறு நாலூரானும் பெற வேணும்!" (ஒரு வைஷ்ணவனை தம் கண் போவதற்கு நாலூரான் காரணமாயிருந்தமையால் அவருக்கு நரகம் தான கிடைக்கும்; அதனும் அவருக்கும் பேற்றைஅதாவது மற்றவருக்கு வாழ்ச்சியை மேல் விழுந்து வேண்டுகிறார்) என்று வேண்டினார். "அப்படியே ஆகுக!" என்று பெருமாள் அநுக்ரஹம் செய்தான். சற்று நேரத்துக்கெல்லாம் எம்பெருமானார் திரும்பி வந்து இவ்விவரம் அறிந்து பெருமாளை நோக்கி, "முழுதுணர் பெருமானே! நீரும் என் நினைவை நிறைவேற்றவில்லையே!" என்று கூறி ஆழ்வானைப் பார்த்து, "ஆழ்வான்! நீர் சுதந்த்ரராய் என் நினைவைப் புறக்கணித்தீரே! நான் வருமுன் இப்படிச் செய்தீரே!" என்று சொலலிப் பெருமாளையும் ஆழ்வானையும் வெறுத்து, 'இனியென் செய்கேன்' என்று திகைத்து நின்றார். அப்போது பேரருளாளன், "கலங்கவேண்டா; தம்மையும் உம்மையும் காணுமிடத்துக் கட்கண்ணாலே காணக்கடவர்" என்று வரந தந்தார். அதற்கேற்ப ஆழ்வானும் பெருமாள் திருமேனியிலுள்ள ஆபரணாதி அலங்காரங்களையும் எம்பெருமானாரின் திருவுருவக் கோலம் முதலானவற்றையும் கண்டு சொல்ல எம்பெருமானார் மிகவும் உகந்தார். பிறகு ஸ்ரீரங்கம் திரும்பி முன்போல காலக்ஷேபங்களைச் செய்துகொண்டிருந்தார்.

## எம்பெருமானார் ஆண்டாளுக்கு அண்ணன் ஆதல்

ஒருசமயம் எம்பெருமானார் நாச்சியார் திருமொழிக்கு உரை யருளுகின்றபோது, "நாறு நறும் பொழில்" என்ற பாட்டு வந்ததும் ஆண்டாளின் திருவுள்ளத்தை முடிக்க வேண்டும் என்று எண்ணித் திருமாலிருஞ்சோலை மலைக்கு எழுந்தருளி கோதையின் திருவுள்ளப்படி நூறு தடா வெண்ணெயையும் நூறு தடா நிறைந்த அக்கார அடிசிலையும் (சர்க்கரைப் பொங்கல்) பெருமாளுக்குச் சமர்ப்பித்து, அப்படியே ஸ்ரீவில்லிபுத்தூருக்கு எழுந்தருளி ஆண்டாளை வணங்கி நின்றார். அப்போது கோதையாரும் தம் மனோரதத்தைப் பூர்த்தி செய்ததற்கு அர்ச்சகர் மூலமாக 'நம் கோயிலண்ணர்' என்று கூறி தீர்த்த ப்ரஸாதங்

களும் நல்கினுள். இதனுல் ஆண்டாள், ""பெரும்பூதூர் மாமுநிக்குப் பின்னுனுள் வாழியே!'' என்று பேசப்பட்டாள். அங்கிருந்து ஆழ்வார் திருநகரி சென்று நம்மாழ்வாரை வணங்கி மீண்டும் ஸ்ரீரங்கம் அடைந்து வாழ்ந்திருந்தார். அப்போது ஸ்வாமி திருவடிகளில் அடிமைப் பட்டவர்கள் 74 ஸிம்ஹாஸனுதிபதிகள் என்கிற ஆசார்யர்களும் மற்றுமுண்டான அநேகம் பேர்களுமாவார். இவர் காலத்தில் ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ பீடுநடை பெற்றிருந்தாள்.

## வடுகநம்பியின் பெருமை

இவரை ஆந்த்ர பூர்ணர் என்றும் கூறுவர். இவர் எம்பெருமானுரையே பேறும் பேற்றைத் தரும் மார்கமுமாகக் கொண்டவர். ஒருசமயம் வடுகநம்பி உடையவர் திருவாராதனப்பெருமாளையும் தமது திருவாராதனமான உடையவர் திருவடி நிலைகளையும் (மரவடி) ஒன்ருகச் சேர்த்துக்கொண்டு போக, அது கண்டு உடையவர், "வடுகா! இதென்ன?' என்ன "உங்கள் தேவரில் எங்கள் தேவர் குறைந்தவரோ' எனப் பகர்ந்தார். மற்ருெரு சமயம் பால் அடுப்பில் காய்ந்து கொண்டிருக்கையில் அழகிய மணவாளன் திருவீதியிலெழுந்தருள, "வடுகா! பெருமாளைச் சேவிக்க வாராய்' என்று உடையவர் அழைக்க, "உங்கள் பெருமாளைச் சேவிக்க வந்தால் எங்கள் பெருமாளுக்குப் பால் பொங்கி வழிந்து விடும்' எனக் கூறினர். "பெருமாளின் கண்ணழகைப் பாராய்!' என்றபோது, "என்னமுதனைக் கண்ட கண்கள் மற்ருென்றினைக் காணுவே!' எனக் கூறினர். வடுகநம்பி உடையவரின் ப்ரசாத மீதியைக் கைகளில் ஏற்று உண்டு கைகளை யலம்பாமல் தலையில் துடைத்துக்கொள்வது வழக்கம். இது கண்டு எம்பெருமானுர், "இப்படிச் செய்யக்கூடாது; கையை அலம்பிக்கொள்ளும்' என்று அலம்பச் செய்தார். அதுபோலவே பெருமாள் ப்ரசாதத்தை ஸ்வீகரித்துப்பின் கையை அலம்பிக்கொண்டார். அது பார்த்து, "இப்படி செய்யலாமோ?' என்று கேட்க, நேற்று சொன்னபடி செய்தேன் என்றனர். இதுபோன்று ஆசார்யனைத் தவிர தேவு மற்றறியாத நிலை கண்டு உடையவரே உமக்குத் தோற்ருேம் எனச் சொல்லும்படியான நிலையை உடை

பவர் வடுகநம்பி. இவர் உடையவர்க்கு அஷ்டோத்தர சதநாம ஸ்தோத்ரம் செய்துள்ளார்.

## கூரத்தாழ் வானுக்குப் பரமபதம்

ஒருநாள் கூரத்தாழ்வான் எம்பெருமானாருக்குச் சொல்லாமலே நம்பெருமாளை வணங்கி வழிபட்டு ஒரு சுலோகம் சொல்லி விளக்கி யருள, அதுகேட்டு ஆநந்தபர வசனான நம்பெருமாள், 'வேண்டுவன தருகிறோம்; கேளீர்!' என்றான். 'முன்பே எல்லாம் கொடுத்ததே' என்று ஆழ்வான் பதில் சொன்னதும், 'நம் ஆணை; நம் ராமாநுஜ முநிமேல் ஆணையாகத் தருகிறோம்; கேளீர்!' என்றான் பெருமாள். 'ஆயின் உன் அநுபவத்துக்கு விரோதியான இச்சரீரத்தைப் போக்கித் தரவேண்டும்' என்று ஆழ்வான் கேட்டதும் 'அஃதொழிய வேறு கேளும்' என்றான். 'அபேக்ஷித்ததையே தந்தருள வேண்டும்' என ஆழ்வான் வேண்ட, "ஆயின் உமக்கும் உம் சம்பந்தமுடையார்க்கும் பரமபதந் தந்தோம்" என்று அருளி மாலை, திருப்பரியட்டம் முதலியன கொடுத்தனுப்பினான். ஆழ்வான் ஸம்பந்தமுடையார்க்கும் பரமபதம் என்று பெருமான் அருளியதைக் கேட்டு எம்பெருமானார், தாம் ஆசார்யரின் வார்த்தையை மீறியதால் தமக்குநரகம் பலமாயிருந்தது; அது நீங்கி, இப்போது கூரத்தாழ்வான் ஸம்பந்தத்தால் தமக்கும் பரமபதம் உறுதியானமையால், தம் மேல் உத்தரீயத்தை ஆநந்தத்தின் போக்குவீடாக மேலே வீசி எறிந்து பிடித்துக்கொண்டார். இதனால் நல்லாசார்யன் உறவோடு நல்ல சிஷ்யன் உறவும் பேற்றுக்கு அமையும் என்கிறது.

பிறகு ஆழ்வானின் பிரிவை நினைந்தபோது துக்கம் மிக்கெழ எல்லாருடனும் கூடி ஆழ்வானை யணுகி, 'இப்படிச் செய்யலாமோ? எமக்கு முன் செல்லவேண்டுமென்று ஏன் நினைத்தீர்?' என்று சோகமாகக் கேட்டார். அதற்கு ஆழ்வான், "தேவரீர் முன்னே பரமபதத்துக்கு எழுந்தருளியிருந்து அடியேன் பின்னால் வந்தேனானால், தேவரீர் அடியேனை எதிர்கொள்ளவேண்டிவருமே; சிஷ்யனை ஆசார்யன் எதிர்கொள்வது முறையல்லவே; அதனால் அடியேன் முன்னே சென்று தேவரீரை எதிர்கொள்ளலாம் என்ற முறை தவறாமைக்காக" எனப் பதில் கூறினார். 'முறை தேட வேண்டா நகரிலும் (பரமபதத்திலும்) முறை தேடு

வடுதே' என்று ஆழ்வானின் அடிமையை வியந்து உடையவர் அவர் செவியில் த்வய மந்த்ரத்தை அருளினர். பிறகு, ஸ்வாமி, 'உம்மைப் பிரிந்து எங்ஙனே தரிப்பேன்; என்னையும் உடன் கொண்டு போக நினைத்திலீரே! என் செய்தீர்' என அரற்றினர். பிறகு, பெருமாளும் நாங்களும் பாபம் பண்ணினேம்; உம்முடைய பேற்றுக்கு நாம் விலக்காகக்கூடாதே' என்று தம் திருவடிகளில் வீழ்ந்த ஆழ்வானை எடுத்தணைத்து அவர் விருப்பப்படி தீர்த்தமும் தந்தருளினர்.

ஆழ்வான் தம் தேவிகளை அழைத்து, தாம் திருநாட்டுக்கு எழுந்தருளுவதில் அவர் தம் எண்ணம் என்னவெனக் கேட்டார். தேவிகளும் ஆழ்வானின் எண்ணப்படி நடக்கும் பரதந்த்ரையா யிருக்குமதொழியத் தமக்கென ஓர் ஆசை கிடையாது என்று உரைத்தார். பிறகு பட்டரையும் சீராமப் பிள்ளையையும் அழைத்து, "பெருமாளும் பிராட்டிமாரும் இருக்கும்போது உங்களுக்கு ஒரு குறைவுமில்லை; நம்மைப் பெருமாள் பெற்று வளர்த்தார் என்று இறுமாந்திராதே; எம்பெருமானர் திருவடிகளே தஞ்சமென் றிருங்கோள் நும் தாய் ஆண்டாளின்சொல் கடவாதீர்கள்; பாகவதர் விஷயத்தில் மனம், மெய், மொழிகளாலே பிழை செய்யாதே வாழுங்கோள்" என்றருளித் தம் திருவடிகளில் விழுந்த அவ்விருவரையும் வாரியெடுத்துக் கண் துடைத்து, "தேக உறவைக் கொண்டு வருந்தினீராகில் எம்பெருமானர் திருவடி உறவை இழந்தவராவீர்கள்; ஆத்ம உறவைக் கொண்டு வருந்திஞல் அவனேடு ஒழிக்கவொழியாத உறவை யுடையோம் என்பதை மறந்தவர்களாவீர்கள்" என்று தேற்றி, பிள்ளை ஆழ்வான் மடியில் திருமுடியையும் ஆண்டாள் மடியில் திருவடிகளையும் வைத்துக்கொண்டு எம்பெருமானர் திருவடிகளைத் தியானித்துக்கொண்டே திருநாட்டுக்கு ஏகினர். இது கேட்டு உடையவர் அங்கு எழுந்தருளி வருந்தி பட்டரையும் சீராமப் பிள்ளையையும் தேற்றி, பட்டரைக் கொண்டு ஆழ்வானுக்கு ப்ரஹ்மமேத சம்ஸ்காரத்தாலே சரம கைங்கர்யத்தைச் செய்வித்துத் திருவத்யயனமும் சிறப்பாக நடப்பித்தார்.

ஆழ்வான் ஆசார்ய இலக்கணமும் சிஷ்ய இலக்கணமும் ஒருங்கே அமையப்பெற்றவர். வாழையிலை யறுத்து அதில் கசியும் நீரைக் கண்டு மூர்ச்சை யடையும் பரம

தயாளர். தம்மை யடைந்தாரை வருந்தியும் திருத்திப் பணிகொள்ளும் இயல்வினர். இவர் பார்வையில் பட்ட வன் பொல்லாதவனானாலும் நல்லவனாகத் திருந்திவிடு வான். இப்படிப்பட்ட வைபவமுடைமையாலே 'கதம் வர்ண்யதே கூரநாத: (கூராதிபர் எப்படித்தான் வர்ணிக் கப்படுவர்) என்று சிறப்பிக்கப்பட்டார்.

திருவத்யயனம் முடிந்த மறுநாள் எம்பெருமானார் பட்டரை அழைத்துக்கொண்டு போய் நம்பெருமானி டம் காட்டிக் கொடுக்க, பெருமாளும் மறுபடியும் பட்ட ரைப் புத்ர ஸ்வீகாரம் செய்தருளி, 'ஆழ்வானைப்போலே நம்மை நினைத்திரும்' என்றருளினார். உடையவர் பெரு மாளிடம் பட்டருக்கு ஆயுஸ்ஸை ப்ரார்த்தித்துத் தாம் அவருக்கு ஸம்ப்ரதாய அர்த்தங்களை யெல்லாம் அளித்து ஸித்தாந்தத்தை வளர்ப்பதற் குரியவராக ஆக்குவதாகச் சொன்னார். பெருமாள் திருவாய் திறவாம லிருந்துவிட் டார். எம்பெருமானார் பட்டரை எம்பாரிடம் காட்டிக் கொடுத்து, நம் ஸித்தாந்தக் கருத்துக்களை நன்றாக உணரும்படி ஸாஸ்த்ரங்களையெல்லாம் உணர்த்தும் என்று கூறித் தாம் பகவத் விஷயம் (திருவாய்மொழி யுரை) அருளிக்கொண்டிருந்தார்.

இப்படியான எம்பெருமானாரின் பெருமைகளைப் பெரியபெருமாளும் திருவேங்கடமுடையானும் பேரரு ளாளரும் திருநாராயணப் பெருமாளும் அழகரும் திருக் குறுங்குடி நம்பியும் மற்றுமுள்ளானவர்களும் வெளியிட் டார்கள்.

எம்பெருமானார் அபய ப்ரதானம் (விபீஷண சரணா கதி) பற்றி அருளிச் செய்யும்போது பிள்ளையுறங்காவில்லி தாஸர் எழுந்து நின்று, ''எல்லாவற்றையும் வாசனை யோட விட்டு வந்து ராகவனையே தஞ்சமாகப் பற்றி நின்ற விபீஷணனையே, 'பிடியுங்கள்; கொல்லுங்கள்' என்ற ராம கோஷ்டிக்கு மாடு மனையோடு கூடியுள்ள அடியேன் ஆளாகுவேனா என்று ஐயத்தோடு கூற உடையவர், 'பிள்ளாய்! பயப்படவேண்டாம்; நான் பெற்றேனாகில் நீர் பேறு பெறுகிறீர், பெரியநம்பி பெற்றால் நான் பெறு கிறேன்; ஆளவந்தார் பெற்றால்பெரியநம்பிகள் பெறுவர்; நாதமுனிகள் பெற்றால் ஆளவந்தார் பெறுவர்; இப்படி "அவா அற்று வீடு பெற்ற' என்று தம் வாயாலே அருளிய

ஆழ்வாருக்குப் பேறு நிச்சயமானபோது அவரடி உறவு கொண்ட நம் அனைவருக்கும் பேறு தப்பாது. தப்பாமைக் காகவே பிராட்டி "அகலகில்லேன்' என்று அவன் மார் பைப் பற்றிக் கொண்டிருக்கிறாள். விபீஷணன் அங்கீகரிக் கப்பட்டபோதே அவனுடன் வந்த நால்வரும் அங்கீகரிக் கப்பட்டனரன்றோ! அதுபோலே உமக்கும் பேறு தப்பா தென்றிரும்' என்றருளினார். இதற்கு "ஏத்தியிருப்பாரை வெல்லும் சாத்தியிருப்பார் தவம்' என்பதை ப்ரமாணம் காட்டினார். (ஏத்தியிருப்பார் பரதாழ்வான் முதலானோர்; சாத்தியிருப்பார் சத்ருக்நாழ்வான் முதலானோர்).

## திருவரங்கத்தமுதனார்

அரங்கநகரப்பன் செல்வத்தை எம்பெருமானார் திருத்தி வருகிறபோது அக்கோயிலில் புரோஹிதம், புராணம் படித்தல் முதலான கைங்கர்யங்களைச் செய்துவரும் சொல் வல்லாரான பெரியகோயில் நம்பி என்பவர் உடையவ ருக்கு எதிராக நடந்து கொண்டிருந்தார். இதனால் உடை யவர் அவரைக் கைங்கர்யத்தினின்றும் நீக்க நினைத்தார். அன்றிரவு நம்பெருமாள் இராமாநுஜ முநியின் கனவில், "நெடுங்காலமாக நம்மையே நம்பிக் கொண்டிருக்கும் அந்நம்பியை நீக்கவேண்டாம்" என்றருளினார். எம்பெரு மானார் ஆழ்வானைக் கூவி, "விரோதம் செய்யும் பெரிய கோயில் நம்பியை நம்பெருமாள் நாம் ஒன்றும் செய் யக்கூடாதென்கிறார்; அதனால் நாம் பெருமாள் கோயி லுக்கு (காஞ்சீபுரம்) புறப்படுவோம்' என்றார். ஆழ்வான் உடையவரிடம், "இதைச் சொன்ன பெருமாள் நிச்சய மாக அவரை நமக்கு அநுகூலமாக்குவார்; அதனால் பொறுத்துப் பார்ப்போம்" என்ன, 'ஆகில் நீரே அவ ரைத் திருத்தும்' என்று எம்பெருமானார் பணித்தார். அப்படியே ஆழ்வான் மெல்ல மெல்லத் திருத்தி அப்பெரிய கோயில் நம்பியை எம்பெருமானார் திருவடிகளைச் சார்ந்து உய்யும்படி செய்தார். உடையவரும் அவருக்கு அமுதனார் என்று திருநாமம் இட்டார்.

அவரும் அன்று முதல் எம்பெருமானாரிடம் அன்பு கொண்டு ஒழுகி வந்தார். அவர் தாம் திருவரங்கத் தமு தனாரானார். அவர் தாயார் இறந்து போனார். அமுதனார் முன்பு வைணவரல்லாத குடும்பத்தைச் சார்ந்திருந்தார். இப்போது வைணவரானமையால் அவரின் தேஹ ஸம்பந்

தம் உடையவர்களும் ப்ராஹ்மணார்த்தத்துக்கு (பித்ருக்களுக்குப்ராம்மணர் மூலம் படைக்கும் அன்னம்) இசையவில்லை; வைணவர்களும் இசையவில்லை. இஃதறிந்த எம்பெருமானார் ப்ராஹ்மணார்த்தத்துக்குக் கூரத்தாழ்வானைப்பணித்தார். அவரும் அப்படியே செய்து தானமாக பெருமாள் முன்பு நடத்தும் புரோஹிதமும் புராணம் படித்தலுமாகிய கைங்கர்யத்தைப் பெற்று உடையவரிடம் விண்ணப்பித்தார். அதனால் பெருமாள் கைங்கர்யமற்றிருந்த அமுதனருக்கு இயற்பா சேவிக்கும் உரிமையைக் கொடுத்து மகிழ்ந்தார் எம்பெருமானார்.

திருவரங்கத்தமுதனரும் எம்பெருமானார் விஷயமாக ப்ரபந்ந காயத்ரீ என்கிற ராமாநுஜ நூற்றந்தாதியை அருளினர். அதை நம்பெருமாள் காதாறக் கேட்டு இன்புற்றுத் திவ்ய ப்ரபந்தத்துள் இறுதி ப்ரபந்தமாகச் சேர்க்கக் கட்டளையிட்டார். ப்ரபத்தி (சரணகதி)யில் ஊன்றி நிற்கின்றவர்களுக்கு இதுவே காயத்ரீயாம். இப்ரபந்தத்துக்கு எம்பெருமானர் தாமே கேட்டுகந்த ஏற்றமுமுண்டு.

## தமருகந்த திருமேனி

இப்படிப் பெரும் புகழாளரான எம்பெருமானரை முதலியாண்டான் திருக்குமாரர் கந்தாடையாண்டான் அணுகி, உடையவரின் அவதார ஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்வாமியின் அர்ச்சா திருமேனி ப்ரதிஷ்டிக்கப் படவேண்டும் என்று சொல்லி ப்ரார்த்தனை செய்து அவரின் அநுமதி பெற்றார். பிறகு வல்லவனை சில்பியை அழைத்து ஸ்வாமியை சேவிக்கப் பண்ணினர். அவனும் எம்பெருமானரின் அன்றைய திருமேனியைப் போலவே விக்ரஹத்தை ஏற்பாடு செய்து கொடுத்தான். அதை ஸ்வாமி திருக்கண்களால் நோக்கித்தாமும் அவ்விக்ரஹத்தைத் தம் சக்தி யெல்லாம் அதிலே காணலாம்படி நெருக்கமாக ஆலிங்கனம் செய்து, அவ்விக்ரஹத் திருமேனியைத் தை மாதத்தில் பூச நக்ஷத்திரத்தில் ப்ரதிஷ்டை செய்யும்படி நியமித்து ஸ்ரீமுகமும் (ஓலையும்) எழுதிக் கொடுத்தார். அதைப் பெற்றுக்கொண்டு ஆண்டானும் விக்ரஹத்தையும் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்து ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்வாமி நியமித்த நாளில் திருப்ரதிஷ்டை செய்தருளினர்.

அவ்வர்ச்சா திருமேனியை ப்ரதிஷ்டிப்பிக்கிற அன்று ஸ்ரீரங்கத்தில் எம்பெருமானாருக்குத் திருமேனி மிகவும் தளர்ந்து பலமும் குறைந்து காண, இதற்குக் காரணம் என் என்று யோசித்து, அது விக்ரஹ ப்ரதிஷ்டை நாளென்று அறிந்து அதிர்ச்சி யடைந்தார். முதலியாண்டானும் விரைந்து ஸ்ரீரங்கம் வந்து எம்பெருமானாரைச் சேவித்துக்கொண்டிருந்தார்.

## எம்பெருமானார் ப்ரபாவம்

""அடையார்கமலத்து அலர்மகள்கேள்வன்
கையாழி யென்னும்
படையோடு நாந்தகமும் படர்தண்டும் ஒண்சார்ங்க
வில்லும்
புடையார் புரிசங்கமும் இந்தப் பூதலங் காப்பதற்கென்று
இடையே இராமாநுச முநியாயின இந்நிலத்தே''

என்கிறபடி எம்பெருமானின் ஐந்தாயுதங்களும் ஒருசேர எம்பெருமானாராக ஆயினவோ! என்றும், இவர்தாம் ஆதி சேஷனோ! சேனை முதலியாரோ! அல்லது லக்ஷ்மீநாதனை எம்பெருமான்தானோ! என்றும் பேரறிஞர்கள் தங்களுள் வியந்து கூறும்படி பெருங் கீர்த்தியுடைய உடையவர் தமக்கு அடைக்கப்பட்டிருந்த வயதில் அன்றைக்கு 120 வயது பூடிய எழுந்தருளியிருந்தார்.

இவருடைய வைபவம் சொல்லிலடங்காது. தயிர்க்காரிக்குத் தயிரின் கிரயமாக அவள் வேண்டியபடி திருவேங்கடமுடையானுக்கு ஓலை கொடுத்து மோக்ஷம் கொடுத்தார். திருவாய்மொழிக்குப் பொருள் விளக்கம் தாம் நூல் வழிச் செய்யின் அதற்குமேல் பொருள் கூற வொண்ணாதென பின்புள்ளார் திகைப்பர் என்று எண்ணித் தாம் நூல் செய்யாது தம் சீடரான திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்பாரைக் கொண்டு நூல் வழிப்படுத்தினார். கத்யத்ரயம் என்னும் க்ரந்தத்தை யருளி ஸ்ரீபாஷ்யத்தில் கர்மம் ஞானம், பக்தி என்பவைகளை பகவானை அடைவதற்கு மார்கமாகச் சொல்லியிருப்பினும், தமக்கு ஆழ்வார் தொடங்கி வந்த எம்பெருமானே உபாயம் என்கிற சரணாகதி மார்கமே உடன்பாடு என்பதை வெளியிட்டருளினார் ஊரும் நாடும் நன்கறிய ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ பெருகி ""பொலிக பொலிக-போயிற்று வல்லுயிர்ச் சாபம்''

என்ற ஆழ்வார் மங்களாசாஸனப்படி கலியுகம் நீங்கிக் க்ருதயுகம் தோன்றச் செய்தார்.

## எம்பெருமானார் பரமபதம் அடைதல்

இப்படித் தாம் வந்த கார்யம் நிறைவு பெற்றதனால் பரமபதம் சென்று அங்கு சேஷ ரூபத்தோடு தொண்டு செய்யத் திருவுள்ளம் கொண்டு நம்பெருமாளிடம் சென்று **சரணாகதி கத்யம்** என்ற க்ரந்தத்தாலே பிராட்டி முன்னாகப் பெருமாளைச் சரணடைந்து, பெருமாளுடைய ஸர்வ சக்தி முதலான குணங்களையும் தம்முடைய கைங் முதலின்மையையும் விளக்குகின்ற **ஸ்ரீரங்க கத்யம்** என்ற க்ரந்தத்தையும் விண்ணப்பம் செய்து நின்றார். பெருமானும் இவர் கருத்தறிந்து, 'வேண்டுவது யாது?' என்ன, உடையவரும் 'இவ்வுலகில் அடி சுடுகிறது; அவ் வுலகு வேண்டுகிறேன்' என்றார். பெருமான், இன்னும் சிறிது காலம் உம்மைக் கொண்டு இவ்வுலகைத் திருத்தப் பார்த்தோம்; அதற்குள் பதற்றம் கொண்டீரே! என்ன, எம்பெருமானாரும் "பெருமானே! காலக் கழிவு செய்யேல்; உன் பொன்னடிக் கீழ்ச் சேர்த்து எஞ்ஞான்றும் விடா தொழியவேணும்' என்று வேண்டினார். நம்பெருமாள் ''இன்றைக்கு ஏழாவது நாள் அப்படியே செய்கிறோம்'' என்று விடை தந்தான். எம்பெருமானார் தம் சிஷ்யர் களுக்கு இதுவரை அருளாத சீரிய பொருள்களை யெல் லாம் மூன்று நாள்களாக அருளி வந்தார். மேலும் இவ் வர்த்தங்களை யெல்லாம் நீங்களும் நம்பவேண்டும்; உம்மை அடைந்தார்க்கும் பரம்பரையாக உபதேசியுங் கள் என்றும் சொல்ல, மிகவும் வியப்படைந்த முதலிகள் (பெரியோர்கள்) 'இது என்' என்று கேட்டனர். இனியும் மறைக்கவொண்ணாதென்று 'இன்றைக்கு நாலாம் நாள் பரமபதம் செல்ல எண்ணியுள்ளோம்' என்று எம்பெருமா னார் கூற, அத்தனை பேரும் கடல் கலங்கியது போலக் கலங்கினர். சிலர் ஆத்ம த்யாகம் (தானே முடிகை) பண் ணவும் நினைந்தனர். அப்படிக் கூடாது என்று ஸ்வாமி ஆணையிட்டுத் தடுத்து நல்வார்த்தைகளால் தேற்றினார்.

## பட்டருக்கு நியமனம்

பிறகு, ஸ்ரீபாஷ்ய நிர்வாகத்தை நடாதூராழ்வானி டத்தும், அருளிச்செயல் நிர்வாகத்தைப் பட்டரிடத்தும்,

தம்முடைய இறுதிச் சடங்கை முதலியாண்டானிடத்தும் ஒப்படைத்து, ''எல்லோரும் பட்டருக்கு அநுகூலமாயிருங்கள்'' என்று அருளினார். மேலும் ஸ்ரீவைஷ்ணவன் இருக்கும் நாள் கடைபிடிக்கவேண்டியவைகளை யெல்லாம் அருளினார்.

எம்பெருமானார் பட்டரை நம்பெருமாளிடம் அழைத்துப்போய் அவருக்கு தீர்த்த ப்ரஸாதம் முன்பாகவும், தமக்குப் பின்பாகவும் ஸ்வீகரித்தார். ''இனி நம் சித்தாந்த நிர்வாகம் பட்டரிடந்தான்'' என்று அருளி பட்டரைப் பார்த்து, ''பட்டரே! மேல் நாட்டிலே வேதாந்தி என்ற பெரிய வித்வான் இருப்பதாக அறிந்தோம்; அவனை நம் சித்தாந்தத்துக்குத் திருத்துவீராக'' என்று கட்டளையிட்டார்.

நான்காம் நாள் காலை ஸ்நாநம் முதலான நித்ய கடன்களைச் செய்கையில் காலைச் சந்தியை உடல்தளர்ச்சியால் நின்றவாறே செய்தருளி மற்றுமுண்டான பன்னிரு திருமண் தரித்தல், மந்த்ராநுஸந்தானம் செய்தல், தீர்த்த ஸ்வீகாரம்இவைகளையும் முடித்துக்கொண்டு பத்மாஸனத்தில் இருந்துகொண்டு பரவாசுதேவ நாட்டத்தை யுடையராய் ஆளவந்தாரை த்யானித்துக்கொண்டு திருக்கண்களை மூடிப் பரவசராய் எம்பார் மடியில் திருமுடியும்(தலை) வடுக நம்பி மடியில் திருவடியுமாகக் கண் வளர்ந்து மாசிமாதம் சுக்லபக்ஷதசமியில் சனிக்கிழமை நண்பகலில் திருவாதிரையில் அரவணையோடே கூடியருளினார். எல்லோரும் கலங்கித் தேறினர். ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரத்தாலே யதிஸம்ஸ்கார விதி யடங்கச் செய்து நம்பெருமாள் நியமனப்படி ஆவரணத்துக்குள்ளேயே திருப்பள்ளிபடுத்தி அருளினர்.

## எம்பார் பேறு பெறுதல்

எம்பெருமானார் திருநாட்டுக்கு எழுந்தருளும்போது ஸ்வாமிதிருவடிகளைப் பிடித்துக்கொண்டு 'எம்பார்பொருளல்லாத வென்னைப் பொருளாக்கிப் போதரே என்று சொல்லிப் புந்தியிற் புகுந்து, தன்பா லாதரம் பெருக வைத்த பெருமானே! உம்மைப் பிரிந்திருக்கப்போமோ?' என்று கதற உடையவரும் 'நம்பெருமாள் நம்மைப் பிரியவைக்கமாட்டான்:பதறுதேயிரும்' என்றுசொல்லித் தம் திருவடிகளால் எம்பார் திருமுடியை (தலையை) அலங்

காரம் செய்து திருநாட்டுக்கு (பரமபதத்துக்கு) நடந்தருள எம்பாரும் தேறியிருந்து உடையவர் அருளியிருந்த அர்த்தங்களையெல்லாம் பட்டர் முதலானோர்க்கு அருளிச் செய்து கொண்டிருந்தார்.

ஒரு நாளாக உடையவரை நினைந்து நைந்து எம்பார் நம்பெருமாளிடம் சென்று உடையவரைப் பெறப்போக வேணும் என்ன, அவனும் ஆம் என்ன, எம்பாரும் மடத்துக்கு வந்திருந்து பட்டரை அழைத்து, "பட்டரே! நாம் ஆழ்வான் குமாரர்; எல்லா சாஸ்த்ரங்களையும் கற்றோம்; நம்பெருமானுக்கு நாம் ஸ்வீகார புத்ரர் என்று இறுமாந்திருதே எம்பெருமானார் திருவடிகளே பேறும் பேற்றைத் தரும் உபாயமும் என்று உறுதி கொண்டிரும்; மேலும் நம் சித்தாந்தத்தை நலிவுறாமல் காத்திரும்'' என்று சொல்லித் திருநாட்டுக்கு நடந்தார். அவருக்கு ப்ரஹ்மமேத விதியாலே எம்பாரின் திருத்தம்பியாரான சிறிய கோவிந்தப் பெருமாளைக் கொண்டு ஸந்யாஸிகளுக்குரிய வகையில் பள்ளிபடுத்தினர்.

## பட்டர் பெருமை

பிறகு பட்டர் நம் தர்சனத்தை நிர்வஹித்து வந்தார். ஒரு யாத்திரை ப்ராம்மணன் பட்டரின் வேதாந்த உபந்யாஸத்தைக் கேட்டு வியந்து, மேல்நாட்டிலும் இவ்வளவு பெருமையுடைய வேதாந்தி உளனாகச் சொல்லி, மீண்டு போய் அவ்வேதாந்தியிடம் பட்டரைப் பற்றிப் பெருக்கச் சொன்னான். அவ்வேதாந்தி ஆறு மதத்துக்கு ஆறு ஆஸனமிட்டு அதன் மேலே யிருந்தோம்; நம்மினும் விஞ்சியவர் இருக்கிறாரா!' என்று திடுக்கிட்டிருந்தான். மறுபடியும் அந்த ப்ராம்மணன் ஸ்ரீரங்கம் வந்து, வேதாந்தியிடம் பட்டருக்கு எல்லா சாஸ்த்ரங்களும் வரும் என்று சொன்னேன் என்ன, பட்டரும் "ஐயோ! இவைகளெல்லாம் சாதாரணம்; நமக்குவிசேஷமாகத் திருநெடுந்தாண்டகம் தெரியும் என்று சொல்லவேண்டாமோ!'' என்று கூறினார். அப்படியொன்றுண்டோ என அதிசயித்த அவ்வந்தணன் வேதாந்தியிடம் சென்று இதைக்கூறினான். அவ்வேதாந்தி "திருநெடுந்தாண்டகம் என்கிற ஒரு சாஸ்த்ரத்தை நாம் கேட்டதில்லையே; அச்சொல்லுக்கே பொருள் விளங்கவில்லையே; பட்டர் எப்படிப்பட்ட வித்வானோ!'' என்று வியந்து மயங்கி யிருந்தான்.

## பட்டர் வேதாந்தியை ஜயித்தல்

அவ்வமயம் பட்டரும் உடையவர் நியமித்துப் போனதை எண்ணி, அவ்வேதாந்தியை நம் தரிசனத்தில் சேர்க்கவேணுமென்று பெருமாளிடம் அநுக்ரஹம் பெற்று அவரால் அனுப்பப்பட்ட சகல பரிகரங்கள் (திருச்சின்னம் ஊதுவார், கொடி பிடிப்பார், வாத்யம் முழங்குவார் முதலானவர்கள்) விருதூதி முன்னே செல்ல நம்பெருமாளின் புத்ரர் எனும் மதிப்புத் தோன்ற எல்லா ஆபரணங்களையும் அணிந்துகொண்டு மணிப்பல்லக்கிலே மேல் நாட்டுக்குப் பயணமானார். அங்கு சிறுபுத்தூரருகே காவேரிக்கரையில் தங்கி நீராடி நிற்கையில், பட்டர் எழுந்தருளினார் என்று கேட்டு அநந்தாழ்வான் அங்குவர, அவரைப் பட்டர் சாஷ்டாங்கதண்டன் ஸமர்ப்பிக்க, ஆழ்வான் பட்டரை வாரியெடுத்து அணைத்து ஸுகுமாரரான நீர் இப்படி வரவேணுமோ என்ன, வேதாந்தியை ஜயிக்க வேணும் என்னும் உடையவர் நியமனத்தைச் சொல்ல, ஆகில் வாரும் என்று பட்டரைத் திருநாராயணபுரத்துக்கு அழைத்துச் சென்றார். அங்கு பட்டர் கிரமமாக உடையவர் திருமேனி முதலாக எல்லோரையும் சேவித்து வேதாந்தியிருக்கும் இடத்துக்குப் பயணமானார். சகல விருதுகளும் சொல்லிக்கொண்டு வேதாந்தியுள்ள ஊருக்கு அருகாமையில் போகும்போது எதிரே வந்த இரு அந்தணர்கள், "நீங்கள் யார்? ஏதுக்காக இங்கு வந்துள்ளீர்கள்?" என்று கேட்க, வேதாந்தியிடம் தர்க்கம் செய்ய வந்தோம் என்ன, அவ்விருவரும் "ஆயின் இப்படிப் போகக் கூடாது; போனால் வாசலிலேயே சிஷ்யர்கள் வாதப்போர் பண்ணி உள்ளே புகவிடமாட்டார்கள்; வேதாந்தியைக் காணவிடாமலேயே பண்ணிவிடுவர். வேதாந்தி தனவானானகையாலே எல்லார்க்கும் அன்னதானம் நிதமும் செய்வர். அதனால் சத்திரத்தில் சாப்பிடப் போவது போல போகவேணும்; உள்ளே வேதாந்தி யிருப்பர்; நேரே பார்க்கலாம்" என்று உபாயம் சொல்லினர்.

உடனே பட்டரும் பிக்ஷு வேஷத்தோடே அநந்தாழ்வானையும் அழைத்துக்கொண்டு வஞ்சக வேஷத்தோடே சாப்பிடப் புகுவாரோடே உள்ளே புகுந்தார். அங்கே ஆறு ஆசனமிட்டு அதன் மேலே அமர்ந்திருந்த வேதாந்தியை நோக்கி நடந்தார். அவரைப் பார்த்த வேதாந்தி,

"பிக்ஷை அங்கே இடப்படுகிறது' என்றார். 'அந்தப் பிக்ஷைக்கு நாம் வரவில்லை; தர்க்க பிக்ஷைக்கு வந்தோம்' என்று பட்டர் கூறினார் வேதாந்திக்கு முன் அந்தணன் கூறியது நினைவு வர, 'நம்முடன் வாதப் போருக்கு இவ்வளவு தைரியமாக யாரும்வரமாட்டார்; இவர் பட்டராகக் கூடும்' என எண்ணி, 'நீர் பட்டரோ?' என்ன, 'ஆம்' என்று பட்டர் தம்முடைய பிக்ஷு வேஷத்தைக் களைந்து வாதிக்கப் புக, வேதாந்தியும் பட்டரின் வாக் வன்மையைக் காணவேணுமென்று பதில் வாதம் செய்ய, யானையும் யானையும் மோதுவது போலே ஒன்பது நாள் இருவரும் வெற்றி தோல்வியில்லாமல் வாதம் செய்தனர். பத்தாம் நாள் பட்டர் மாயா வாதத்தை அநேக விதமாகக் கண்டித்து விசிஷ்டாத்வைதத்தை நிலைநாட்டி உபந்யஸிக்க, வேதாந்தி எழுந்து நின்று நடுங்கி வணங்கி, "உறங்கும் பெருமாளான அவரும் நடையாடும் பெருமாளான நீரும் வேறு வேறல்ல; நும் முன் அடியேன் வாய் திறக்கவோ!" என்று விழுந்து வணங்கி அடிமை கொள்ள வேண்டினார்.

பட்டரும் அவரைப் பஞ்ச ஸம்ஸ்காரம் முன்னாகத் திருத்திப் பணி கொண்டார். ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்த அர்த்தச் சிறப்பையெல்லாம் அருளி, அருளிச்செயலிலேயும் பெருமைப்படுத்தினார். பிறகு, அவ்வேதாந்தியைப் பார்த்து, "நீர் இங்கேயே ததியாராதனம் செய்து கொண்டு மாயாவாத மதத்தை வாஸனையோடே மறந்து விசிஷ்டாத்வைதமே பொருளாகக் கொண்டு ஸ்ரிய:பதியைப் பற்றியுள்ள ராமாநுஜ ஸித்தாந்தத்தையே ஏற்று நடத்திக்கொண்டு வாரும்; நாம் ஸ்ரீரங்கம் புறப்படுகிறோம்" என்று புறப்பட, பட்டருடைய அனைத்துப் பரிகரமும் வந்து சேர, முன்போலே எல்லா அலங்காரங்களையும் புனைந்து வாத்யம் முழங்கப் பல்லக்கிலேறினார். "இப்படிப்பட்ட வைபவமுடைய இந்த ஸ்ரீமாந் காடு, மலை கடந்து இத்தனை தூரம் நடந்து வந்து நித்ய ஸம்ஸாரியாகிய அடியேனுடைய துர்கதியையே பற்றி அங்கீகரித்ததே!" எனக் கலங்கினார் வேதாந்தி. மறுபடியும் பட்டர் திருவடிகளில் விழுந்து வணங்கி கண்ணீருகுத்து, தம்மை அடிமைக் கொள்ளப் பட்டர் பட்ட நிலைகளையெல்லாம் கூறி, இச்செயலை நினைத்தால் அடியேனால் ஆறியிருக்கப் போகாதே எனக் கலங்க, பட்டர் தேற்றி நிறுத்திப்

பயணமானுர். முன்போலவே அநந்தாழ்வான் முன்னுகத் திருநாராயணபுரம் சென்று வணங்கிப் புறப்பட்டு அநந் தாழ்வானைச் சிறுபுத்தூரில் நிறுத்தி ஸ்ரீரங்கம் அடைந்து முன்போலவே அர்த்தங்களை யருளிக்கொண்டிருந்தார்.

## வேதாந்தி நஞ்ஜீயராதல்

வேதாந்திகள் திருமாலடியார்களைப் பூசித்துக்கொண் டிருந்தார். ஒருநாள் இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் வேதாந்திகளின் வீட்டில் பசிக்கு உணவு கேட்டனர். வேதாந்திகளுக்கு இரு மனைவியர். அவர்கள், "உங்கள் வேதாந்திகள் ஸ்நானத்துக்குப் போயுள்ளார். இங்கே உணவில்லை' என்றனர். அவ்வைஷ்ணவர்கள் வேதாந்தி களிடம் இதைக்கூற வேதாந்தி மிக வருந்தி தம் தனத்தை மூன்று பங்குகளாக்கி இரு மனைவியர்க்கும் இரண்டு பங்கு களைக் கொடுத்து அவர்களை விட்டு நீங்கி மீதி ஒரு பங் கைத் தாம் கொண்டு, இல்லறமின்றேல் துறவறம் என ஸந்யாஸியாகி ஸ்ரீரங்கத்துக்குப் பட்டரைச் சேவிக்கப் புறப்பட்டார். இடையில் அநந்தாழ்வானைச் சேவிக்க, 'வேர்த்தபோது குளித்துப் பசித்த போது புசித்துப் பட்டர் திருவடிகளே சரணம் என்றிருந்தால் பரம பதத்தில் தள்ளுவாருண்டோ!' என்று கூறி அநந்தாழ் வான் அநுமதி தரப் பயணமாகி ஸ்ரீரங்கத்தை யடைந்து, பட்டரிடம் தாம் கொண்டுவந்த தனத்தைத் தம்முடைய தென்ற அபிமானமில்லாமல் பட்டருடையதாகச் சமர்ப் பித்துத் தம்மைப் பிரியா வடிமை கொள்ளவேணும் என்று வணங்கினுர். பட்டரும் அவரின் வைராக்ய நிலை யறிந்து அவரை, "நம் ஜீயரே!" என்று வாரி அணைத்துக் கொண்டார். அது முதல் வேதாந்திக்கு நஞ்சீயர் என்ற திருநாமம் ஓங்கிற்று. பட்டரும் நஞ்சீயருக்கு எல்லா அர்த்தங்களையும் உபதேசித்துப் பிரியாமல் வைத்துக் கொண்டார்.

ஒரு சமயம் நஞ்ஜீயர் இரண்டாற்றுக்கு நடுவே பெரு மாள் ஏன் பள்ளிகொண்டான் என்று கேட்க, "யானை கூவின பிறகு மடுவின் கரைக்கு வந்தான்; இங்கு நான் கூப்பிடுவதற்கு முன்பே எனக்காக வந்து காத்துக் கிடக் கிறுன்" என்று சொல்லி ஞானிகள் பகவானின் செயலைத் தமக்காகவே என்று எண்ணுவரென்பதை வெளிப்படுத்தி னுர்.

## நஞ்ஜீயரின் ஆசார்ய நிஷ்டை

நஞ்ஜீயர் பட்டரின் பல்லக்கைத் தூக்கப் புக, ஸந்நியாஸியான அவர்க்கு அது தகாதெனப் பட்டர் தடுக்க, ஆசார்ய கைங்கர்யத்துக்கு இடைஞ்சலாக வர்ணாசிரம தர்மமான ஸந்யாஸமிருக்குமாகில் அதை விட்டு விடுகிறேன் என்று கூறி, ஆசார்ய கைங்கர்யத்துக்கு விரோதமான வர்ணாசிரம தர்மம் விடத்தக்கது என்பதைத் தெரிவித்தார். மேலும் நந்தவனம் அமைத்து அதன் பூக்கள் பட்டர் குடும்பத்துக்கும் போகத்தான் பெருமாளுக்கு என்று சொல்லி ஆசார்யனுக்காகத்தான் பகவத் கைங்கர்யமும் என்பதையும் சுட்டினார்.

பட்டர் நஞ்ஜீயருடன் சேதுஸ்நானம் செய்து திரும்புகையில் பாதிரி என்னும் கிராமத்தில் பொழுது போனமையால் ஒரு வேடன் வீட்டில் தங்க வேண்டியதாயிற்று. வேடன் அவர்க்கு ஒரு கட்டில் தந்து அமரச் செய்தான். அதைப் பட்டர், 'நம்மை யொன்றும் அறியாதான் தன் வாசலுக்கு வந்ததொன்றே காரணமாக இது செய்தானே! ஈசுவரன் (ஸ்ரீமந் நாராயணன்) தன் அபிமானத்திலே ஒதுங்கினாரை என்ன நினைத்திருப்பனோ!' என எண்ணினார். மேலும் வேடனிடம் ஏதும் இன்று விசேஷமுண்டோ? என்றார். அவனும் "வேட்டையில் முயல் குட்டியைப் பிடித்தேன்; அதன் தாய் என் முன்னே வந்து கும்பிட்டுக் கிடந்தது; அது கண்டு மனம் நெகிழ்ந்து குட்டி முயலை விட்டு விட்டேன்" என்றான். பட்டர் நஞ்ஜீயரைப் பார்த்து, "முயலுக்குச் சரணாகதியைக் கற்றுத் தந்தவரார்! வேடனுக்குச் சரணாகத ரக்ஷணத்தை உபதேசித்தவரார்! அறியாமலேயே சரணாகதி பலன் தருவதே! இதுவும் ஒரு ப்ரமாண மன்றோ! என்றருளினார்.

வீரசுந்தர ப்ரஹ்மராயன் கூரத்தாழ்வானுடைய சிஷ்யன். அவன் பெருமாளுக்கு மதிள் கட்டினான். இடையில் பிள்ளைப்பிள்ளையாழ்வான் திருமாளிகை குறுக்கிட்டது. திருமாளிகையை இடிக்கவேணும் என்றான். பட்டர், 'பெருமாளுக்கு மதிளல்ல ரக்ஷகம்; அவருடைய மங்களாசாசனமே ரக்ஷகம்; அதனால் திருமாளிகையை அப்படியே விட்டு மதிளை ஒதுக்கிக் கட்டு' என்றார். அவன் கேளாமல் மாளிகையை இடித்து மதிளை நேராகக் கட்டினான். இது காரணமாக ஆசார்யரின் குமாரர் என்ற பயமுமின்றியே

பட்டருக்குப் பல உபத்ரவங்கள் தந்தான். அதனால் பட்டர் திருக்கோட்டியூருக்கு எழுந்தருளினார். வழியில் களைத்துப்போய் நஞ்சீயரை இன்னும் காணோமே என நினைக்க, நஞ்சீயரும் 'ஸ்வாமி, ஸ்வாமி' என அழைத்துக் கொண்டு ஆகாரம் கொண்டுவர, பட்டர் மிகவு முகந்து மேலும் சீயரைக் குளிர நோக்கினார். ஆசார்யனைத் தொடர்ந்து நிற்பது ஆசார்யரின் கிருபையை உண்டாக்கு மென்பதாயிற்று.

திருக்கோட்டியூரி லிருக்கும்போது ஒரு ஸ்ரீவைஷ்ணவர் திருவிருத்தத்துக்கு அர்த்தம் சொல்லியருள வேண்டு மென்று பட்டரைக் கேட்க, அவர் நஞ்சீயரைப் பார்த்து, 'சீயா! எனக்குப் பெருமாளைப் பிரிந்த சோகம் வாய் திறக்க முடியவில்லை; நீர் இவர்க்குப் பொருள் சொல்லும் என்று சொல்லிப் பிரிவாற்றாமையை வெளியிட்டார்.

வீரசுந்தர ப்ரஹ்மராயன் இறந்து போனான். இவ் விஷயத்தைப் பிள்ளைப்பிள்ளை யாழ்வான் திருக்கோட்டி யூர் வந்து பட்டருக்கு அறிவிக்கப் பட்டரும் மிகவும் உகந்து அவர் திருவடிகளைத் தலைக்கு அணியாக்கிக் கொண்டார். உடனே திருவரங்கத்துக்குப் பயணமானார்.

அந்த வீரசுந்தர ப்ரஹ்மராயன் இறந்ததைக் கேட்டுப் பட்டரின் தாயாரான ஆண்டாள் கதவைத் தாளிட்டுக் கொண்டு கோ வென அழுதாள். அது கேட்டு, 'பட்டரின் விரோதி போனான் என்று ஆநந்தப்படுகை விட்டு அழுவ தேன்' என மற்றவர்கள் வினவியதற்கு ஆண்டாள், ""ஆசார்ய புத்ரரான பட்டரிடம் பிழை செய்தவனை அவன் இன்னும் சிலகால மிருந்தால் திருந்தலாம்; இல்லை யேல் இவ்வுலக இன்பங்களையாவது நுகரலாம்; இவ்வுலக மும் அவ்வுலகமுமின்றி ஆழ்வான் சிஷ்யன் நரகம் புகு வதே! எனக் கதறுகிறேன்'' என்றாள். இதனால் குற்றம் செய்தவர்கள் பக்கலிலும் ஹிதம் நாடும் தயையை வெளி யிட்டாள்.

## பட்டர் அறிவுரைகள்

ஒரு சமயம் பட்டர் வீரசிகாமணிப் பல்லவராயனுக்கு கடற்கரையை நினைத்திரும்என்று தஞ்சமான ஒரு பொரு ளைச்சொல்லி, லங்கையின் கரையில் பெருமாளை (ராமனை) நாம் காக்கக் கடவோமென்ற வானரச் சைந்யம் நடந்த

களைப்பிலே தூங்கிவிட, பெருமாளும் இளையபெருமாளும் வில்லெடுத்து வளையவந்து அச்சைந்யத்தைக் காத்தாரல்லவா! அதனால் உணராது உறங்குகிறபோது காக்குமவன் அவனை யுணர்ந்தால் நிச்சயம் அவனே காப்பான் என்று உணர்த்தினார்.

த்ரிபுவன வீரதேவராயன் பட்டர் பெருமையை எண்ணி அவருக்குப் பகுமானம் தரவெண்ணிப் பட்டரைத் தனனிடம் வரச் சொன்னான். பட்டர், "பெருமாள் அஞ்சல் என்று கையை மறுத்தாலும் (அவன் கைவிட்டாலும்) அவன் திருவடிகள் தவிர வேறு வழியுண்டோ!" என்றார். தன் காப்புக்காக (ரக்ஷணத்துக்காக) ஸ்ரீவைஷ்ணவன் பகவானைத் தவிர வேறு வாசலை நாடக்கூடாது என்பதாயிற்று.

பெருமாள் திரைக்குள் எழுந்தருளியிருக்கையில் பட்டர் தொழப்புக, கைங்கர்யபரர் பட்டர் என்று பாராமல் கடுஞ் சொற்களால் பேசினார். அருகிருந்தார் அவர்களைப் கடியப் புக, வேண்டாம் என்று பட்டர் தடுத்து, "என் குற்றங்களைப் பெருமாளிடம் நானும் சொல்லிற்றிலன்; அவனும் கேட்டிலன்; இவர்களேனும் என் குற்றங்களை யெல்லாம் சொல்லுகிறார்களே! என்று நான் இசைந்திருக்க உங்களுக்கென்?" என்றார். இதனால் பகவானிடம் தனனுடைய தோஷங்களைச் சொல்வது, பகவானுடைய குற்றங்களைக் குணமாகக் கொள்ளும் வாத்ஸல்ய குணம் வெளிப்பட்டு நம்மை அங்கீகரிக்கைக்கு ஏதுவாகும் என்று எண்ணவேண்டுமென்பதாம்.

பட்டரிடம் ஒருஸ்ரீவைஷ்ணவர் திருவாராதன முறையை வேண்ட, பட்டரும் எம்பெருமானார் அருளிய 'நித்யம்' என்ற முறையை, அதாவது நெடுநேரம் (ஒரு யாம காலம்) செய்யவேண்டிய முறையை அருளினார். அவ்வைஷ்ணவரும் அப்படியே செய்துவந்தார். இரண்டொரு நாள் பட்டருடைய திருவாராதன முறையைக் கவனித்தார். பட்டர் காலைக் கடன்களை யெல்லாம் முடித்துக் கொண்டு இலையில் உண்கைக்கு பிரசாதம் பரிமாறியவுடனே பெருமாளைக் கொண்டுவரச் சொல்லி, அவர்கள் பெருமாளைக் கையிலேயே வைத்திருக்க, இலையிலுள்ள பிரசாதத்தையும் குடிநீரையும் பெருமாளுக்குக் கண்டருளப் பண்ணித் தாம் உண்டார். இதைக் கண்ட வைஷ்ண

வர் காரணம் வினவ, ''ஸாஸ்த்ரங்களை ஆராய்ந்தால் உமக்கு அந்த திருவாராதன முறை தவிர வேறு தெளிய வில்லை; எனக்கு இப்படியொழிய வேறு தெரியவில்லை'' என்று பட்டர் பதில் கூறினார். நன்மையை விரும்புகிற ஆசார்யன் சிஷ்யனுக்கு அவனது ஞானத்துக்குத் தக்க வாறு பகவானைத் தவிர வேறு விஷயங்களிலே திரிகிற நிலை மாறி பகவான விஷயத்திலேயே ஆசை மிகும்படி அவனைத் திருத்தும் என்பதும், சதா பகவான் விஷய மாகவே போது போக்குகிற 'ஞானம் மிக்கார்' நிலையை மற்றவர்கள் அறியமாட்டார்கள் என்பதும் தெளிவாகும்.

பட்டருடைய தாயார், பட்டர் அறிந்தால் சம்மதிக்க மாட்டாரென்று ஒரு ஸ்ரீவைஷ்ணவரைக் கொண்டு பட்ட ருடைய திருவடி தீர்த்தத்தை ஏற்று வருவார். இப்படிச் செய்யலாமோ என்று ஒருவர் கேட்க, ''கண்ணபுரம் கை தொழும் பிள்ளையைப் பிள்ளை என்று எண்ணப்பெறு வரோ! என்கிறபடி தான் பண்ணின விக்ரஹத்தின் தீர்த் தம் ஸ்வீகார்யமாகாதோ!'' என்று பதில் சொன்னாள்.

ஒரு நாள் பட்டரை அடைந்த சிஷ்யர் ஒருவர் ஸஹ வாஸ தோஷத்தாலே கலங்கி பட்டரிடம் 'உமக்கும் நமக் கும் பணியில்லை' என்ன, அவரிடம் நீர் விட்டாலும் நாம் விடமுடியுமோ என்று பலாத்கரித்து அவரைத் திருத்திப் பணி கொள்ள, அவரும் திருந்தி விரக்தராய் பட்டரை விடாதே யிருந்தார். இதனால் ஸதாசார்யன், தன்னை யடைந்தவன் ஆசார்யனை விட்டாலும் ஆசார்யன் அவனை விடாது நின்று காக்கும் என்பது தெளிவு.

பட்டரும் அடியார்களும் கூடி பகவானுடைய கல் யாண குணங்களை அநுபவித்துக்கொண்டிருந்தனர். 'நாம் பண்ணின புண்யமன்றோ இப்படிக் கூடியிருப்பது' என்று ஒருவர் சொல்லச் சிறியாச்சான் என்பவர் 'நீண்ட நாளா கப் பெருமாள்தான் ரக்ஷகன் என்று அறுதியிட்டிருக்க, இப்போதாக இந்த புண்யம் என்று ஒரு தேவனுண்டோ!' என்றார். இதனால் அடியார்களுக்கு எல்லா நன்மைகளையும் ஈசுவரனே செய்கிறனைகையால் நாம் பண்ணின புண்யம் என எண்ணுகை பழவடிமையான நிலையைக் குலைத்து விடும் என்றபடி.

பட்டர் பெருமாளுக்குத் திருவாலவட்டம் (விசிறி) வீசிக்கொண்டிருந்தார். சந்த்யாவந்தனத்துக்குக் காலம்

தப்புகிறது என்று அடியார்கூற, பகவானுக்குத் தொண்டு செய்யும்போது காலந் தப்பிய தோஷம் வராது என்று பட்டர் அருளினார்.

பட்டருடன் அநேக வித்வான்கள் ஒன்று சேர்ந்து வாதிட அவர்களை யெல்லாம் பட்டர் வென்றார். அதனால் அவருடைய ஸர்வஜ்ஞதையை (எல்லாவற்றையும் உணரும் தன்மையை)ப் பரீக்ஷிக்க எண்ணி அவ்வித்வான்கள் ஒரு குடத்தில் பாம்பை இட்டு மூடி, 'இதிலென்ன இருக்கிறது' என்று பட்டரைக் கேட்க, அவரும் 'திருவெண் கொற்றக்குடை யுளது' என்ன, 'இது வெண்கொற்றக் குடையோ!' என நகைத்துப் பாம்பை வெளியே விட, 'சென்றால் குடையாம் என்று ஆழ்வார் அருளவில்லையோ!' என்று பட்டர் சொல்ல, அது கேட்டு அவருடைய எல்லாம் உணரும் தன்மைக்கு வியந்து போயினர்.

எம்பெருமானாரின் அநுமதியால் திருக்குருகைப் பிரான் பிள்ளான் செய்தருளிய **'ஆறாயிரப்படி'** என்கிற திருவாய்மொழியின் உரையைப் பட்டர் நஞ்சீயருக்கு நன்றாக உரைத்தருளினார். இதை நன்றாக அறிந்த நஞ்சீயர் பட்டரின் அநுமதி பெற்றுத் திருவாய்மொழிக்கு **ஒன்பதினாயிரப்படி** என்கிற உரையை எழுதிக்கொண்டிருந்தார்.

## பட்டருக்குப் பரமபதம்

இச்சமயம் பட்டருக்கு வயது இருபத்தெட்டு. அவர் ஒரு கைசிக த்வாதசி (கார்த்திகை மாதச் சுக்லபக்ஷ த்வாதசி) யன்று பெருமாள் முன்னிலையில் கைசிக மாஹாத்ம்யத்தை வாசித்துக் கொண்டிருக்கையில் அதிலுள்ள ஒரு பதத்துக்கு அநேக விதமாகப் பொருளை விளக்கிக் கொண்டிருந்தார். அதைக் கேட்டுக்கொண்டிருந்த பெருமாள் மிகவும் ஆநந்த மடைந்து பட்டருக்கு எல்லாப் பெருமைகளையும் கொடுத்து அதிலும் திருப்தி யடையாமல், "பட்டரே! உமக்கு மேல்வீடு (பரமபதம்) தந்தோம்!' என்று வாய் மலர்ந்தான். அது கேட்டு பட்டரும் ""மஹா ப்ரஸாதம்"" என்று அங்கீகரித்தார். அங்கு குழுமியிருந்த அத்தனைபேரும் இடி விழுந்தது போலே கலங்கினார்கள். 'பெருமாள் தான் ஆநந்தத்தால் அருளினாலும் தாங்கள் இசையலாமா?' என வேதனையோடு பட்டரைக் கேட்க, அவரும் ""அடியேன் செய்வதென்; இவ்வுலகம் பாக்யம் செய்யவில்லையே! இன்னும் சிறுகாலம் அடியேன் இங்கிருப்பின்

பரமபதத்துக்குச் சுருள்படி கட்டமாட்டேனோ!'' என்றருளினார்.

பின்பு பட்டர் பெருமாளிடம், 'பெருமாளே! பரமபதத்தில் தேவரீருடைய சேவை இங்கு போலே இல்லையெனில் அங்கிருந்து ஒரு மூலையை முறித்துக்கொண்டு இங்கே குதித்து விடுவேன்' என்று அழகிய மணவாளனின் திருமேனியில் ஈடுபட்டுக் கூறி, பெருமாள் அருளிய வரிசைகளோடும் அடியார் குழாங்களோடும் சூழத் தம் திருமாளிகை புகுந்து தம் தாயாரான ஆண்டாளம்மைக்குத் தண்டனிட, அவரும் நலமந்தமில்லதோர் நாடு புகுவீர்!'' என்ன பட்டரும் 'அம்மா! அடியேன் வேண்டுவது ஈதே' என அங்கீகரித்திருந்தார்.

எப்போதையும்போலே திருநெடுந்தாண்டகத்துக்குப் பொருள் விளக்கிக் கொண்டிருக்கையில், "அலம் புரிந்த நெடுந் தடக்கை என்னும் பாசுரத்தில் "அஞ்சிறைப்புள் தனிப்பாகன்' என்கிற விடத்தே 'பறவை ஏறும் பரம்புருடா! நீ என்னைக் கைக்கொண்டபின் பிறவி என்னும் கடலும் வற்றிப் பெரும்பத மாகின்றதால்' என்று இரு முறை அநுசந்தித்துத் தலைமேல் கை கூப்பிக்கொண்டு பரமபதத்துக்கு எழுந்தருளினார்.

கடல் கலங்கியது போலே அனைவரும் கலங்கினர். நஞ்ஜீயர் மூர்ச்சித்துக் கீழே விழுந்தார். பெருமாள், 'ஐயோ! நம் வாய் கோணிற்றே' என்று நொந்து, "புத்ரனை இழந்தோமே' என்று கலங்கினான். தாயாரான ஆண்டாள், "உடையவன் உடைமையைக் கைக்கொண்டால் நாம் வெறுக்கலாமோ?' என்றிருந்தார்.

நஞ்ஜீயர் முதலான பெரியோர்கள் பட்டரின் திருத்தம்பி சீராமப்பிள்ளையைக் கொண்டு ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்காரம் செய்தனர். இது முடிந்து ஸ்நாநம் செய்து மீளும்போது நஞ்ஜீயர் முட்டாக்கிட்டுத் தம்மை மூடிக் கொண்டு புழக்கடை(பின்புறம்)வழியாகத் தம் மடத்தை அடைந்தார். இதற்குக் காரணம் என்ன என்று கேட்க, 'புதுக்க அறுத்த விதவை தெருவிலே வெளிப்படலாமோ' என்று பதில் கூறினார். நல்லாசிரியனிடத்துச் சீடன் பார்யை போலே இருப்பன் எனக் காட்டினார்.

சீராமப்பிள்ளை, பட்டரில்லாத திருமாளிகையைக் கண்டு "இல்லம் வெறியோடிற்றே' என்று கதறி அழ அது

பார்த்து ஆண்டாள், 'இவர் ஆழ்வான் திருவயிற்றில் பிறக்கத் தக்கவரல்லர்' என்று வெறுப்புடன் கூறிச் சீராம பிள்ளையை விளித்து, 'பட்டர் பெற்ற பேற்றுக்குப் பொறுமல் பங்காளித் தன்மையைக் காட்டுகிறீரோ; நாளுருத்தி கிடக்கிறேனே! நினைவில்லையோ?' என்று கூறப் பிள்ளையும் துணுக்கென எழுந்து வணங்கிப் பிழை பொறுத்தருள வேண்டினார்.

எம்பெருமானாரின் பெருமைகள் போலே பட்டருடைய பெருமைகளும் சொல்லி லடங்கா. பெரியோர்களும் தெரிந்தவரை சொல்கிறோம் என்றன்றோ கூறுவது.

## நஞ்ஜீயர், நம்பிள்ளை வைபவம்

பிறகு நஞ்ஜீயர் பட்டர் நல்லருளால் திருவாய் மொழிக்கு ஒன்பதினாயிரப்படி பொருளை முற்றச்செய்து,



'இதை நன்றாக எழுதித் தர வல்லாருண்டோ?' எனத் தம்மை யடைந்தாரைக் கேட்க, அவர்களும் 'இங்கே பலகாலம் வருகிற **நம்பூர் வரதராஜர்** என்பார் நன்றாக எழுதுவர்' என்றார்கள். சீயரும் அவரை அழைத்து எழுதிக் காட்டச் சொல்ல, எழுத்து முத்துப் போல இருந்தது கண்டு உகந்து, "ஆயினும் இவர் பஞ்ச ஸம்ஸ்கார மாத்ரத்தாலே வைஷ்ணவரா யிருக்கிறார்; இது திருவாய்மொழி வ்யாக்யானம்; இவரைக் கொண்டு எப்படி எழுதுவிப்பது? நலல ஸம்ப்ரதாய ஞானமுள்ள வரைக் கொண்டன்றோ எழுதுவிக்கவேணும்' என்று நினைக்க, இக்குறிப்பறிந்து நம்பூர் வரதர் ஜீயரிடம் "அடியேனைப்பாங்காகத் திருத்திப் பணிகொண்டாலாகாதோ' என்ன, நஞ்ஜீயரும் அப்படியே அவருக்குப் எல்லாப் பொருள்களையும் அருளித் திருத்திப் பணி கொண்டு தாம் அருளிய திருவாய்மொழி வ்யாக்யானத்தையும் ஒருமுறை

அவருக்கு உரைத்து, "இப்படியே தப்பாமல் எழுதித் தாரும்' என்று அதை அவரிடம் தந்தார்.

அதைப் பெற்றுக்கொண்டு வரதரும் தம் அகத்தில் சென்று எழுதிக் கொண்டு வருவதாக விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டார். காவேரியைக் கடக்கும்போது ஓரிடத்தில் நீந்திச் செல்லவேண்டியிருந்தது. அதனால் அந்தப் பட்டோலையை (உரை எழுதியிருந்ததைத் தலை யிலே கட்டிக்கொண்டு நீந்தினார். ஓலை நழுவிக் காவேரி யில் விழுந்துவிட்டது. கரையேறிப் பார்த்தபோது இல் லாதது கண்டு வேதனைப்பட்டார். பிறகு ஒருவாறு தேறி ஆசார்யரிடம் ஒரு தடவை கேட்டிருந்த நினைவைக் கொண்டு ஒன்பதினாயிரப்படி உரையை எழுதி முடித்தார்.

## நம்பூர் வரதர் 'நம்பிள்ளை' ஆனார்

அவர் தமிழில் நல்ல புலமை பெற்றிருந்தமையால் அங்கங்குத் தக்க விளக்கங்களும் குறிப்புக்களும் அவ்வுரை யில் சேர்த்திருந்தார் அதை எடுத்துக்கொண்டு வந்து ஆசார்யரான நஞ்சீயரிடம் கொடுத்தார். சீயரும் அதைப் பார்த்து எல்லாம் தாம் செய்தது போலவே இருக்க ஆங் காங்கே விளக்கங்கள் பல சேர்க்கப்பட்டிருந்தன கண்டு உகந்தார். "இதுவென்?' என வரதராஜரைக் கேட்டார். வரதர் பயந்து ஒன்றும் சொல்லாமலிருக்கச் சீயரும் "பயப்படாமல் சொல்லும்; இது மிகவும் அழகாயிருக் கிறது' என்ன நம்பூர் வரதரும் நிகழ்ந்தவற்றைக் கூறி ஒருரு அருளியதைக் கொண்டு இதை எழுதினேன் என்று விண்ணப்பித்து நின்றார். சீயரும் அவரின் புத்தி விசேஷத் துக்கு வியந்து அவரைச் சேர்த்து அணைத்துக்கொண்டு மிகவும் உகந்து, **'இவர் நம்முடைய பிள்ளை கலிகன்றிதாஸர்'** என்று திருப்பெயர் சாற்றி அவரைத் தம் அடிவாரத்தி லேயே வைத்துக்கொண்டு எல்லா அர்த்தங்களையும் அநுக்ரஹித்தார். அவரும் தேவு மற்றறியாதவராய் இருந்தார். நஞ்ஜீயர் நம்முடையபிள்ளைஎன்று அபிமானித் ததால் அன்றுமுதல்நம்பூர் வரதர் நம்பிள்ளை எனவழங்கப் பட்டார்.

## நஞ்ஜீயர் அருள்மொழிகள்

ஒருநாள் நம்பிள்ளை நஞ்ஜீயரிடம் "வேறு உபாயங் களான கர்ம ஞான பக்திகளுக்கு ப்ரமாணங்கள் அதிக

மாய் அவற்றை அநுஷ்டிக்கிறவர்களும் அதிகமாயிருக்க, இந்த பரபத்தி (சரணாகதி) மார்கத்துககு மட்டும் பரமாணமும சுருக்கமாய அநுஷ்டிககிறவர்களும் சுருக்கமா யிருப்பதறகுக காரணமெனன மேலும்? அவற்றிற்கு ருஷி சநதஸ தைவம் முதலானவை அநுஸநதிகக வேணடியிருகக, இதுக்கு அதினறியே இருப்பது ஏன்?'' என்று கேட்டார். அதறகு நஞ்ஜீயா ''ஆறறில அமிழ்கிறவன 'காப்பாற்று' எனறு கூவவும் இவனை மறறெருவன் காப்பாற்றவும ப்ரமாணம் வேணடுமோ! இயற்கையாக நிகழ்வனவல்லவோ! அதுபோலவே பிறவிப பெருஙகடலில அமிழந்தவன் கூரையேற வேண்டுமென்று கரையேற்று மவனைக கூவிக் கார்யங் கொள்ள பரமாணம் வேணடுவதில்லை; வேணடுமெனறாலும், முமுக்ஷுர்வை சரணம் அஹம் ப்ரபத்யே'' (மோக்ஷமடைய விரும்புகிற நான் (பிரமனைப் படைத்தவனும் வேதங்களை யருளியவனுமான பரமபுருஷனை) தஞ்சமடைகிறேன்). ''தஸ்மாந் நயாஸ மேஷாம் தபஸாம் அதிரிக்தமாஹு:' (ஆகையால, இநதத் தபஸுக்களிலெல்லாம் மிகவும்சிறந்ததாக சரணாகதியைச் சொலகிறார்கள) என்று பல ப்ரமாணங்க ளிருக்கின்றன. இனி ஆள சுருக்கத்தை நினைககில், உலகில் எல்லோரும் அவரவர் நிலையிலிருக்க நாலிரண்டு பேர் துறவிகளானால், அந்தநாலிரண்டு பேருக்குப் பெருமை குறைந்து அநேகம் பேரான மறறவாகளுக்குப் பெருமை மிக்கிருக்குமென்று கொள்ளலாமோ! இதுபோலே உயர்ந்த நிலைக்கு ஆள் சுருக்கநதானிருககும. த்வயத்துக்கு (மந்தர விசேஷம) ''ருஷ்யாதீமச்ச கரந்யாஸம் அஙகநயாஸம்ச வர்ஜயேத'' (ருஷிசந்தஸதைவம முதலானவைகளையும் கரந்யாஸம முதலானவைகளையும் விடவேணடும்) எனகிறபடி ரிஷி சந்தஸ் தேவதைகளெல்லாம் வேணடுவதில்லை. சப்தத்தில் நோக்குடையவர்களுக்கு (உபாஸனை செய்பவர்களுக்கு)த் தான் இவைகளெலலாம் வேண்டும்; சரணாகதி நிஷ்டன ஆததததையே நோக்கி நிறகிறவனாகையாலே இவை தேவையிலலை, இதுவே எனக்குக கருத்து'' என்று அருளிச் செயதார். நம்பிள்ளைகளும் சந்துஷ்டரானார்.

"ஒருவன தனக்கு ஸ்ரீவைஷ்ணவத்வம (ஸ்ரீவைஷணவனாயிருககுந்தன்மை) உண்டெனறு அறிவதுஎப்படி? எனறு நஞ்சீயரைககேட்க, ''ஆச்சாவதாரத்திலே பரத்வ புததியும (அர்ச்சா மேனியும் பரவஸ்துதான என்ற எணணம்)

தன் சொந்தப்பிள்ளை முதலானோரிடம் உண்டாகும் அன்பின் அளவாகிலும் ஒருஸ்ரீவைஷ்ணவனிடம் அன்பு பிறக்கையும், ஒரு வைஷ்ணவன் கோபித்து வார்த்தை சொன்னால் அந்த வார்த்தை தனக்கு ஆநந்தமாயிருக்கையும் உண்டானால் ஸ்ரீவைஷ்ணத்வ முண்டென்று அறியலாம்'' என்று பிள்ளைக்கு அருளினர்.

''அவதாரங்கள் எதற்காக?'' என்று கேட்ட நம்பிள்ளைக்கு நஞ்ஜீயர், ''பாகவதாபசாரம் பொறுமைக்காக; பாகவத அபசாரந்தான் 'கடல்மல்லைத் தலசயனத் துறைவாரைக்கொண்டாடும் நெஞ்சுடையாரவர் எங்கள் குல தெய்வமே' என்று பாகவதனைக் கொண்டாடாமல், தன்னைப் போலவே சாமாந்யமாக நினைக்கை'' என்றருளினார்.

பகவானை அநுபவிப்பவனுக்கு இல்லற இன்பத்தில் தொடர்பு கூடாது. ஆழ்வார்கள் ஒரு மிடறாகப் பல விடங்களிலும் விஷயாநுபவத்தைக் காறி யுமிழ்ந்து பகவதநுபவத்தையே வேண்டுகையாலே என்று நம்பிள்ளைக்கு நஞ்சீய ரருளினார்.

நம்பிள்ளையும் செய்து முடித்த வேள்வியரைப்போலே நஞ்சீயருக்குப் பிரியா அடிமை செய்திருக்க, நஞ்சீயரும் நூறு முறை திருவாய்மொழிக்கு அர்த்தம் அருளியதாலே அவருக்கு நம்பிள்ளை சதாபிஷேகம் பண்ணினர்.

## நம்பிள்ளை ப்ரபாவம்

நஞ்சீயரைக் காட்டிலும் நம்பிள்ளைகளிடம் எல்லா அர்த்தங்களும் குடிபுகுந்திருந்தன. விளக்கில்கொளுத்தின பெருவிளக்குப் போலே நம்பிள்ளை விளங்க, அது கண்டு சீயர் மிகவும் உகந்து, செய்து முடிக்கவேண்டுவதை முடித்தது போலே மகிழ்ந்திருந்தார். நம்பிள்ளை திருவடிகளைப் பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, பின் பழகிய பெருமாள் ஜீயர், ஈயுண்ணி மாதவப்பெருமாள் முதலான அநேகம் பேர் அடைந்திருந்தனர்.

இவர்களிலே பின்பழகிய பெருமாள் ஜீயர் (ஸந்யாஸி) நம்பிள்ளை திருவடிகளிலே வழுவிலா எல்லா வடிமைகளையும் பிரியாது செய்து வந்தார். ஒரு சமயம் அவர் நோய் வாய்ப் பட்டார். அதனால் அவர் தமக்கு மிகவும் வேண்டியவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களிடம், "அடியேன், இப்

போதைக்குப் பரமபதிக்கக் கூடாது; அதனால் நீங்கள் பெருமாளிடம் 'ஏழை ஏதலன்', 'ஆழி எழச் சங்கும்' என்னும் பதிகங்களையும் விண்ணப்பித்து வேண்டிக்கொள்ளுங்கள்'' என்று கேட்டுக்கொள்ள, அவர்களும் அப்படியே செய்து அவரும் நோயினின்றும் நீங்கினார்.

இதை யறிந்த சில ஸ்ரீவைஷ்ணவர்கள் நம்பிள்ளைகளிடம் 'வயதிலும் ஞானத்திலும் மூத்தவரான இவர் ஆத்ம நிலைக்குச் சேராத, தனக்கென ஒரு ப்ரயோஜனத்தைப் பெருமாளிடம் வேண்டலாமா?' என்று குறை கூறினர். அதற்கு நம்பிள்ளைகள், 'அவருடைய அபிப்ராயத்தை நாம் அறியோம்; எல்லா சாஸ்த்ரங்களிலும் வல்லவரான பிள்ளையெங்களாழ்வானைக் கேளுங்கோள் என்ன, அவர்களும் கேட்க, எங்களாழ்வானும் 'ஸ்ரீரங்க ஐசுவர்யத்தில் தாமும் ஒருவராக எண்ணமாகலாம்' என்ன; நம்பிள்ளை திருநாராயணபுரத் தரையரைக் கேட்பிக்க, அரையரும் 'இங்கு தொடங்கிய கைங்கர்யம் முற்றுப்பெறுமையாலே யிருக்கலாம்' என்றார். நம்பிள்ளையும் ரொம்ப சரி என்று அம்மங்கியம்மாளைக் கேட்பிக்க, அவரும் 'நம்பிள்ளை கோஷ்டியிலிருந்து பகவத் விஷயம் (திருவாய்மொழி வ்யாக்யானம்) கேட்கிறவர்களுக்கும் பரமபதம் இனிக்குமோ' என்ன; நல்லது என்று பிள்ளையும் அம்மங்கிப் பெரியமுதலியாரைக் கேட்பிக்க, அவரும் 'பட்டரைப்போலே நம்பெருமாளின் இந்த சேவையை விரும்பியிருக்கலாம்' என்ன; பிள்ளையும் பிறகு பின்பழகிய பெருமாள் ஜீயரைப் பார்த்து இவற்றிலேது நும் இசைவு என்று கேட்க, 'இவற்றி லொன்றுமன்று; தேவரீர் திருமஞ்சனம் கண்டருளித் திருப்பரியட்டம் (வேட்டி) உடுத்தி உலாவும் போது சிறு வியர்வையோடு கூடிய திருமுகமண்டலச் செவ்வியையும் அடியேன் சுற்றிச்சுழற்றி வீசுகிற கைங்கர்யத்தையும் விட்டுப் போக இச்சை யில்லாமையாலே' என்று பெருமாள் ஜீயர் பதில் கூறினார். இது கேட்டு எல்லோரும் இப்படி ஒரு ஐசுவர்யம் கூடுவதே எனக் கொண்டாடினர்.

ஒருக்கால் பின்பழகிய பெருமாள் ஜீயர், தமக்கு ஸ்வரூபம் (தன்நிலை) நம்பிள்ளைகள் திருவடிகளே தஞ்சமென்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அடிமையா யிருப்பதே என்றும், உபாயம் அவர்கள் அபிமானமே என்றும், புரு

ஷார்த்தம் அவர்களின் முகமலர்த்தியே என்றும் அருளி ஞர்.

## நம்பிள்ளை 'லோகாசார்யர்' ஆதல்

நம்பிள்ளைகளின் காலக்ஷேபக் கோஷ்டி கலைந்தால் அப்பெருந் திரளைக் கண்டு மிக்க ஆனந்தமடைந்த ஸ்ரீவைஷ்ணவனான ராஜா நம்பெருமாள் கோஷ்டியா? நம்பிள்ளை கோஷ்டியா? என்று வினவுவனும். அப்படிப் பெரும் புகழாளரான நம்பிள்ளை நம்பெருமாளைச் சேவித் திருக்கும்போது முதலியாண்டானின் திருப்பேரனும் கந்தாடை யாண்டான் குமாரருமான கந்தாடைத் தோழப்பர் நம்பிள்ளையின் பெருமை கண்டு பொறுமை கொண்டு பெருமாள் முன்பே பலவாறாக நிந்தித்தார். நம்பிள்ளைகள் அபசாரப்பட்டோமே என்று நடுங்கிப் பெருமாளைச் சேவித்துவிட்டு மடத்துக்கு எழுந்தருளி எல் லோரையும் அனுப்பிவிட்டுத் தாம் அமுது செய்யாமல் பொழுது சாயுந்தனையும் காத்திருந்தார்.

கந்தாடைத் தோழப்பர் நம்பிள்ளைகளைச் சந்நிதியில் நிந்தித்துவிட்டுத் தம் திருமாளிகைக்குத் திரும்பினார். இச் செய்தி அறிந்த சிறந்த ஞானத்தோடு கூடிய அவர் தேவி கள் மிகவும் மனங் கலங்கி வீட்டுக் கார்யங்கள் ஒன்றும் செய்யாமல் வாளாவிருந்தனர். உள்ளே நுழைந்த தோழப்பர் அவரைப் பார்த்து, "இதுவரை நாம் கைப் பிடித்த நாள் தொடங்கி நம்மிடம் ஆசார்யனளவு அன்பு கொண்டு எதிர்கொண்டு நிற்கும் வழக்கம் தவிர்ந்த தில்லையே; இன்று ஏன் மாற்றம்? என்று கேட்க, தேவி களும் "ஆழ்வார் திருவவதார மென்னலாம்படியும், நம்பெருமாளுக்குப் ப்ராணராயு மிருக்கிற நம்பிள்ளை களைப் பெருமாள் ஸந்நிதியிலே காரணமில்லாமல் நிந் தித்துப் பாகவதாபசாரப்பட்டு, அபசாரப்பட்டோமே என்கிற அநுதாபமுமின்றிக்கே உஜ்ஜீவிக்க நினைக்கிற உம்மோடு எனக்கு என்ன பணியுண்டு; விவாஹ காலத் தில் அடியேனுடைய உடம்பு மட்டும்தான் உமக்குத் தரப்பட்டது; அதை நீர் எப்படி வேண்டுமானாலும் செய்துகொள்ளுங்கள்; இந்த ஆத்மா ஏற்கனவே ஆசார்ய ராதீனமாகி விட்டது" என்று சொல்லத் தோழப்பரும் குடிப்பிறப்பாலும் வித்யையாலும் தேவிகள் சொல்லி யதை ஆய்ந்து இசைந்து வருந்தி, "இப்போது என் செய் யக்கடவேன்' என்று வியாகூலப்பட, "ஆற்றிலே போட்

டுக் குளத்திலே தேடலாமோ! அபசாரப்பட்ட இடத்தி லேயே பிழை பொறுப்பித்துக்கொள்ளவேணும்; அதனால் நம்பிள்ளைகளிடம் சென்று வேண்டிக்கொள்ளுங்கள்; தயாளு ஆகையாலே பொறுத்தருள்வார்'' என்று பணி கூறினர். தோழப்பர், 'பல்லோர் முன் பழித்துத் தனிமை யில் எப்படிப் போவது?' என்று தயங்கித் தேவிகளையும் அழைத்துக்கொண்டு கையில் விளக்கேந்தி நம்பிள்ளை களின் மடத்துக்குப் புறப்பட வெண்ணி வீட்டுக்கு வெளி யே வந்ததும், திண்ணையில் வெள்ளை உடுத்தி முக்காடிட்டு ஒருவர் படுத்திருப்பதைக் கண்டார். (முன் கூறியபடி நம் பிள்ளை பொழுதுபட்டதும் தோழப்பர் திருமாளிகையில் படுத்துக் கிடந்தார்).

தோழப்பர், யாரது? என்று குரல்கொடுக்க நம்பிள்ளை களும் வாரிச் சுருட்டி எழுந்து, "அடியேன் கலிகன்றி தாஸன்' என்று தண்டன் ஸமர்ப்பித்தார். உடனே தோழப்பர், 'இதென்! நாம் புகழுடையோம்; நம்மைப் பெருமாள் முன்னே பரிபவிப்பதோ என்று கோபத்தோடு வந்து படுத்து மூர்ச்சை செய்வதோ?' என்று கேட்க, நம்பிள்ளைகள் "அங்ஙனன்று; முதலியாண்டானின் திருப் பேரனரான தேவரீரின் மனங் கலங்கும்படி இருந்திட்டு, அபசாரப்பட்ட மஹாபாவியான அடியேற்கு இவ்வாச லல்லாது வேறு கதியின்றி வந்து கிடக்கிறேன்' என்று தைந்யமாகக் கூறினர். 'இஃதொரு அதிகாரி விசேஷமே!' என்று வியந்து அவரைத் தோழப்பர் அணைத்து, 'இது நாள்வரை ஒரு சிலருக்குத்தான் நீர் ஆசார்யர் என்றிருந் தேன்; அது சரியல்ல; நீர் உலகுக்கெல்லாம் ஆசார்ய ராவீர்!' என்று கூறி லோகாசார்யர் என்று பெயரிட்டுப் பிள்ளையை உள்ளே அழைத்துச் சென்று அவரை உகப் பித்து அவரிடம் அர்த்தங்களை யெல்லாம் கேட்டுத் தெளிந்து செய்த செய்கையராயினர்.

இப்படியுள்ள நம்பிள்ளையின் ஏற்றங் கண்டு நஞ்ஜீயர் பெருமித மடைந்தார். நூறு வயது வரை வாழ்ந்தவர் அந்திம தசையில் நோய்ப்பட்டார். அப்போது அவரு டைய சீடருள் ஒருவர், 'த்வயாநுசந்தானம் செய்யக் கூடாதோ!' என்று கேட்க, "அதென்ன நாடோறும் உங்களுக்கில்லாமல் இப்போதாக (முடிவு காலத்திலோ) எனக்கோ வேண்டுவது?'' என்று நஞ்ஜீயர் அருளினார்.

இதனால் த்வயம் ஸதா அநுஸந்திக்கத்தக்கது; இறுதிக் காலத்துக்கு அவசியம் இல்லை என்பது என்றபடி.

## நஞ்ஜீயருக்கு ஸர்வஸ்வதானம்

மற்றொருவர் நஞ்ஜீயரை அணுகி, 'தேவரீருக்கு இப்போது வேண்டுவது என்ன?' என்று கேட்க, "பெருமாளின் ஸர்வஸ்வதானம் அடியேற்கு வேண்டும்' என்று நஞ்ஜீயர் விரும்பினர். அதன்படியே பெருமாள் நஞ்ஜீயர் மடத்து வாசலில் எழுந்தருளித் தம் ஏகாந்தத்திருமேனியை உள்ளவாறு அநுபவிக்கப் பண்ணினார்; அதனால் ஆநந்தமடைந்த நஞ்ஜீயர் தம் சீடர்களை அழைத்து, 'பெருமாள் எனக்கு ஸர்வஸ்வ தானம் பண்ணினார்; நான் உங்களுக்குச் சர்வ அர்த்ததானம் பண்ணுகிறேன்; கேட்டுக் கொள்ளுங்கோள்' என்ன, நம்பிள்ளையும் 'தஞ்சமாயிருப்பதொரு வார்த்தை அடியேற்கு அருளவேணும்' என்று கேட்க, சீயரும் 'இப்போதாகத் தஞ்சமாகக் கேட்பதுண்டோ?' என்று கூறி ஒரு வார்த்தை சொன்னார். "ஆத்மாவின் ஆநந்தத்துக்காக ஈசுவரன் என்றிருக்காமல், ஈசுவரனின் ஆநந்தத்துக்காக ஆத்மா என்றிரும் என்றார்.

நம்பிள்ளைக்கு ஸமாதானமாகவில்லை. அதையுணர்ந்த சீயர், 'நும் நினைவு யாது?' என்ன, நம்பிள்ளையும் ஒரு ஸ்ரீவைஷ்ணவன் திருநாட்டுக்கு எழுந்தருளினால் இங்கிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் என்ன நினைத்திருப்பர்!' என்று கேட்க, நஞ்ஜீயரும் 'அது அதிகாரிக்குத் தக்கவாறன்றோ இருப்பது. த்ருப்தனானால் ஆர்த்தனாகிறான்; ஆர்த்தனானால் த்ருப்தனாகிறான். (அதிகாரிகளெனப்படுவோர் திருப்தர், ஆர்த்தர் என இரு வகைப்படுவர்). த்ருப்தன் என்றால் அடியானான தன் தன்மைக்கு ஏற்பத் தன் பேறு ஈசுவரனாலே (அவனே உபாயமாகையாலே) என்ற ஊற்றத்தாலே பகவான் அருளும்போது பேறு பெறுகிறோம்என்று இருக்குமவன். ஆர்த்தன் என்றால், தன் தன்மையை மீறி பகவத் விஷயத்திலே ஊன்றி, பகவானைப் பெற்றாலன்றித் தரிக்கமாட்டாமையாலே பகவானைப் பெறத் துடிக்குமவன். இங்கு பேறு அடியாரோடு கூடியிருக்கை. அதனால் த்ருப்தன் ஆர்த்தனாகை, பரமபதித்த ஸ்ரீவைஷ்ணவர் இருக்குந்தனையும் கூடியிருக்கும் பேறு சித்திக்கும் என்று ஆறியிருந்து, அவர் பரமபதித்த பின்பு,

'இழந்து விட்டோமே' என்று கலங்கி அவரைப் பெறுந் தனையும் துடித்து நிற்கை. ஆர்த்தன் த்ருப்தனுகை, அந்த ஸ்ரீவைஷ்ணவர் இருக்குந்தனையும் அவரைப் பிரியாமைக் குத் துடித்து நின்று, அவர் பிரிந்த பிறகு பிரிவில் தரி யாமையாலே தன்னுடம்பைக் கழித்து அவரைப் பெற்று விடப் போகிறேனென்று ஆறி யிருக்கை) என அருளி, "ஞாந கார்யத்தில் உமக்குச் செய்யவேண்டியதொன்று மில்லை; அதனால் வைஷ்ணவர்களை அழைத்துக்கொண்டு நம் தர்சனத்தை நடத்துவீராக. தவிர, நாம் லோகா சார்யார் என்ற பேரையுடையோம்; அருளிச்செயல் நாலாயிரத்துக்கும் பொருள் சொல்ல வல்லோம்; ஸ்ரீபாஷ்யத்துக்கும் நாம் அதிகாரி என்று இறுமாந்தி ராதே எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம் என்றிரும்; அடியேனுக்கும் பட்டர் அருளிச்செய்தது இதுவே" என் றருளினர். எல்லோரிடமும் பிழை பொறுத்தருள வேண் டிக்கொண்டு பகவத் ஸேநாபதி ஜீயர் மடியிலே திருமுடி யும் பின்பழகிய பெருமாள் ஜீயர் மடியிலே திருவடியு மாகப் பட்டர் திருவடிகளை த்யானித்துக்கொண்டு திரு நாட்டுக்கு எழுந்தருளினர்.

அம்மங்கியம்மாள் என்ற ஸ்வாமி பரமபதத்திற்கு எழுந்தருள அவர் தேவிகள் கலக்கமற்றிருந்தார். இப்படி யிருக்கலாமோ என்று சிலர் நம்பிள்ளைகளைக் கேட்க, "தேவிகள் (பார்யை) விஷயத்தில் பண்ணின விரோத மிருந்தாலன்றோ அவர் பேற்றுக்கு இவர் வெறுப்பது' என்று பதில் சொன்னார். மற்றொரு சமயம் ஒரு ஸ்ரீவைஷ் ணவர் பரமபதமடைய அவர்தம் குடும்பம் கதறியழுதது. "இது என்?' என்று கேட்டதற்கு நம்பிள்ளை, வஸ்துவை இழந்த தேசம் கூப்பாடு செய்யக் கேட்கவேணுமோ?" என்றார்.

## ஆசார்யனுக்கு சிஷ்யை சேவை

நம்பிள்ளை தமது அடியாரோடு திருவெள்ளறையைச் சேவித்து மீளும்போது காவேரி வெள்ளமிட்டு ஓடிக் கொண்டிருந்தது. கரையில் ஓடம் காணவில்லை. பரிசில் (தாழி—வட்டமாக இருப்பதொன்று) மட்டும் இருந்தது. அதில் ஏறி நடுக் காவேரி வந்தனர். பொழுதும் சாய்ந்து மழையும் மந்தாரமுமாய் இருண்டது. திசை தெரிய வில்லை. அப் பரிசிலும் அமிழ்ந்துவிடும் போலிருக்க, அப் பரிசில் விடுவான், 'யாரேனும் நாலிருவர் தாழியிலிருந்து

இறங்கினால் கரை சேராம்' என்றான். யாரும் அதற்கு முற்படவில்லை. ஒரு அம்மையார் (நம்பிள்ளையை அடைந்திருந்தவள்) 'தாழிக்காரா! நீ நூறு வயதிருப்பாய்; ஜாக்ரதையாகக் கண் போன்றவரான நம்பிள்ளைகளைக் கரை சேர்ப்பாய்' என்று கூறி ஆற்றிலே குதித்து விட்டாள். யாரும் எதிர்பாராமல் நிகழ்ந்ததாகையால் எல்லோரும் அதிசயித்தனர். பரிசிலும் கரை சேர்ந்து எல்லோரும் கரை யேறினர். நம்பிள்ளை மனம் கசிந்து, 'ஐயோ! ஒரு ஆத்மா நட்டுப்பட்டுப் போயிற்றே' என்று அடிக்கடி கூறிக்கொண்டிருந்தார். அவ்வம்மையும் நீரில் குதித்ததும் ஒரு மேட்டுத் திடரில் ஒதுக்கப்பட்டிருந்தாள். அதுவும் கரைக்கு அருகாமையிலிருந்தது. அதனால் குரல் கேட்டு அவ்வம்மையார், 'அடியேன் இங்கே சுகமே யிருக்கிறேன்; கவலை கொள்ளவேண்டாம்' என்று குரல் கொடுத்தார். உடனே பிள்ளையும் பரிசிலை யனுப்பி அவ்வம்மையை அழைத்துக்கொண்டார். அவ்வம்மை வந்ததும் தண்டனிட்டு, 'ஆற்றிலேயும் ஒரு மேடாய் நின்று அடியேனை ரக்ஷித்து அருளிற்றே!' என்று கூற, பிள்ளையும் 'உம்முடைய நம்பிக்கை யிதுவானால் அப்படியுமாகலாம்' எனப் பதில் கூறினார். இதனால் சிஷ்யன் தன் சரீரம், சொத்து, ப்ராணன் இவைகளை அழித்துக்கொண்டும் ஆசார்யனைக் காக்கவேணும் என்ற நிலை யுண்டாக வேணும்; உண்டானால் ஈசுவரன் அவனை (அந்த சிஷ்யனை)த் தான் பேணிக் காக்குமென்பதாயிற்று.

ஒரு சமயம் நம்பிள்ளை திருமாளிகையில் காலக்ஷேபம் முதலானவைகளுக்கு இடம் போதாதிருந்தது. அதனால் நம்பிள்ளைகளின் திருவடிகளை யடைந்திருந்த ஒரு அம்மையாருக்குச் சற்று நிலம் திருமாளிகைக்குப் பக்கத்தி லிருந்தது. அதைத் தரும்படி மற்றவர் கேட்டார். அவளும் ஸ்ரீரங்கத்தில் சற்று இடங் கிடைக்கவேணும்' என்றாள். இதை நம்பிள்ளைகளுக்குத் தெரிவித்தார்கள், பிள்ளையும் அவளிடம், 'முதலிகள் (ஸ்ரீவைஷ்ணவர்கள்) நெருங்கியிருக்க வேண்டியிருக்கிறது; அதனால் உம்மிடத்தைத் தந்துதவலாகாதோ; உமக்கு ஒரு சரீரத்துக்குக் கொஞ்சமிடம் போதாதோ?' என்று சொல்ல, அவளும் 'அப்படியே செய்கிறேன்; அடியேற்குப் பரமபதத்தில் ஒரு இடம் தந்தருளவேணும்' என்று கேட்டாள். பிள்ளையும் 'அது அவனதன்றோ; அவனிடம் (வைகுந்த நாதனிடம்) விண்

ணப்பித்துத் தருகிறோம்' என்று கூற, அவளும் 'அடியேன் பெண்பிள்ளை; அதனால் ஒரு சீட்டு (ஓலை) எழுதித் தாரும்' என்ன, பிள்ளையும் அவளுடைய நம்பிக்கைக்கு வியந்து, 'இந்த வருஷம் இந்த மாதம் இந்த தேதியில் இந்த அம்மைக்குத் திருக்கலிகன்றி தாஸன் (நம்பிள்ளை) பரமபதத்தில் ஓரிடம் எழுதிக் கொடுத்துள்ளேன்; ஸர்வலோக ஸ்வாமியும் என்னுடைய ஸ்வாமியுமான வைகுந்த நாதன் அதைக் கொடுத்தருளவேணும்' என்று எழுதிக் கையெழுத்திட்டுக் கொடுத்தார். அதன்படியே அன்றைய மூன்றாவது நாள் அவ்வம்மை பரமபத மடைந்தாள். இதனால் "ஆசார்யன் இரக்கத்தோடு தந்த தொன்றையே தஞ்சமென் றிருக்கவேணும்; ஈருலகங்களும் ஆசார்ய னிட்ட வழக்காயிருக்கும்" என்பது வெளியிடப்பட்டது.

## பேற்றுக்கு நம்பிள்ளை காட்டிய வழி

மஹாபாஷ்ய பட்டர் என்பவர் நம்பிள்ளையைப் பார்த்து, 'ஞான ரூபமான ஆத்மாவுக்கு இந்த சரீரம் கழிந்தால் பரமபதம் (மரணமானால் வைகுந்தம்) சித்தம் என்று உறுதியோடிருப்பது எதனாலே?' என்று கேட்டதற்கு, "ஸ்ரிய:பதியான எம்பெருமானையே பேற்றைத் தருவானும் பெறுவானுமாகக் கொண்டிருப்பதும், நெடுங்காலம் இழந்து கிடந்த பகவானைக் காட்டித் தந்த ஆசார்யனிடத்தில் ஊற்றம் மிகுந்திருக்கையும், ஸ்ரீபாஷ்யப்படி (விசிஷ்டாத்வைதம்)எம்பெருமானார் தர்சனமே ஸித்தாந்தம் (முடிந்த கொள்கை) என்றிருக்கையும், ஸ்ரீராமாயணத்தாலே பகவத் குணங்களை அநுபவிப்பதும், ஆழ்வார்களின் ப்ரபந்தங்களாலே போது போக்குவதுமாயிருந்தால் தேஹத்தின் முடிவில் பரமபதம் சித்தம்; "மீட்சியின்றி வைகுந்த மாநகர் மற்றது கையதுவே; ஸந்தேகம் வேண்டா" என றருளினார். பலம் இன்னது, பலத்தைக் கொடுக்கும் உபாயம் இன்னது என்ற முடிவும், ஆசார்யனிடம் நம்பிக்கையும், நம் தர்சந நம்பிக்கையும், பகவானுடைய மங்கள குணங்களில் தன்னை மறந்து ஆழ்ந்து போதலும் உண்டானால் பேற்றைப் பெற்றுவிடுவது திண்ணம் என்று இதனால் தெளிவுபடுத்தினராயிற்று.

## இதர தேவதா உபாஸநம்

"திருமாலை யொழிந்த தேவதைகளை வணங்கக்கூடாதென்கிற நீங்கள் நித்ய (ஸந்த்யாவந்தனம் முதலான

நித்யக் கடமைகள்), நைமித்திகங்கள் (சிராத்தம் முதலான ஒரு காரணத்துக்காகச் செய்யுமவை) முதலானவற்றில் அக்நி, இந்திரன் முதலிய தேவதைகளைப் பஜிப்பதேன்; ஆலயங்களைப் பஜிக்கா தொழிவதேன்?'' என்று சிலர் கேட்க, அதற்கு நம்பிள்ளை அருளியது: அக்நிஹோத்ர (இல்லறத்தார் செய்யும் வேள்வித்தீ) அக்நியைப் பஜித்தும் சுடுகாட்டுத் தீயை ஒதுக்கியும் போமாப்போலே, நித்யம் முதலானவற்றில் பகவானுக்கு அங்கங்கள் என்ற எண்ணத்தோடே செய்கிற இந்த இதர தேவதா உபாஸநம் பகவானையே உபாஸிப்பதாகவே மேலான சாஸ்த்ரம் விதிக்கின்றது. அதனால் செய்தேயாக வேண்டிய நித்யம் முதலானவற்றில் பகவானாகவே வணங்கப்படுகின்றனர். ஆனால், ஆலயங்களிலுள்ள இதர தேவதைகள் தாமஸ குணங்கொண்டவர்களால் சாஸ்த்ர விருத்தமான தாமஸ ஆகமத்திலே சொல்லப்பட்ட மந்த்ர தந்த்ரங்களாலே பரதெய்வங்களாக ப்ரதிஷ்டிக்கப்பட்டவர்களாகையாலும், அந்த ஆலயங்களை வணங்கும்படி விதி (கட்டளை) யில்லாமையாலும் ஆலயங்களை ஸ்ரீவைஷ்ணவர்கள் வணங்கமாட்டார்கள். மேலும் ருத்ரன் ஸத்வ குணத்துக்கு மிகவும் விரோதமான தமோ குணத்தையே உடையவனாகையாலே மிகவும் தூரமானவன். எனவே ஆலயங்களிலுள்ள அந்ய தேவதைகளை வணங்குவது படுகுழியில் தள்ளிவிடும் என்பதாம்.

நம்பிள்ளையின்பால் ஆர்வங் கொண்ட ஸ்ரீவைஷ்ணவரொருவர் திருமேனி (சரீரம்) இளைத்திருக்கிறதே என்று கேட்க, 'ஒன்று தேய ஒன்று வளர்கிறது' என்று நம்பிள்ளை பதில் கூறினார். அதாவது ஞானம், பக்தி, வைராக்யங்கள் வளர, பகவானை நினைந்து நைந்து உள் கரைந்து உருகுதலால் உடல் தேயும் என்றபடி.

ஒருசமயம் நம்பிள்ளை நோயுற்றிருந்தார். அந்நோயை ஒருவர் வெறுத்தார். அவருக்கு நம்பிள்ளை, 'நான் இந்த நோயை நல்விருந்தாக எண்ணியுள்ளேன்' என்றார். செய்ய வேண்டுவனவற்றைச் செய்து முடித்தவர்கள் யமனை நல்விருந்தாக எண்ணியிருப்பர்கள் என்பது கருத்தாகும்.

## நோய் தீர த்வயாநுஸந்தானம் அவசியமா?

நம்பிள்ளை நோயுற்றிருந்தபோது பிள்ளை எங்களாழ்வான் என்ற ஸ்வாமியின் தூண்டுதலாலே அம்மங்கியம்

மான் என்கிற ஸ்வாமி ஒரு யந்த்ரத்தை (மந்திர சக்தி கொண்டது) நோய் போவதற்காக நம்பிள்ளையின் கையில் வைத்துத்தொடப்புக, நம்பிள்ளை அதைப் பொறுமல் ஒதுங்கினார். ஒரு ஸ்ரீவைஷ்ணவனுக்குப் புருஷார்த்தம் பகவத் பாகவத குற்றேவல் தவிர வேறு கூடாதாகையாலும், பகவானைத் தவிர வேறு சாதனம்—உபாயம் கூடாதாகையாலும், த்வயம் தவிர வேறு மந்த்ரம் கூடாதாகையாலும் தன் சரீரத்துக்காகவும் ஆத்மாவுக்காகவும் தான் கரைதல் கூடாது. எனவே, வேறு மந்த்ரமாய் வேறு சாதனமாயுள்ள இக்கார்யத்துக்கு நம்பிள்ளை இசையவில்லை. இதை எங்களாழ்வானும் அம்மங்கியம்மாளும் அறிந்தவர்களேயானாலும் பரார்த்தமாக-அதாவது மற்ற ஒருநல்லவர்க்கு நன்மையை விரும்பிச் செய்வதாகையால் தோஷமில்லையெனக் கருதினர். அதனால் அவர்கள் நம்பிள்ளையைப் பார்த்து, 'உம்முடைய விஷயமாக நீர் செயல்பட்டாலன்றோ ஸ்வரூப ஹாநி: (தன் ரக்ஷணத்தை ஈசுவராதீனமாகக் கொண்டுள்ள அடிமைத்தன்மைக்குக் கேடு); உம் விஷயத்தில் நாங்கள் செய்தால் ஸ்வரூபஹாநி இல்லையே' என்றனர்.

அதற்கு நம்பிள்ளை, "நான் அறிந்தவற்றையன்றோ நீங்கள் சொல்வது; நானும் ஒரு அர்த்தத்தைத் தஞ்சமென்றிருப்பேன்; அதாவது 'நஞ்ஜீயர் தம் முடிந்த நிலையில் த்வய மந்த்ரம் தவிர வேறு மந்த்ரங்கள் சிவ பஞ்சாக்ஷர சமமாகும்' (ஏற்கத் தக்கவையல்ல) என்றருளினர்" என்றார். ஆனால், திருமந்தரம் என்றாகும் என்ன, அதுவும் த்வயார்த்தத்தின் சுருக்கமாகையாலே அதுவும் த்வயார்த்தம் தான் என்று பதில் கூற, ஆயின் த்வயத்தை அநுஸந்தானம் செய்யலாமே என்று வேண்டினர். அதற்கு நம்பிள்ளை, "விடாய்த்தவன் நீரருந்துமாப்போலே பகவத் விஷயப் பெருவிடாய் கொண்ட வைஷ்ணவனுக்கு ஸதா ஜபிக்கத்தக்கதாயிருப்பதாகையாலே இப்போதாக என் வியாதி போகைக்காக த்வயத்தாலே சரணம் புகுவது இவ்வாத்மாவின் தன்மைக்கு கேடாம் (ஸ்வரூபஹாநி). ஏனெனில், தன் விஷயமாக முயற்சித்தால் தன்னுடைய தான—ரக்ஷகனான பகவான் இஷ்டப்படி இருக்கையாகிற பாரதந்த்ர்யத்தைத் தூஷித்ததாகும். இதனால் தொடக்கமையும் பூப்போலே வேறுமந்த்ரங்களின் தொடர்பைப் பொறாத த்வய மந்த்ரத்திலேயே ஊன்றி நிற்கும் நிலைமை

யும், அந்த த்வயத்தை மற்றொரு பலத்துக்காக உபாய மாக்கிக் கசக்கிப் பிழியப் பெருமையும், தனக்காகவோ பிறருக்காகவோ நோய் நீங்குவதற்காக ப்ரார்த்திப்பதன் தோஷமும் சொல்லிற்றாயிற்று.

## சக்ரவர்த்தித் திருமகன் பரத்வத்தைக் காட்டினானோ

நம்பிள்ளைகள் நோய் நீங்கி முன்போலே காலக்ஷேபங் களை நடத்திக் கொண்டிருந்தார். அவருடைய கோஷ்டி ஸம்பத்தையும், ஞான ஸம்பத்தையும், அதனாலுண்டான அவருடைய பெருமையையும் கண்டு நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டர் பொறாமை கொண்டு எப்பொழுதும் நம் பிள்ளை விஷயத்தில் கடுகடு என்றிருப்பார். இவர் கூரத் தாழ்வானுடைய பேரர்; (பெரிய) பட்டருடைய குமா ரர். அவர் அரசனின் ஆஸ்தான ஸம்பந்தம் பெற்றிருந் தார். அதனால் ஒரு சமயம் ஆஸ்தானத்துக்குப் போம் போது நம்பிள்ளையின் சீடரான பின்பழகிய பெருமாள் ஜீயரையும் அழைத்துச் சென்றார். ஜீயரும் 'நம் பரமா சார்ய வம்சத்தவரன்றோ' என்று பட்டரோடு ஆஸ்தா னத்துக்குப் போனார். அங்கு ராஜா, பண்டிதனாகையா லும் நிறைந்த கேள்வி ஞானம் உடையவனாகையாலும் இவர்களை ஸத்காரம் பண்ணி இருந்தான். நடுவில் திரு வீதிப்பிள்ளை பட்டரின் பாண்டித்யத்தை யறிய, "சக்ர வர்த்தித் திருமகன் தன்னை 'ஆத்மாநம் மாநுஷம் மந்யே' என்று சக்ரவர்த்திக்குப் பிள்ளையாக மனிதனைச் சொல் லிக்கொண்டவன், எப்படி தெய்வத் தன்மையைக் காட் டக்கூடியதான மோக்ஷத்தை ஜடாயுவுக்கு அளித்தான்?" என்று கேட்டான்.

பட்டருக்குச் சிந்திக்கவேண்டி யிருந்தது நல்ல வேளை யாக ராஜா ராஜ்ய கார்யமாக வேறொன்றில் கவனம் செலுத்தினான். அவ்வேளை பட்டர் பின்பழகிய பெருமாள் ஜீயரிடம், "இவ்விடத்தில் நம்பிள்ளை அருளிச்செய்வது எப்படி?' என்று கேட்க, ஜீயரும் 'ஸத்யேந லோகாந் ஜயதி' என்று நிர்வஹிப்பர் என்ன, பட்டரும் பண்டிதராகையாலே மனதில் விசாரித்து, ஒக்கும் என் றிருந்தார். மீண்டும் ராஜா தன்கவனத்தைப் பட்டரிடம் திருப்பி, 'பதில் சொல்லவில்லையே' என்ன, "நீர் வேறே கார்யத்தில் கலந்திருந்தீர்; கவனமாகக் கேட்கவேணுமே என்றிருந்தேன்; இப்போது கேளும்' என்று, "ஸத்யேந

லோகாந் ஜயதி; தீநாந் தாநேந ராகவ: | குரூந் சுச்ரூஷயா, வீரோ தநுஷா யுதிசாத்ரவாந்' ॥ (ஸ்ரீராமபிரான் ஸத்யத்தாலே எல்லாஉலகங்களையும், தாநத்தாலே எளியவர்களையும், சுச்ரூஷையாலே ஆசார்யர்களையும், யுத்தத்தில் வீரனான அவன் வில்லினாலே பகைவர்களையும் வெல்லுகிறான்) என்கிற சுலோகத்தைச் சொன்னார். ராஜா மிகவும் கொண்டாடினான்; எழுந்து தண்டன் ஸமர்ப்பித்தான்; அளவில்லா ஆநந்தமடைந்தான்; மறுபடியும் வணங்கினான்; மிகச் சிறந்ததான ஆபரணம் முதலான வெகுமதிகளையும் அதிகமான தனத்தையும் கொடுத்துப் பட்டரைக் கொண்டாடி அனுப்பினான். அவற்றை ஏற்றுக்கொண்டு பட்டர் பின்பழகிய பெருமாள் ஜீயரைக் கையைப் பிடித்துக் கொண்டு மிகவும் உருக்கமாக, 'ஜீயரே! இந்தத் தனத்தையும் என்னையும் நம்பிள்ளை திருவடிகளிலே சேர்க்க வேண்டும்' என்று வேண்டிக்கொள்ள, ஜீயரும் அவ்வாறே நம்பிள்ளை கோஷ்டியிலே கொண்டுபோய்ச் சேர்க்க, நம்பிள்ளையும் பரமாசார்யருடைய வம்சத்தரான அவரை மிகவும் விரும்பித் தண்டனிட்டு, 'இது என்ன ஸ்வாமி!' என்று கேட்க, பட்டரும் நம்பிள்ளையின் திருமுகச் செவ்வியைப் பார்த்து, 'இது தேவரீருடைய திவ்ய சூக்திகளின் பதினாயிரங் கோடியிலே ஒன்றுக்குப் பெற்ற தனம்; இதையும் அடியேனையும் அங்கீகரிக்கவேணும்; சம்சாரியான ராஜா தேவரீரின் சிந்தின வார்த்தைக்குத் தோற்றுக் கொடுத்தானென்றால், அடியேன் பக்கத்து வீட்டிலேயிருந்தும் இத்தனை நாள் தேவரீரின் திருவடிகளை இழந்து கிடந்தது மட்டுமின்றி, தேவரீர் விஷயத்தில் பொறாமை கொண்டும் திரிந்தேனே; அப்படிப்பட்ட இவ்வாத்மாவைத் தேவரீருக்குச் சமர்ப்பிக்கை தவிர வேறில்லை; அங்கீகரித்தருளவேணும்' என்று வேண்டினார். நம்பிள்ளையும் பட்டரை வாரி யணைத்துக்கொண்டு அங்கீகரித்து எல்லாப் பொருள் நலங்களையும் வழங்கித் தம்மைப் பிரியாதபடி அடிமை கொண்டருளினார்.

நம்பிள்ளை நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டருக்குத் திருவாய்மொழிக்கு அர்த்தமருளிச்செய்தார். பட்டரும் நாள்தோறும் பிள்ளை யருளிய அர்த்தங்களை ஒன்றுவிடாமல் கேட்டு அப்படியே அவற்றை இரவில் எழுதி ப்ரபந்தம் முடிந்ததும் அதை நம்பிள்ளையிடம் காட்ட, பிள்ளையும் பார்த்தருளி அது பாரதம் போலே பெரிதாயிருப்பது

கண்டு, 'இது என்?' என்று கேட்க, பட்டரும் 'தேவரீர் அருளிச்செய்ததை ஒரு எழுத்தும்கூட கூடச் சேர்த்த தில்லை' என்று பதில் கூற, நம்பிள்ளையும் வாயால் சொன்னதை எழுதிவிட்டீர்; நம் மனத்தில் உள்ளதை எழுதினீரோ! தவிர, உடையவர் காலத்தே திருவாய்மொழி அர்த்தத்தை ஆறாயிரப்படியாக (வ்யாக்யானம்) நூல் வழியாக்கத் திருக்குருகைப்பிரான் பிள்ளான் உடையவரிடம் அநுமதி பெறப்பட்ட பாட்டுக்கு முடிவில்லை; ஆனபின்பு நம காலத்திலே நம்மையும் கேளாமல் இவ்வளவு பரக்க எழுதினால் ஒரு சிஷ்யாசார்ய முறைக்குச் சேராது காண்' என்று கூறி அக்ரந்தத்தைக் கரையானுக்கு இரையாக்கினார்.

## இருபத்துநாலாயிரப்படி வ்யாக்யானம்

பிறகு நம்பிள்ளை தம்மிடத்தே எல்லா அர்த்தங்களையும் தனித்தனியாக நன்றாகக் கற்றிருக்கும் தம் ப்ரிய சிஷ்யரான பெரியவாச்சான்பிள்ளையைத் திருவாய்மொழிக்கு உரை யெழுதச் சொல்லிப் பணிக்க ஆச்சான்பிள்ளையும் **இருபத்துநாலாயிரப்படி** என்கிற உரையை எழுதினார்.

## ஈடு முப்பத்தாறாயிரப்படி வ்யாக்யானம்

மற்றொரு முறை திருவாய்மொழிக்கு நம்பிள்ளை அர்த்தம் அருளிய கட்டளையை நம்பிள்ளையின் அந்தரங்க சிஷ்யரான வடக்குத் திருவீதிப்பிள்ளை பகலெல்லாம் கேட்டு இரவெல்லாம் எழுதி முடித்து நம்பிள்ளைகளிடம் காட்ட, அவரும் பார்த்தருளி ஆனைகோலம் செய்து புறப்பட்டாப் போல கம்பீரமாய் சுருக்கமும் பெருக்கமுமில்லாமல் அளவோடு கூடி அழகானதா யிருக்கையாலே மிகவும் உகந்தார். பின் 'நன்றாக எழுதினீர்; ஆயினும் நம் அநுமதியின்றி எழுதினீராகையாலே அதைத் தாரும்' என்று வாங்கிக் கட்டி உள்ளே வைத்துவிட்டார். இவ்விஷய மறிந்த மற்றொரு சிஷ்யரான ஈயுண்ணி மாதவப் பெருமாள், நெடுநாள் நம்பெருமாளைப் ப்ரதக்ஷிணாதிகளாலே வேண்டிக்கொள்ள, பெருமாளும் அர்ச்சகர் மூலமாக 'ஏதுக்காக உபாசிக்கிறீர்!' என்று கேட்க, மாதவப் பெருமாளும் "நம்பிள்ளைகளிடம் திருவாய்மொழிக்கு '**ஈடு முப்பத்தாறாயிரப்படி**' என்ற உரை நூல் உளது; அதை அடியேனுக்குத் தந்தருளும்படி செய்தருளவேணும்" என்று

ப்ரார்த்தித்தார். பெருமாளும நம்பிள்ளைக்கு அபபடியே நியமிகக, நம்பிள்ளையும தாம அருளிய உரையை வடக குத் திருவீதிப்பிள்ளை எழுததுப்படுத்திய அநத கரந தத்தை ஈயுண்ணிச் சிறியாழ்வா னப்பிள்ளை எனகிற ஈயுண்ணி மாவதப பெருமாளுககுத் தநதருளினார். அநத வயாகயானம அநத ஈயுண்ணி மாதவப்பெருமாள் மூல மாக வழிவழியாக இன்றளவும் வநது பரநதது.

## பிள்ளைலோகாசார்யர் அவதாரம்

ஒரு சமயம் நமபிள்ளைகளிடம வடககு த் திருவீதிப் பிள்ளையின தாயார் வநது தனடன லமர்ப்பிக்க, பிள்ளை யும் க்ஷேமம் விசாரிகக, அவளும ''என சொலல; பிள்ளைக குக் கலயாணம செய்து வைததோமே, அந்தப் பெண பக்குவமானாள்; சயனத்துக்கு அனுபபி வைததேன; அநதப பெணணின் குரல கேட்டு உளளே போனேன; நம பிள்ளை விக்கியழுது உடல வேர்த்து நடுஙகி நினறான, எனனவென்று கேட்டேன; 'பாமபு படமெடுதது ஆடு கிறது, பயநதேன்; இப்போதும் அப்படியே இருககிறது' என்றான். பெண்ணைப போகச் சொனனேன்; மறுபடியும் ஒரு நாள் அனுப்பிவைத்தேன்; அன்றும் அவ்வாறே செய தான, நான் எனன செயவது; இந்தப் பிள்ளை இப்படிச் செயகிறான்'' எனறு முறையிட்டாள. நம்பிள்ளைகளும் சிரிதது வடக்குத் திருவீதிப்பிள்ளையின் வைராக்யததுக்கு மகிழ்நது அவர் தாயினிடம், ''மருமகள் ருதுஸ்நானம ஆன பின் இங்கே அழைத்து வாருங்கள்' எனறு பணித்தார். அவளும அப்படியே அழைத்து வநதபோது நம்பிள்ளையும் அந்தப் பெண்ணின் வயிற்றைக கையால் தடவிக் கொடுத்து, 'என்னைபபோலே ஒரு புத்ரனைப் பெறுவாய்' என்று சொல்லி அனுப்பி வைத்து, வடக்குத் திருவீதிப் பிள்ளையிடம் 'இனறு சயன அறைக்குப் போம; பயம் ஒனறும் வராது' எனறு சொல்லி யனுபபினார் அப்படியே திருவீதிப்பிள்ளையு மிருக்க, அவர் மனைவியும் திருவயிறு வாயத்திருந்து ஓர் உத்தம புதரரைக் குரோதன வருஷம் ஐப்பசி மாதம, திருவோண நக்ஷத்திரததில பெறறெடுத் தாள் வடக்குத திருவீதிப்பிள்ளையும பன்னிரண்டாம் நாள் நாமகரணததில தம் ஆசாரயரின திருநாமமாகிய **லோகாசார்யர்** எனற திருப்பெயரை இட்டார்.

இதுகேட்டு நமபிள்ளை வடக்குத் திருவீதிபபிள்ளையை அழைத்து, 'நாம் பெருமாள் திருநாம மிடவேண்டு

மென்று எண்ணியிருக்க நீரிப்படிச் செய்யலாமோ?' என்று கேட்க, வடக்குத் திருவீதிப்பிள்ளையும் பயந்து நடுங்கி நிற்க, பெரியோர்கள்' 'ஆசார்ய ப்ரேமத்தாலே செய்த தித்தனை? இன்னமும் ஒரு புத்ரனை அநுக்ரஹித்து விட வேணும்' என்று விண்ணப்பம் செய்ய நம்பிள்ளைகளும் அப்படியே அநுக்ரஹித்தார். அவ்வாறே வடக்குத் திரு வீதிப்பிள்ளைக்கு மற்றுமொரு திருக்குமாரர் அவதரித் தார். அவருக்கு நம்பிள்ளை **அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்** என்று திருப்பெயரிட்டார்.

## நம்பிள்ளையின் அன்னசுத்தி

நம்பிள்ளைக்கு இரண்டு தேவிகள்(பார்யைகள்). அவர் கள் மாறிமாறித் தளிகை செய்துவந்தனர். ஒருநாள் நம் பிள்ளை பெரிய தேவிகளை யழைத்து, 'நீ என்னை எவ்வித மாக நினைத்திருக்கிறாய்?' என்று கேட்க, அதற்கு அந் தேவிகள், 'தேவரீரை நம்பெருமாளின் மறுஅவதாரமாக வும், அடியேனுக்கு ஆசார்யராகவும், தேவரீருக்குச் செய் யும் கைங்கர்யங்கள் அடியேனுக்கு ஆத்மா உள்ளதா கைக்கு ஆசார்யத் தொண்டு என்று எண்ணியுள்ளேன்' என்றார். இளையதேவிகளையும் அவ்வாறே நம்பிள்ளை கேட்க, அவர். 'தேவரீரைப் பர்த்தாவாகவும் அடி யேனைப் பார்யையாகவும் நினைத்திருக்கிறேன்' என்று பகர்ந்தார். இதுகேட்டு நம்பிள்ளை பெரிய தேவிகளைத் தளிகைக்கும் (சமையல்), இளையதேவிகளை மேல் கார்யங் களுக்கும் நியமித்து அவ்வாறு நடந்துவரும்போது பெரிய தேவிகள் வீட்டுக்கு விலகி நிற்க இளையதேவிகள் தளிகை செய்தார். நம்பிள்ளை பெருமாளுக்குக் கண்டருளப் பண்ணி, தமக்கு அபிமானபூதராய் இரும்பைப் பொன் னாக்குமாப் போலே யிருப்பாராயிருந்த ஏறுதிருவுடைய தாஸர் என்கிற பாகவதரை அப்ரஸாதத்தை (தளி கையை)த் தொடச்செய்து அமுது செய்தார். இதனால் இளையதேவிகளுக்கு உட்கருத்துத் தூய்மை யில்லாமை யாலே பகவானுடைய பார்வை பட்டுப் புனிதமானா லும் தூய பாகவதரின் கையாலே தீண்டப்படுதல் அவசி யம் என்பது கருத்தாகிறது.

நம்பிள்ளைக்கு இளையதேவிகளிடம் ஒரு குமாரர் பிறந் தார். அதுகேட்ட திருப்பேராச்சான், 'அடியேனுக்கு ஒரு தமயன் பிறந்தார்' என்றார். இதனால் அப்பொழுது பிறந்

தாலும் ஆசார்ய புதரன் மதிக்கத தகுந்தவர் எனறு கருதது. அக்குமாரருககு நமபிளளை **தூவியம்புள்** என நாம மிட்டார்.

## பாகவதர்களுக்கு யமபயமில்லை!

நமபிளளை பினபழகிய பெருமாள ஜீயர் மடத்திலே இருநதார. அப்போது சிஷயர்க ளெலலோரும் அவரிடம "ஆழ்வாரைப் போலே அவஸதையுண்டானல் தான் (பரமபதததில) நிதய கைங்கர்யமாகிற பேற்றைப் பெற லாமெனறு தேருகிறது? அப்படியானல் ஸ்திரீ, அன்னம, பானம் முதலானவைகளோடு கூடியிருககிற நாஙகள பேறறைப் பெறுவதற்கு என செயயககடவோம்?" எனறு கேட்டனர். அதறகு நம்பிளளை, இங்கு அந்த ஆழ் வார் நிலை உணடாவிலலை எனறுலும, "ந கலு பாக வதா யம விஷயம கச்சநதி" (பாகவதர்கள யம விஷயததை அடையமாட்டார்க ளலலவா) எனறும், "அவன்தமர் எவ்வினையராகிலும எங்கோ னவனறமரே எனறொழிவதல்லால் நமனதமரால் ஆராயப்பட் டறியார கண்டீர்!" எனறும் சொல்லுகிற ப்ரமாணங் களினபடி ப்ரபந்நரான இவ்வாதமாககளின உஜஜீவனத் தில் (உயர்ந்த வாழ்வு) ஊனறியிருக்கும் எம்பெருமான, இவவாத்மாவின ஸதூல சரீரம் (கண்ணுக்குத தோறறு கிற இந்த சரீரம) கழிநததும் அர்ச்சிராதி மார்கமாக (மோக்ஷத்துக்குப் போகுமவழி போகும்போது ஆத்மா வுக்குத் தன் சரீரத்தில விருபபத்தை மாற்றி, மாலாகார ருககு (கமஸனுக்குத தினநதோறும் பூமாலை கொடுப்ப வனிடம் தனககுப் பூமாலை பெறறு)த் தன் திருவடி வழ கைக் காட்டினப போலே இவனுககும தன வடிவழகைக் காட்டி, பரபகதி, பரஜ்ஞாநம், பரமா பகதிகளாகிற அவஸ்தைகளை யுண்டாக்கி (மனக் கண்ணாலே பகவானைக் காணுதல பரபக்தி; கணடபின அவனை அணைதல் பர ஜ்ஞாநம; அணைந்தபின அவனுடைய பிரிவிற்கு அஞசுதல பரமா பகதி) கைக்கொண்டருளும்" என்றருளினர்.

நம்பிளளை பெரியகோவில வளளல எனபவரிடம "குலந தரும" என்ற பாட டில அபபதத்துககுபபொருள் கேட்க, 'உயர்குலததோனை எனனை நமபூர் வரதரான உமக்கு அடிமையாககினல குலநதரும' என்றார். தொண் டாக குலத்திலே புகுதல உயர்ந்த ஜந்மம் என்றபடி.

நம்பிள்ளையை "அவதாரம் இருக்கும்படி' என் என்று சிலர் கேட்க, பிள்ளையும் "மெய் வெளுத்து நாக்கு வற்றி யிருக்கும்' என்றார். அவர்கள் மருள, ""அதிகாரியைப் பெறுமையாலே மெய் வெளுத்திருப்பான்; பெற்றாலும் அவனுக்காக இல்லாமல், பகவத் பாகவத விஷயமில்லாத வேறு ப்ரயோஜனங்களை விரும்புகிறார்க ளாகையாலே மயிர் பட்ட சோறு என்று நாக்குஉலர்ந்திருக்கும்' என்று விளக்கினார்.

## ஸ்ரீவைஷ்ணவர்கள் எப்படிப்பட்டவர்கள்?

பெரியகோயில் வள்ளலாரைப் பெரியோர்கள்(முதலி கள்) 'ப்ரபந்நர்களாகிய இவர்களுக்கு ""ஸ்ரீவைஷ்ணவர் கள்'' என்று பேர் வரக்காரணம் என்ன?' என்று கேட்க ""இவர்கள் ச்ரிய:பதி (லக்ஷ்மீநாயகன்) புத்ரர்களாகை யாலும், இவர்களுக்கு ஸ்ரீயோடு கூடின பெருமாள் (திரு மால்) பிதாவாகையாலும், ஸ்ரீ (திரு) மாதாவாகையா லும், இவர்கள் ஸ்ரீமானுடைய (திருமாலின்) பெருமை களை அறிகையாலும், ஸ்ரீமாந் (திருமால்) இவர்களின் பெருமையை அறிகையாலும், பிராட்டியோடு கூடிய பெருமானுக்கு அடிமை என்று ஸ்ரீமத் என்ற பதத்திலே உண்டாகையாலும், ஸ்ரீ(பிராட்டி) இவனைப் புருஷகார மாக (இவன் குறைகளைக் கண்டு பெருமாள் வெறுக்கா மல் பண்ணி அங்கீகரிக்கும்படி செய்து)வளர்க்கையாலும் இவர்களுக்கு 'ஸ்ரீவைஷ்ணவர்கள்' என்று குறிப்பிடும்படி ஆயிற்று'' என்று பெரியகோயில் வள்ளலார் அருளினார்.

## ஸ்ரீவைஷ்ணவர்கள் யாரைப் பற்றவேண்டும்?

நம்பிள்ளையைச் சில ஸ்ரீவைஷ்ணவர்கள் ""ப்ரபந்ந னுக்கு (சரணாகதியில் நிலைநிற்கின்றவன்) தஞ்சமாக நம்பியிருக்கும் அர்த்தம் எது?'' என்று கேட்க, நம்பிள்ளை 'எல்லா ப்ரமாணங்களிலும் மிகமிகச் சிறந்ததான மந்த்ர ரத்னமாம் த்வயத்தின் அர்த்தத்தை(ஈச்வரனே உபாயம், அவன் திருவடிகளில் குற்றேவலே புருஷார்த்தம் என்னு மர்த்தம்) மிகவும் நம்பியிருப்பானாகில் எம்பெருமானிடத் திலேயே ஊற்றம் மிகுந்திருக்கும்; எம்பெருமானிடம் ஊற் றம் மிக்கிருந்தால், அந்த அர்த்தத்தைக் காட்டித் தந்த ஆசார்யனிடத்திலே ஊற்றம் மிகுந்திருக்கும்; ஆசார்ய னிடம் ஊற்றம் மிக்கிருந்தால், அவர் போன்றவர்களான

ஸ்ரீவைஷ்ணவர்களிடம் ஊற்ற மிகுந்திருக்கும். இனி எம்பெருமானையே பற்றியிருக்கை தேவதாந்தரத்தைப் பற்றுவது போலாம் என்று தேவு மற்றறியாது ஆசார்யனையே எல்லாமாகப் பற்றிக்கொண்டிருப்பான் விஷயத்தில் நம்பெருமான் பித்தேறியிருப்பான்; பாகவதர்களையே பற்றிக்கொண்டிருப்பான் விஷயத்தில் எம்பெருமானும் ஆசார்யனும் பித்தேறியிருப்பார்கள். இத்தால் ஆசார்யனிடத்தே ஊன்றி நிற்கை, பாகவத விஷயத்தே ஊன்றி நிற்கை இவையுண்டானால் அவனிடம் பகவானும் ஆசார்யனும் பாகவதரும் மிகவும் அன்பு கொண்டிருப்பர்' என்றருளினார்.

## திருமாலடியார்களைப் பூசிக்கும் செல்வமே செல்வமாகும்

யதிராஜதாஸா பிள்ளை திருமாளிகைக்கு எழுந்தருளிய நம்பிள்ளை அவருடைய செல்வத்துக்கு உகந்திருக்கத் திருவடியைச் சார்ந்த ஒரு பெரியார், ''இதென்ன, கிளர்ந்தெழுந்த பெருஞ் செல்வம் நெருப்பு என்றிருக்க உகப்பதே' என்று கேட்க, பிள்ளையும் 'இவ்வுலகத்தில் தனக்குண்டான செல்வத்தைத் தனக்கே என்கை நரக சுகம் போன்றது; தனக்கும் எம்பெருமானுக்கு மென்கை ஸ்வர்க்க சுகம் போன்றது; தனக்கென்கை தவிர்ந்து பகவானுக்கும் பாகவதர்களுக்கு மென்கை பரமபத சுகம் போன்றது. ஆகையால் திருமாலடியார்களைப் பூசிக்க நோற்றச் செல்வம் சிறப்புடையதாம்'' என்றருளினார்.

மனம், வாக்கு, சரீரம் ஆகிய மூன்று கரணங்களாலும் பாகவதாபசாரம் (அடியார் திறத்துப் பிழை செய்தல்) கூடாது; ப்ராம்மணனைக்கொன்றால் ப்ரஹ்மஹத்தி பாபம் வரும். அத்தோஷம்வருகைக்குத் தலையில்குடுமியும்(சிகை) பூணூலும்(யஞ்ஜோபவீதமும்) இருந்தால் போதுமானது; அதுபோலே பாகவத அபசாரத்திற்குப் பெயராலும் வேஷத்தாலும் (பஞ்ச ஸம்ஸ்காராதியாக தாஸ்ய நாமம் பெற்றும் திருமண் தரித்தும் பாகவதராயிருந்தால் போதுமானது) அதாவது இவ்வளவரானவர் திறத்துப் பிழை பட்டாலும் பாகவதாபசாரம்கூடாது. ஞானமநுஷ்டானமிவை நன்றாகவுடையவர் திறத்துப்பட்ட அபசாரம் உடலையும் உயிரையும் பிரித்து ஆத்ம ஸத்தையை (ஆத்மாவின் உள்ளதாம் தன்மையை) அழித்துவிடும். இவ்வபசாரந்தான்

எம்பெருமான் சீற்றத்தை யுண்டாக்கி விடுமாகையாலே அதை நீக்கி வாழ வேண்டுமென்று நம்பிள்ளை அருளினார்

## நம்பிள்ளை கோஷ்டியில் நாட்டங் கொண்ட நம்பெருமாள்

**திருவிளக்குப்பிச்சன்** என்பானொருவன் நம்பெருமாளுக்குத் திருவிளக்குக் கைங்கர்யம் செய்துகொண்டு பித்துப் பிடித்தவன் போலிருப்பான். அதனாலே அவன் பெருமாளுக்கு அந்தரங்கனாயிருப்பன். பெருமாளும் அவனோடு பேசுவது, பரிஹாஸம் பண்ணுவது, அவன் சொன்னது செய்வதுமா யிருப்பர். ஒரு சமயம் நம்பிள்ளை திருவாய்மொழிக்கு அர்த்தம் சொல்லிக் கொண்டிருக்கும் போது நம்பெருமாள் தம்முடைய ஸிம்ஹாஸனத்தை விட்டு வந்து வாயிற்படிகளைக் கைகளாலே பிடித்துக் கொண்டு நம்பிள்ளையைநோக்கி எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தார். அப்போது திருவிளக்குப் பார்க்க வந்த திருவிளக்குப்பிச்சன் இதைப் பார்த்துப் பெருமாளை நோக்கி 'இதென்ன! இப்படிக் கலியுகத்திலே நீர் நினைத்தபடிசெய்யலாமோ! ஸிம்ஹாஸனத்திலே போயிரும்! என்று அதட்டினான். பெருமாளும் ஆமடா! நீ சொன்னது சரிதான். ஆனாலும் நம்பிள்ளை கோஷ்டியைக் காணவேண்டுமென்று வந்திருந்தேன்; இதோ போகிறேன்! என்றுகூறி ஆஸனத்திலே எழுந்தருளினார். இதனைச் சிலர் அறிந்து எல்லோருக்கும் சொல்ல அனைவரும் வியந்தனர்.

ஒருநாள் நம்பிள்ளை பெருந்திரளாகவிருந்து திருவாய்மொழி யர்த்தம் அருளிக் கொண்டிருக்கையில் செல்வர் புறப்பாடு (நித்யப்படி சந்நிதியில் புறப்படும் பெருமாள்) நிகழ அதனாலே கோஷ்டி கலைய, இது கண்டு நம்பெருமாள் செல்வர் நித்யப் புறப்பாட்டை நிறுத்தியருளினான். இன்றளவும் செல்வர் புறப்பாடு கிடையாது.

## நம்பிள்ளைக்குப் பரமபதம்

இப்படி ஊரும் நாடும் உலகமுமெல்லாம் கலியிருள் நீங்கிக் க்ருதயுகம் பற்றிப் பேரின்பவெள்ளத் தாழும்படித் திருத்தி எல்லோரையும் திருமாலுக்கே யடிமையாக்கி வாழ்ந்தருளிய நம்பிள்ளை நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர் மடியிலே முடியையும் பின்பழகிய பெருமாள் ஜீயர் மடியிலே திருவடிகளையும் வைத்து நஞ்ஜீயரை த்யாநித்

துக் கொண்டே திருநாட்டுக்கு எழுந்தருளினுர். பெரியோர்கள் எல்லோரும் வேரற்ற மரம் போல் விழுந்து அழுதுத் தேறி ப்ரஹ்மமேதத்தாலே பள்ளிபடுத்தினர். சிஷ்யர்களான பெரியோர்களெல்லாம் திருமுடிவிளக்கம் (க்ஷௌரம்) செய்துகொண்டனர்.

நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டரும் திருமுடி விளக்கம் செய்துகொண்டார். இது கண்டு அவருடைய தமயனுரொருவர் 'திருக்கலிகன்றி தாஸர் பரமபதத்தையடைந்ததற்கு எங்கள் கூரகுலத்திலே பிறந்த நீர் தலை க்ஷௌரம் செய்துகொண்டது கூரகுலத்துக்கு இழுக்கலலவா?' என்று சொல்ல, பட்டரும் "அப்படியா! ஐயோ! உங்கள் கூர குலத்துக்கு இழுக்காய்ப் பிறந்தேனே! இக்குறையை நீர் என்றைக்குத் தீர்க்கப்போகிறீர்?'' என்று எதிர்மறையாகப் பேசி யனுப்பினுர். அவர் இதைப் பெருமாளிடம் விண்ணப்பிக்க, பெருமாள் நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டரை அழைத்து, 'இது செய்யலாமா?' என்று கேட்க, பட்டரும் "நம்பிள்ளையையும் அடியேனையும் பாராதே எல்லா மறிந்தவரான தேவரீர் இப்படிக் கேட்பதே! ஸ்வாமி! நம்பிள்ளை திருநாட்டுக்கு எழுந்தருளினுர், அவர் திருவடிகளை அடைந்துய்ந்திருக்கும் அடியேன் கூரத்தாழ்வானுடைய சேஷத்வ பாரதந்தர்யத்துக்கு (அடிமையாயிருத்தல், இட்டவழக்கா யிருத்தல்) தகுதியாக கூரகுலத்திலே பிறந்தபின், சிஷ்யர்கள், புத்ரர்கள் கார்யமான தலை க்ஷௌரம் செய்துகொண்டதுக்குத் தேவரீர்முனிவதோ?'' என்று விண்ணப்பஞ் செய்யப் பெருமாளும் 'அப்படியோ!' என்று தீர்த்தம், ப்ரஸாதம், ஸ்ரீசடகோபம் இவைகளைத் தந்து அவரைக் கொண்டாடி அவரை வீட்டில் விட்டு வரும்படி செய்தான்.

இப்படி நிலைநின்ற புகழையுடைய நம்பிள்ளைகளின் பெருமை பேசி முடியாது. அவரருளிய உபதேசங்களும் பலப்பலவா யிருக்கும். அவர் திருவாய்மொழிக்கு வ்யாக்யானம் (உரை) தவிர, திருப்பல்லாண்டு, திருவிருத்தம், கண்ணிநுண் சிறுத்தாம்பு என்ற நூல்களுக்கு உரையும், மைவண்ண நறுங்குஞ்சி என்ற பாசுரத்துக்கு உரையும், ஸ்ரீவைஷ்ணவ ப்ரபாவம முதலான நூல்களையும் அருளினுர்.

நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டரை ஒரு ஸ்ரீவைஷ்ணவர், 'உமக்கு ஆசார்யனிடத்தில் நன்றி மறவாமை எத்

தனை நாளைக்கு நடக்கும்?' என்று கேட்க, அவரும் "ஆத்மா உள்ளதனையும் "நடக்கும் என்றார் அது கேட்ட அத் வைஷ்ணவர் "ஆத்மா வுள்ளதனையும் நடக்குமே..!' எனப் பலகாலும் சொல்லி வியந்து, அந்த பட்டரின் திருவடிகளின் உறவு பெற்று உயர்ந்த ஞானத்தராய் உய்ந்தார். இதனால் ஆசார்யன் செய்த உபகாரத்தை ஒருநாளும் மறக்கக்கூடா தென்பதாம்.

## பெரியவாச்சான்பிள்ளை

பின்பு பெரியவாச்சான் பிள்ளை நம்பிள்ளையை அடைந்திருந்த பெரியோர்களை யெல்லாம் கூட்டிக் கொண்டு சித்தாந்தத்தை நிர்வாகம் செய்து வந்தார்.



அப்போது ஒருவர், "ஞான நிஷ்டராய் இருப்பாரெல்லாம் உம்மை வணங்குகிறார்களே; அதற்கு நீர் என்ன நினைப்பீர்'? என்று கேட்க, 'அடியேன் அஹங்காரியாகையாலே (தன்னைப்பற்றித் தானே கூறுவது ஆணவம் என்பதால்) அடியேனுக்கு ஸ்ரீ வைஷ்ணவத்வம் (ஸ்ரீ வைஷ்ணவ குணங்களோடு கூடியிருக்குந்தன்மை) உண்டென்று நினைத்திருப்பன்; ஈசுவரன் தான் கைக் கொண்ட வஸ்து வாகையாலே அடியேனை வைஷ்ணவன் என்று நினைத்திருக்கும்; ஞான நிஷ்டர்களின் நினைவு அடியேனுக்குத் தெரியவில்லையென்றாலும், அடியேனைக் கூடியிருப்பதால் அவர்கள் நினைவாலும் அடியேனுக்கு ஸ்ரீ வைஷ்ணவத்வ முண்டென்று தெரிகிறது. ஆக அடியேனாலும் ஈசுவரனாலும் ஸ்ரீவைஷ்ணவர்களாலுமாக மூன்று வகையிலும் முப்புரி யூட்டிய ஸ்ரீவைஷ்ணத்வம் உண்டென்று நினைத்திருப்பன்' என்று அருளினார். இதனால் இப்படி மூவகை அபிப்ராயத்தாலும் ஸ்ரீவைஷ்ணவத்வம் உறுதியானாலும், அதனாலுண்டாகிற பெருமதிப்புப் புத்தியின்றிக்கே யிருக்கிற புத்தி விசேஷம் சொல்லப்பட்டது.

## ஆத்மாவின் தன்மை

பெரியவாச்சான் பிள்ளையைச் சிலர் தஞ்சமான அர்த்தத்தை அருளும்படி கேட்டனர். அதற்கு அவர், கலங்குகிறவனும் கலக்குகிறதும் கலங்கிக் கிடக்கிறவர்களும், தெளிவிக்கிறவனும் தெளிகிறவனும் தெளிந்திருக்கிறவனுமாயல்லவா இங்குக் காண்பது. அதாவது கலங்குகிறவன்— ஜீவாத்மா; கலக்குவது—பகவானையும் ஆத்மாவையும் அறியவிடாமல் மறைத்துத் தன் விஷயத்திலே மூளும்படி பண்ணுகிற அசித்து (ப்ரக்ருதி யெனவும்படும்); கலங்கிக் கிடக்கிறவர்கள் தேஹமே ஆத்மா என்று கிடக்கும் ஸம்சாரிகள். தெளிவிக்கிறவன் ஆசார்யன்; தெளிகிறவன் ஞானவானான ஜீவாத்மா என்கிற சேதன; தெளிந்திருக்கிறவன் ஈசுவரன். ஆகையால், கலங்குகிற தன்னையும், கலக்குகிற ப்ரக்ருதியையும், கலங்கிக் கிடக்கிற ஸம்சாரிகளையும் தஞ்ச மன்றென்று கைவிட்டு, தெளிவிக்கிற ஈசுவரனையும் (ஸ்ரீமந் நாராயணன்) தஞ்சமென்று பற்றுகையே ஆசார்யனாலே தெளிந்த இவ்வாத்மாவுக்குத் தன்மை (ஸ்வரூபம்) என்றருளினார்.

இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபமான பாரதந்த்ர்யம் (உயிரின் தன்மையான— பகவானுக்கு அவனிஷ்டப்படி ஆநந்தத்தை விளைவித்துக்கொண்டு அடங்கியிருக்கை) எப்படிப்பட்டது என்று கேட்டதற்கு, 'தன்னைக் காத்துக் கொள்வதற்குத் தான் முயலும் தன் சக்தியை விட்டு எல்லாம் வல்லவனான (ஸர்வசக்தன்) எம்பெருமானை அண்டை கொண்டு (அடைந்து), அவனருளே உபாயமென்று (தான் பண்ணின சரணாகதியும் உபாயமல்ல) என்று கைம்முதலின்றி, உபேயமாகிற ஈசுவர கைங்கர்யத்தில் (குற்றேவலில்) ஆசையாலே, பெறுதற்கு வேகப்படுவது விஞ்சியிருக்கை பாரதந்த்ரயம்' என்று பெரியவாச்சான்பிள்ளை அருளினார். இத்தால் தன் செயலறுகையும் அவனைப் பற்றுகையும் அவன் அதீனமென்றிருக்கிற இவ்வதிகாரிக்கு எல்லாம் அவன் (பகவான்) முயற்சியே என்றிருக்கவேணும் என்பதாயிற்று.

## பாகவதாபசாரம் மிகக் கொடிய அபராதம்

ஒரு சமயம் பிரிவுக்கு அஞ்சுகிறவர்களாய் அதனாலேயே ஒருவரையொருவர் விட்டுப் பிரியாமலிருந்த

இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் உலகியல்பாலே விருப்பு வெறுப்பு மேலிட்டு ஒருவர் பெரியவாச்சான்பிள்ளையிடம் வந்து மற்றொருவரைப் பற்றிக் குறைகளைச் சொன்னார். அங்கிருந்தவர்கள், 'இவர் இப்படி பாகவதரைக் குறைகூற லாமோ!' என்றுகேட்கப் பிள்ளையும் அவர்களைப்பார்த்து "அவர் (அந்தக் குறை கூறிய வைஷ்ணவர்) செய்ததை அறியீரோ! குற்றங் கண்டு தண்டிக்கிறவனை யமனும் கூடத் தன் தூதுவரைக் கூவி, "பரிஹர மதுஸூதன ப்ரபந்நாத்" திறம்பேண்மின் கண்டீர் திருவடிதன் நாமம் மறந்தும் புறந்தொழா மாந்தர் என்கிறபடி பாகவதர் களைக் கண்டால் சாதுவராய் ஒதுங்கிப் போவீர் என்று பாகவதர் குற்றங்களை நீங்கள் காணக்கூடாதென்றான். பிராட்டி 'நகச்சிந்நா அபராத்யதி' (குற்றஞ்செய்யாதவர் யாருமில்லை) என்று குற்றங் காணவொண்ணாதென்றாள். பெருமாள், 'செய்தாரேல் நன்றி செய்தார்' என்று அடியார் குற்றத்தையும் நற்றமாகக் கொள்வன் என்றான். ஆழ்வார், 'அவன் தமர் எவ்வினையராகிலும் எங்கோ னவன் தமர்' என்று பாகவதர்கள் எக்குற்றத்தை யுடையராயி னும் எனக்கு ஸ்வாமிகளே என்றருளினார். அதனால்— அதாவதுஇவர்களெல்லாம் பாகவதகுற்றம் காணவொட் டோம் என்றிருப்பதனால் இங்கு "இந்த வைஷ்ணவருடைய குற்றத்தை நம்மையொழியவேறுயார் சொல்லுவர்என்று இவர் அவருடைய குற்றங்களை வெளியிட்டது" என்று கூறினார். இதனால் ஞானவான்களு முட்படப் பாகவதக் குற்றம் சொல்லக்கூடாதென்பதாம்.

ஒரு சமயம் பாகவத வைபவம் சொல்லிக்கொண்டி ருந்தார். இடையே ஒருவர் பகவானுடைய வைப்வம் சொல்லத் தொடங்கினார். அதற்குப் பெரியவாச்சான் பிள்ளை. "பாகவத வைபவம் விசேஷம் (சிறந்தது); பகவத் வைபவம் சாமான்யம் (சாதாரணம்) என்று பாகவத வைபவத்தை நிறுத்திப் பகவத் வைபவம் பேசுவது சரி யல்லவென்று வெளியிட்டார்.

## ஜகத் ஸ்வாமியே அஸ்மத் ஸ்வாமியாகும்

பெரியவாச்சான் பிள்ளையைச் சேவித்திருந்து அவரு டைய சிறிய தாயாரின் குமாரர் புறப்படுகிறபோது பிரி கிறோமே என்று மனம் கலங்க, பிள்ளையும் கலக்கமேன்? என்று கேட்டார், அதற்கு அவர், அநாதி காலம் நான்

பண்ணின பாபத்தின் வாசனையின் (ஊறிப்போயிருக்கும் பழக்கத்தின்) பலத்தாலே மறுபடியும் பிறவிக்குக் காரண மான செய்கையில் ஈடுபடும்படியாகி அதனால் ஈசுவரன் என்னை மறுபடியும் பிறவியில் தள்ளப்போகிறானே என்று அஞ்சுகிறேன் என்று பதில் கூறினார். ஆச்சான்பிள்ளையும் இதுயாருக்கு நஷ்டமென்றிருந்தாய்; உனக்காகவா அவன் சிருஷ்டி பண்ணினான்? உன் ப்ரயோஜனத்துக்காகவோ அவன் அவதாரங்கள் செய்தது? ஒருவனைப்பிடிக்கைக்காக ஊரை வளைப்பாரைப் போலே அகில ஜகத் ஸ்வாமியா னமை அஸ்மத் ஸ்வாமி யாகைக்காக வல்லவா (உலகங் களுக்கெல்லாம் ஸ்வாமியாயிருப்பது எனக்கு ஸ்வாமியா கைக்காகவல்லவா); ஆகையால், அவன் செய்யும் செயல் களெல்லாம் ஒருஆத்மாவைப் பெறுகைக்காகவே; எனவே பேறு, இழப்பு இரண்டும் தன்னுடையதாக அவன் ரக்ஷிக்கும் என்று கவலையற்றிரும்'' என பதில் சொன்னார்.

பெரியவாச்சான்பிள்ளை ஆழ்வார்க ளருளிய திவ்ய ப்ரபந்தத்துள் திருவாய்மொழிக்கு இருபத்து நாலாயிரப் படி உரை தவிர மற்ற ப்ரபந்தங்களுக்கெல்லாம் வ்யாக் யானமும் அருளினார். இந்த வ்யாக்யானம் இல்லையானால் ஆழ்வார்களின் ப்ரபந்தங்களுக்கு உள்ளவாறு பொருளறி வாரார். இதைக் கொண்டு தான், 'ஆரியர்கட் கிப்போது அருளிச் செயலாய்த் துறிந்து என மணவாள மாமுனி களும் அருளினர். ஆச்சான்பிள்ளை இது தவிர **ரஹஸ்ய த்ரய விவரணம், தத்வத்ரய விவரணம்** முதலான அநேக ரஹஸ்ய க்ரந்தங்களையு மருளினார்.

## வாதிகேசரி அழகிய மணவாள ஜீயர்

ஒருநாள் பெரியவாச்சான்பிள்ளையின் சீடரான வாதி கேசரி அழகிய மணவாள ஜீயர் என்பவர் இல்லறத்திலே வாழ்ந்தருளும்போது எழுத்து வாசனையே அல்லாதவரா யிருந்தார். அதனால் சில வித்வான்கள் கூடி சாஸ்த்ர விசா ரம் செய்துகொண்டிருக்கும்போது, "அது என்ன நூலைப் படிக்கிறீர்கள் என்றுகேட்க, அவர்கள் இவருக்குப் படிப்பு வாசனை கிடையாது என்பதனால் கேலியாக முசலகிசலயம் (உலக்கைக் கொழுந்து) படிக்கிறோம் என்று கூறினர். அதைஉண்மை என்றெண்ணி வாதிகேசரி ஆச்சான்பிள்ளை யிடம் அப்படியொரு நூலுண்டோ எனக் கேட்க, பிள்ளை யும் உமக்குப் படிப்பு இல்லையென்பதைக் காட்ட இப்படி உலக்கைக் கொழுந்து படிக்கிறோம் என்று கேலி செய்த னர் என்ன, வாதிகேசரியும் ஆச்சான்பிள்ளை திருவடிகளில்

வீழ்ந்து வணங்கி அடியேனை வித்வானுக்கி யருளவேண்டு மென வேண்ட, அப்படியே செய்தருளினார். வாதிகேசரியும் எல்லா காவ்ய நாடக மீமாம்ஸை முதலான சகல சாஸ்த்ரங்களையும் தேர்ந்து ஸம்ப்ரதாயார்த்தங்களையுமெல்லாம் பெரியவாச்சான் பிள்ளையிடமும் நன்கு கற்றுத் தேர்ந்து "முசலகிசலயம்" (உலக்கைக்கொழுந்து) என்று பெயரிட்டு ஒரு நூல் செய்து, அதை முன்பு தயமைக் கேலி செய்தவர்களிடையே காட்ட அவர்கள் கண்டு தலை கவிழ்ந்தனர். இவர் திருவாய்மொழிக்குப் பன்னீராயிரப்படி என்னும் உரை நூல் செய்தார். மேலும் திருவாய்மொழிக்குத் **தாத்பர்ய ரத்நாவளி** முதலானவற்றைச் செய்தருளினார்.

பெரியவாச்சான்பிள்ளை சோழமண்டலத்திலே சங்கநல்லூர் என்னும் ஊரில் யாமுனாசார்யர் என்பவருக்கு ஆவணி மாதத்தில் ரோகிணியில் அவதரித்தவர். நம்பிள்ளை திருவடிவாரத்தில் ஸகலார்த்தங்களையுமறிந்தவர். இடபடிப் பெரும் புகழாளரான பெரியவாச்சான் பிள்ளை காலத்தில் பிற்காலத்தில் **தேசிகர்** என்று கூறப்படுகிற **தூப்பில்பிள்ளை** என்பவர் உபாசனை (ஒரு மந்த்ரத்தை உபாயமாகக் கொண்டு ஜபிப்பது) செய்து அதனால் ஞானம் பெற்று வாழ்ந்திருந்தார். உபாஸனையின் பலத்தால் தமக்கு



எல்லா சாஸ்த்ரங்களும் வருமாகையாலே, எம்பெருமான் தொடங்கி ஆழ்வார்கள் வழியாக வந்த நாதமுனிகள், உய்யக் கொண்டார், மணக்கால்நம்பி, ஆளவந்தார், எம்பெருமானார் முதலான ஆசார்யர்களால் இடைப்பாடில்லாமல் வளர்ந்து வரும் ஸம்ப்ரதாயத்துக்கு விரோதமாக சாஸ்த்ரார்த் தங்களைக் கூறி மற்றொரு ஸம்ப்ரதாயத்தை உருவாக்கி வந்தார்.

நம்பிள்ளையின் அநுக்ரஹத்தால் வடக்குத் திருவீதிப் பிள்ளைக்குக் குமாரர்களாக அவதரித்திருந்த பிள்ளை லோகாசார்யர், அழகிய மணவாளப் பெருமாள் நாயனர் ஆகிய இருவரும் இளமைப்பருவம் தொடங்கி பெருமாளை யும் இளையபெருமாளையும் (ராம லக்ஷ்மணர்கள்) போல இணைபிரியாதவர்களாக ஸகல சாஸ்த்ரங்களையும் கற்றுத் தகப்பனரான வடக்குத் திருவீதிப் பிள்ளையிடமே திருவாய்மொழி ஈடு முப்பத்தாறுயிரம், ஸ்ரீபாஷ்யம் மற்று முண்டான ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்தங்களை யெல்லாம் தேர்ந்து வல்லவராக வாழ்ந்து வந்தனர். அவர்கள் ப்ரபந்நனுக்கு 'விஹித விஷய நிவ்ருத்தி தன்னேற்றம்' (சாஸ்த்ர விதியோடு கூடியிருப்பினும் இல்லற வாழ்க்கை இல்லாமலிருப்பது சிறப்புடையது) என்று ப்ரம்மசாரிக ளாகவே இருந்தனர்.

## ஸ்ரீவசநபூஷணம், ஆசார்ய ஹ்ருதயம் உதயம்

பிள்ளைலோகாசார்யர் பூருவர்கள் உபதேசித்து ஆசரித்து (அநுஷ்டித்து)வந்த ரஹஸ்யார்த்தங்களையெல்லாம் 18 ரஹஸ்ய க்ரந்தங்களாக ஆக்கியருளினர். அவற்றுள்



ஸ்ரீவசநபூஷணம் என்னும் க்ரந்தம் முன்னோர் மொழிந்த வசனங்கள் தம்மை சேரச் சமைத்த தாகையாலே அப்பேர் பெற்றது. அதில் மற்றவர்களுக்குச் சாஸ்த்ர வ்ருத்தம் (விரோதம்) போல் தோன்றும் பல ஆசார அநுஷ்டானங்களைப் பெரியோர்களின் உபதேசம், அநுஷ்டானம் இவைகளைக் கொண்டு நிரூபித்துப் அவைகளுக்கு விசேஷ சாஸ்த்ரங்களைக் கொண்டு விரோதமில்லாமையைக் காட்டியும் பரபந்நர்களுக்கு இவைகள் தாம் முடிந்த முடிபாகக் காட்டியுள்ளார்.

இந்த ஸ்ரீவசநபூஷண நூலைப் பற்றி தூப்பில்பிள்ளை சாஸ்த்ர விரோதமானது என்று கூற, அதைக் கேட்டு அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரும் அவரோடு விவாதம் செய்தார். தூப்பில்பிள்ளை இசையாமலேயே நம்பெருமாள் புறப்பாட்டிலே இருவரும் ஒரு ப்ரதிக்ஞை செய்துகொண்டனர். அதாவது நாயனார் அருளும் பொருளுக்குப் பெருமாள் இசைந்தால் தூப்பில்பிள்ளை பன்னிரண்டு வருஷங்கள் நம்பெருமாள் சேவையை இழந்து ஸ்ரீரங்கத்தை விட்டு வெளியே போய்விட வேண்டுமென்றும், பெருமாள் இசையாமற்போனால் நாயனார் அந்நூலை இழப்பது என்றும் உறுதி செய்துகொண்டனர். அதன்படி நாயனாரும் ஒரு வீதிக்கு ஒரு ப்ரகரணமாக நான்கு ப்ரகரணங்களாக **ஆசார்ய ஹ்ருதயம்** என்கிற நூலை உபந்யஸித்தனர். இதைத் திருச்செவி சாற்றிய நம்பெருமாளும் ஒரு ப்ரகரணத்துக்கு ஒரு மாலையாக நழுவவிட்டு நாயனாருக்கு அணிவித்துத் தம் இசைவைத் தெரிவித்து ஆசார்ய ஹ்ருதய நூலை அங்கீகரித்தார். பிறகு தூப்பில்பிள்ளையும் உறுதி செய்துகொண்டபடி ஸ்ரீரங்கத்தை விட்டு வெளியேறினார்.

## தூப்பில்பிள்ளை கண்ட கனவு

பிறகு ஒரு சமயம் தூப்பில்பிள்ளை பெரிய கோயிலில் வாசம் செய்துகொண்டிருந்தபோது பெரியவாச்சான் பிள்ளை பெரிய பெருமாளைச் சேவித்து நின்று, "பெருமாளே! தேவரீர் பரந்த கருணையுள்ளங்கொண்டு ஆத்மாக்களின் சிறந்த வாழ்வுக்காக (உஜ்ஜீவனம்) ரஹஸ்யங்களையும் வெளிப்படுத்தி, அவற்றை நாதமுநிகளுக்கு ஆழ்வாரைக்கொண்டு நேராகவே அருளச்செய்து, நாதமுனிகளைக் கொண்டு ஸம்ப்ரதாய பரம்பரையாக இன்றளவும் நடத்திக்கொண்டு வருகிற இந்த தரிசனத்துக்கு விரோதமாக தூப்பில்பிள்ளை யென்கிறவர் உபாசனையால் பெற்ற ஞானச் செருக்காலே வேறான ஸ்ம்ப்ரதாயத்தைப் பரவச் செய்துகொண்டு அபசாரப்படா நின்றார். அவரைத் தேவரீர் திருத்தி, அதைத் தவிரச் செய்து பூர்வாசார்ய ஸ்ம்ப்ரதாயத்தைச் சாரும்படி அநுக்ரஹிக்கவேணும்" என்று விண்ணபித்துக்கொண்டார்.

பெருமாளும் அப்படியே திருவுள்ளம் பற்றித் தூப்பில் பிள்ளைக்கு ஒரு கனவு உண்டாகும்படி செய்தருளினார்.

அக்கனவில் ஸ்ரீரங்க நகரத்திலே தோரணங்கள் கட்டுவது, திருவீதிகளெல்லாம் நீர் தெளித்துக் கோளங்க ளிடுவது முதலான அலங்காரங்கள் செய்யப்படுவதைக் கண்டு, இன்றைக்கென்ன விசேஷம் என்று எண்ணுகிறபோதே மத்தளங் கொட்ட, வரிசங்கம் நின்றூத, திருச்சின்னம் பரிமாற ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களும் ஜீயர்களும் பெரிய வாச்சான் பிள்ளையை ப்ரம்மரதம் (பல்லக்கி லேற்றிச் செல்வது) பண்ணிக்கொண்டு எழுந்தருள, வழியிலுள் ளார், தூபமெடுப்பார், பூமழை சொரிவார், ஆலத்தி வழிப்பார், மங்களாசாசனம் செய்வாராய் வழிநடந்து பெரியபெருமாள் கோபுரம் குறுகினவாறே பெருமாளும் நாச்சிமாருடனும் நித்யமுக்தருடனும்கூடி எதிர்கொண்டு பெரியவாச்சான் பிள்ளையை அழைத்துக்கொண்டு போக, மற்றுமுண்டான பெரியோர்களெல்லாம் உள்ளே புக, அவர்களோடு தாமும் (தூப்பில்பிள்ளையும்) புக முற்பட, வாயில்காப்பார் தம்மை உள்ளே போகவிடாமல் தகைய, இதென் என்று அவர்களைக் காரணம் கேட்க, அவர்களும் பெரியபெருமாள் நடத்தியருளும் ப்ரபந்ந தரிசனத்தில் நீர் அபசாரப்பட்டீராகையாலே நும் மேல் பெருமாள் திருவுள்ளம் கலங்கி யுள்ளாராகையாலே நுமக்கு உள்ளே புக நியமனமில்லை; அதனால் வெளியே போமென்று தள்ளி விட்டனர்.

## பெரியவாச்சான்பிள்ளை தூப்பில்பிள்ளை சம்வாதம்

இவ்வாறு தாம் கண்ட கனவுக்குக் கலங்கித் தூப்பில் பிள்ளையும் விடிந்ததும் நித்யகடன்களை முடித்துக்கொண்டு நோய்வாய்ப் பட்டிருந்த பெரியவாச்சான் பிள்ளையை அடைந்து தண்டனிட்டுத் திருமேனியைப் பற்றி விசாரித் தார். அவரைக் குளிர நோக்கிப் பெரியவாச்சான்பிள்ளை யும் "நமக்கு லீலாவிபூதியிலே (விளையாட் டுலகத்தே) அர்ச்சாவதார அநுபவம் முடிந்தது; இனி நித்ய விபூதிக் குப் போவதாக யிருக்கிறோம்' என்னத் தூப்பிள்பிள்ளை யும் "ஸகல வரிசைகளுடனே தேவரீர் திருநாட்டுக்கு எழுந்தருளுவதாகக் கனாக் கண்டேன்' என்றார். அப்ப டியோ!' என்று உகந்து தூப்பில்பிள்ளையை அணைத்துக் கொண்டார். பிறகு வாயில்காப்பாளரால் தாம் தள்ளப் பட்டதை விண்ணப்பித்து, இனி அடியேன் செய்யவேண்டு வது யாது?' என்று கலங்கிக் கேட்க, அவருடைய நிலை

கண்டு மனமிரங்கிப் பெரியவாச்சான்பிள்ளை அவரைக் கடாக்ஷித்து, "தூப்பில்பிள்ளை! நாம் ஒன்று சொல்கிறோம் கேட்பீரா!' என்று கேட்க, 'அப்படியே செய்கிறேன்' என்று தூப்பில்பிள்ளை சொல்ல, ஆச்சான்பிள்ளையும் அவரைக் குறித்து, ""நீர் அநுகூல ஸஹவாஸத்தை(ஆத்ம குணங்களை வளர்ப்பவராயும் பகவானின் குணங்களை அநுபவிப்பதற்கு அநுகூலராயு மிருப்பவரோடு சேர்ந்திருக்கை)ச் செய்யாமல், அஹங்கார மமகாரத்தாலே வேறு ஸஹவாஸத்தைச் செய்து, பகவத் விஷயம் தவிர வேறு ப்ரயோஜனங்களை விரும்பி, வித்யையை அடைவதற்கு வேறு மந்திரங்களை உபதேசம் பெற்று ஹயக்ரீவனை உபாசனை பண்ணி அதனால் வித்யையின் பெருமையை அடைந்தீர். அந்த வித்யைக்குப் பயன் பிற மதங்களை வெல்லுகையும் பூர்வாசார்யர்களின் ஸம்ப்ரதாய பரிபாலனம் செய்கையுமாய் இருக்கவேண்டும். அதைப் புறக்கணித்து முன்னோர்களின் ஸம்ப்ரதாய முடிவான அர்த்தங்களைக் கண்டித்து விச்வாமித்ர சிருஷ்டியாகப் புது அர்த்தங்களைக் கல்பித்துப் பரவச் செய்தீர். அது பெரிய அபசாரம் ஆகையாலே பெருமாள் திருவுள்ளம் கலங்கிற்று. அதனால் அந்த விச்வாமித்ர சிருஷ்டியான அர்த்தங்களைச் செய்யாமல் பூர்வர்க ளருளிய அர்த்தநெறியில் நில்லும்'' என்று அருளினார்.

அதற்குத் தூப்பில்பிள்ளை, 'அடியேன் அப்படியோ செய்தேன்! ஸ்ரீபாஷ்யத்தைச் சொல்லிக்கொண்டும் அதற்குத் தக்கபடி சில நூல்களை எழுதி வெளியிட்டு மன்றோ வந்தது' என்று பதில் சொல்ல, பெரியவாச்சான் பிள்ளையும் அதையன்று நாம் குறிப்பிட்டது. அதுவிஷயத்திலும் (ஸ்ரீபாஷ்ய விஷயத்திலும்) நீர் சும்மா இருந்தீரா? அதில் சில குற்றங்களுண்டென்று எழுதப்புக, எம்பெருமானார் நும் கனவில் தோன்றி முக்கோலால் புடைத்துக் கோபித்த பிறகன்றோ திருந்திப் பயபக்தியுடன் பிழை பொறுத்தருள வேண்டி 'யதிராஜ ஸப்ததி' என்கிற நூலை விண்ணப்பித்ததும் ஸ்ரீபாஷ்யத்தைப் பிரசாரம் செய்ததும்; அதையல்ல நாம்சொல்வது; நம்மாழ்வார் நாதமுனிகளுக்குத் திவ்ய ப்ரபந்த விஷயமாகவும் ரஹஸ்ய விஷயமாகவும் ப்ரத்யக்ஷமாகச் சொல்லியருளிய அர்த்தங்களைக் கண்டித்து வேறே சில அர்த்தங்களைக் கற்பித்து நூல்கள் எழுதாநின்றீர்; அதைத் தவிர்க்கவேண்டு மென்கிறேன்' என்றருளினார்.

அதற்குத் தூப்பில்பிள்ளை, "நம்மாழ்வார் தம் ரஹஸ்யங்களுக்கும் திவ்ய ப்ரபந்தங்கட்கும் விவரணம் செய்த துண்டோ? அப்படியிருந்து அதற்கு மாறாக அடியேன் செய்திருந்தால் பிழையாகலாம். இப்பாற்பட்டவர்களாலன்றோ அர்த்தங்கள் அருளியது. அவை சாஸ்த்ர ப்ரமாணங்களுக்குச் சேர்ந்திராமையாலே யன்றோ நாமும் கண்டித்தெழுதியது' என்றார். அது கேட்டுப் பெரியவாச்சான் பிள்ளை, 'அது அப்படியல்ல; நம்மாழ்வார் மதுரகவிகள் மூலமாக வெளியிட்ட திருவாய்மொழி முதலான ப்ரபந்தங்கள் நலிந்து போக, பின்பு பெருமாள், அர்ச்சையிலுள்ள நம்மாழ்வாரைக் கொண்டு நாதமுநிகளுக்கு நேராக அருளும்படி செய்ய, நாதமுநிகளும் ஸம்ப்ரதாயமாகத் தமக்குப் பின்புள்ளாருக்கு அருளிச்செய்ய, இப்படி பரம்பரையாக வந்து இப்பாலுள்ளார் அவ்வர்த்தங்களை மந்தமதிகளும் அறியும்படி நூல் வடிவமாக்கினர்; அதனால் அதற்கு மாறாகச் செய்வதை விடவேணும் என்கிறேன்' என்றார்.

அதற்கு மறுபடியும் தூப்பில்பிள்ளை, "ஆழ்வார் ப்ரமாணங்களுக்கு விரோதமாக அருளிச்செய்வரோ? அதை அடியேற்கு அருளிச்செய்யவேணு' மென்று கேட்கப் பெரியவாச்சான்பிள்ளையும், "ஆழ்வார் முக்தி தசையில் எல்லாவற்றையும் நேராகக் கண்டிருக்கிறவராகையாலே தாம் நேரே கண்ட அர்த்தங்களையே நாதமுநிகளுக்கு அருளியதாகையாலே அவைகளுக்குத் தக்கவாறுள்ள ப்ரமாணங்களைக் கைக்கொண்டு மற்றுள்ளவற்றை அதற்குத் தக்கவாறு இசைவிக்கவேணும்; கண்டதைக் கொண்டு காணாதவற்றை ஒருங்கு விடவேணும்; காணாததைக் கொண்டு கண்டதை அழிக்கலாமோ? ஆளவந்தார், எம்பெருமானார், திருக்குருகைப்பிரான் பிள்ளான், அருளாளப்பெருமாளெம்பெருமானார், பட்டர், நஞ்ஜீயர் முதலானோருடைய பெருமைகளை அறிந்திலீரோ? அவர்களுக்குத் தெரியாத ப்ரமாண நிலை உமக்குத் தெரியுமோ? அவர்களெல்லாரும் வெறும் சாஸ்த்ரங்களைக் காட்டிலும் ஆழ்வாருடைய ப்ரத்யக்ஷங்களுக்குச் சேர்ந்த சாஸ்த்ரங்கள் தாம் முக்கியமாகையாலே தத்வத்திலும் (உண்மைப் பொருளிலும்) அநுஷ்டானத்திலும் நாதமுநி மூலமாக அருளிய கட்டளையை உபதேச பரம்பரையாலே பெற்று அதுவே ஸத்யமென்று நிர்ணயம் பண்ணிக்கொண்டு

அதற்குச் சேராதவற்றைக் கேள்வி யெழுப்பி அநுகூலங்களை ஏற்றுக்கொண்டு முன்னோரின் அர்த்தங்களையே தங்கள் தங்களைச் சார்ந்தார்களுக்கு உபதேசித்துக்கொண்டு வந்தார்கள். அதனால் அந்த நிலைக்கு மாறாக நீர் வேறே ஒரு அர்த்தத்தைக் கூறி வரும் புதிய வழியை விடும்'' என்றருளிச்செய்தார்.

## தூப்பில்பிள்ளை மனமாற்றம்

அது கேட்டுத் தூப்பில்பிள்ளையும் எல்லாம் அறிந்தவராகையாலும் பெருமாள் காட்டிய கனவாலும் மனம் மாறி அநுதாபம் பிறந்து, "இதை யறிந்திலேன்; உலகத்திலுள்ள உரைகளைப் போலே முன்னோர்கள் தங்கள் தங்கள் யுக்திகளுக்குத் தக்கவாறு உரை செய்தார்கள் என்றிருந்தேன்; இப்போது தெளியப்பெற்றேன்' என்று விண்ணப்பம் செய்து தான் முன்பு செய்திருந்த புதுவழி நூல்களை யெல்லாம் கொண்டுவந்து பெரியவாச்சான்பிள்ளை திருமுன்பே வைத்து அருகிருந்த தம்மைச் சார்ந்தவர்களை நோக்கி 'இனி இந்த நூல்களை யாரும் வெளியிடக்கூடாது' என்று ஆணையிட்டு, இதுவரை இந்த நூல்கள் பரவிவிட்டமைக்கு மிகவும் வருந்திக் கண்ணும் கண்ணீருமாகப் பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளிலே விழுந்து கிடந்தார்.

பெரியவாச்சான்பிள்ளை தம் முடியாமையாலே அருகிருந்தாரைக் கொண்டு அவரை எடுப்பித்து அணைத்துக் கொண்டு, ""இத்தனை அநுதாபம் பிறந்தபோதே பெருமாள் பொறுத்தருள்வார்; அதனால் பெருமாள், ஆழ்வார், எம்பெருமானார் சந்நிதிகளுக்குச் சென்று பிழைபொறுக்க வேண்டி வாரும்'' என்றார். அவ்வாறே அவரும் சென்று பிழை பொறுக்க வேண்டிக்கொண்டு பெரியபெருமாள், ஆழ்வார், ஆசார்யர்கள் விஷயமாக '**க்ஷமாஷோடசீ**' என்ற நூலைச் செய்து பெரியவாச்சான்பிள்ளை முன்பு விண்ணப்பிக்க, ஆச்சான்பிள்ளையும் மிகவு முகந்து தூப்பில்பிள்ளைக்குப் பஞ்ச ஸம்ஸ்கார பூர்வகமாக எல்லா அர்த்த விசேஷங்களையும் அருளிச்செய்தார். அதைப்பெற்ற தூப்பில்பிள்ளை, "தமக்குத் திருவாராதனம் (ஆராதிப்பதற்கு அர்ச்சா திருமேனி) தந்தருளவேணும்' என்று வேண்டினர். பெரியவாச்சானபிள்ளையும் அவரை நோக்கி, 'கண்ணைக்கட்டிக்கொண்டு நம் கோயிலாழ்வாரிலுள்ளவர்

களில் ஒருதிருமேனியை எழுந்தருளப்பண்ணிக்கொள்ளும் என்ன, அவரும் அப்படியே செய்ய, அவர் கையில் அகப்பட்டதிருமேனி திருப்பாணாழ்வார்திருமேனியாயிருந்தது. அதைக்கண்ட பெரியவாச்சான்பிள்ளை, "உம்முடைய நெஞ்சைச் சோதிக்கைக்காக எம்பெருமான் இப்படி கிருபை செய்தான்; அதனால் இவரை நித்யமாக ஆராதித்திரும்; மேலும் அவரருளிய 'அமலனாதிபிரா'னுக்கு ஒரு வ்யாக்யானம் (உரை) செய்யும். அதுகொண்டு ஜாதியைச் சுட்டிவந்த பிழைகளையெல்லாம் பெருமாள் பொறுத்தருள்வர்' என்றருளிச் செய்ய, தூப்பில்பிள்ளையும் அப்படியே அமலனாதிபிரானுக்கு உரையெழுதிக்கொண்டுவந்து பெரிவாச்சான்பிள்ளையிடம் விண்ணப்பிக்க, அதைக் கேட்டு மிகவும்உகந்தார். தூப்பில்பிள்ளையும்பூர்வாசார்ய ஸம்ப்ரதாய வழியே காலக்ஷேபமாக வாழ்ந்தருளப் பெரிவாச்சான்பிள்ளையும் சில நாளிலே திருநாட்டுக்கு எழுந்தருளினார். தூப்பில்பிள்ளையும் மற்ற ஞானவான்களோடு சேர்ந்துகொண்டு இறுதிச் சடங்கு முதலானவற்றைக் குறைவற நடத்தியருளினார். (இந்த வ்ருத்தாந்தம் பழ நடை விளக்கத்தில் விளக்கப்பட்டுள்ளதாம்.)

வ்யாக்யான சக்ரவர்த்தி என்றும் அபயப்ரதான சாரர்என்றும் சிறப்பிக்கப்படுகிற பெரியவாச்சான்பிள்ளை ஆழ்வார்க ளருளிய திவ்ய ப்ரபந்தங்க ளனைத்துக்கும் வ்யாக்யானம் (உரை) செய்யவில்லையென்றால் அருளிச் செயலின் பொருள்களை யெல்லாம் நம்மா லறியப் போகாது.

## நாயனாராச்சான்பிள்ளை

பெரியவாச்சான்பிள்ளைக்குப் பிறகுஅவர் குமாரரான நாயனாராச்சான்பிள்ளை விளக்கில் கொளுத்தின பெரு விளக்குப் போலே இந்தத் தரிசனத்தைப் பொறுப்பேற்று நடந்திவந்தார். அவர் எல்லா வித்யைகளிலும் கரைகண்டவர் என்கிற பட்டமுடையராய், தத்வஸங்க்ரஹம், முக்த போகாவளி, ஞானார்ணவம், சாரீரம் முதலான ரஹஸ்ய நூல்களைச் செய்து ஸ்ரீவைஷ்ணவ உலகுக்கு நன்மை செய்தருளினார்.

## ஈடு முப்பத்தாறாயிரப் பரம்பரை

முன்னர் கூறியபடி நம்பிள்ளையினிடத்தினின்றும் அவரருளிய ஈடுமுப்பத்தாறாயிரம் என்கிற திருவாய்மொழி

யின் உரையைப் பெற்ற நம்பிள்ளை சிஷ்யரான ஈயுண்ணி மாதவப்பெருமாள் தம்குமாரரான ஈயுண்ணி பத்பநாபப் பெருமாளுக்கு அந்த ஈடு முப்பத்தாறுயிரமும் பின்னும் ரஹஸ்யார்த்தங்களையும் உபதேசித்தார். அவர் தமக்கு மிகவும் வேண்டிய சிஷ்யராய் கோலவராஹ நாயனுர் என்ற திருப்பெயரையுடைய நாலூர்பிள்ளைக்கு அவ்வாறே உபதேசித்தார். நாலூர் பிள்ளையும் அவர் தம் குமாரரான நாலூராச்சான் பிள்ளைக்கு உபதேசித்தார். நாலூராச்சான் பிள்ளையும் அப்படியே திருவாய்மொழிப் பிள்ளைக்கும் (மணவாளமாமுநிகளுக்கு நேரே ஆசார்யர்) திருநாராயணபுரத்து ஆயிக்கும் திருவாய்மொழி யாச்சான்பிள்ளைக்கும் உபதேசித்தார். இப்படியே சீடர்தம் சீடர்களுக்கு உபதேசிக்க வந்து பரந்தது.

## ஆத்ம ஸ்வரூபம் இருப்பதெப்படி?

நம்பிள்ளை சிஷ்யரான வடக்குத் திருவீதிப்பிள்ளை (பிள்ளை லோகாசார்யர், அழகிய மணவாளப்பெருமாள் நாயனுர் இருவர்க்கும் தகப்பனுர்) தரிசனத்தை நடத்தி வருகையில் அவரை அடைந்தவர்கள், 'ஆத்ம ஸ்வரூபம் (ஆத்மாவின் நிலை) இருப்பது எப்படி?' என்று கேட்டனர். அதற்கு வடக்குத் திருவீதிப்பிள்ளை, "அஹங்காரமாகிற (ஆணவம்) அழுக்கைத் துடைத்தால் ஆத்மாவுக்கு அழியாத நிலை 'அடியான்' என்பதேயல்லவா! இதனுல் 'நான் இறைவன்' என்கிற ஆணவத்தின் பற்று அற்றுவிட்டால் ஆத்மாவுக்குள்ளது 'தாஸோஹம் (நான் அடியான்) என்கிற சேஷத்வம் (அடிமைத்தன்மை) ஆகும்என்றபடி. இந்த அடிமைத்தன்மையும் பகவானுக்கு மட்டும் அடிமையாயிருந்தால் தேஹத்தையே ஆத்மாவென்று நினைப்பது போலப் பொல்லாததாம்; ஆகையாலே, அடியாரடியார் தமக்கடியா ரடியார் தம்மடியா ரடியோங்களே' என்கிற படி பாகவதர்களுக்கும் அடிமையாயிருக்கவேண்டும். எல்லா வேதங்களையும் சாஸ்த்ரங்களையும் ஆழ்வார்கள் பாசுரங்களையும் ஆசார்யர்களின் உபதேசங்களை பார்த்கவிடத்தில் ஸ்ரீவைஷ்ணவனுக்கு ஆசார்யாபிமானமொழியமோக்ஷத்துக்கு வழியேதுமில்லை; பாகவதாபசாரமொழிய அதற்கு விரோதியுமில்லை. எவ்வளவு ஆசார்ய அபிமானம் பெற்றிருந்தாலும் பாகவதாபசாரம் உண்டானுல் விளக்கில் பட்ட விட்டிலைப்போல ஆத்மநிலையை நாசமாக்கி விடும்!' என்றருளினுர். இப்படி உபதேசங்

களை யருளியிருந்து தம் குமாரர்களான பிள்ளைலோகாசார்யருக்கும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாருக்கும் ஸகலார்த்தங்களையும் அருளித் திருத்திப் பணிகொண்டு நம் தரிசனத்தை ஏற்று நடத்த வல்லவராம்படி செய்து பின் நம்பிள்ளைதிருவடிகளை த்யானித்துக்கொண்டு திருநாட்டுக்கு எழுந்தருளினார்.

## பிள்ளைலோகாசார்யர்

பிறகு வடக்குத் திருவீதிப்பிள்ளையின் குமாரரும் நம்பிள்ளையின் அநுக்ரஹத்தாலே அவதரித்தவரும் நம்மாழ்வார் அவதாரம் என்னலாம்படியான பெருமைகளையுடையவருமான பிள்ளைலோகாசார்யரும் அவராலே வாழ்ந்தருளுகிறவரான அவர் திருத்தம்பி அழகியமணவாளப் பெருமாள் நாயனாரும் எல்லாப்படியாலும் இணைபிரியாமலிருந்தனர். அர்த்த நிர்ணயங்களிலேயும் ஒருமைப்பாடு கொண்டிருந்தனர். இவர்களில் பிள்ளைலோகாசார்யர் என்பவர் முன் ஒரு இடத்தில் சொல்லியதுபோல ரஹஸ்யார்த்தங்களையெல்லாம் பெண்ணும் பேதையு மறியலாம்படி பதினெட்டு ரஹஸ்யங்களை அருளிச்செய்தார். அதில் 'ஸ்ரீவசநபூஷணம்' விஷயமாக, அதன் கருத்துக் கிசையாதவர்களால் எழுந்த மறுப்புக்குப் பதில் கூறும் வகையில் ஸ்ரீவசநபூஷண சாஸ்த்ரார்த்தங்களை உறுதிப்படுத்த 'ஆசார்ய ஹ்ருதயம்' என்ற நூலை அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளினார். 'இந்த மறுப்பு விருத்தாந்தம் முன்னரே கூறப்பட்டது.' அதுபோல ஒரு நூலைச் செய்ய யாராலும் இயலாது. வேறு எங்கும் காணவு மியலாது. மேலும் திருப்பாவைக்கு ஆறாயிரப்படி வ்யாக்யானம், திருவந்தாதிகளுக்கும் கண்ணிநுண் சிறுத்தாம்புக்கும் வ்யாக்யானம், அருளிச்செயல் ரஹஸ்யம் முதலிய நூல்களை அருளினார்.

அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரும் இந்த ஆசார்ய ஹ்ருதயத்தைத் தோதவத்தித் தூய்மறையோரான **பெற்றார்** என்கிறவருக்கு உபதேசித்தார். அப்பெற்றாரும் தம் **தாள் சேர் பெற்றார்** என்பவருக்கு உபதேசித்தார். அவர் திருநாராயணபுரத்து ஆய்க்கு அதை அருளினார். (பிறகு இந்த ஆய் மணவாள மாமுநிகளுக்கு அருளினார்.) நாயனார் திருவடிகளைக் கிடாம்பியாச்சான் திருவம்சரான கிடாம்பி திருமலை நயினார் என்கிறவர் அடைந்து

ஸகலமான சாஸ்த்ரங்களையும் ஆசார்யரிடமிருந்து பெற்ருர். நாயனுரும் ஸந்யாஸாச்ரமத்தைப் பெற்றுச் சிறிது காலத்திலேயே தம் திருத்தமயனுருக்கு முன்பே திருநாட்குக் கெழுந்தருளினுர், இளம்பருவம் தொடங்கிப் பிரியாதிருந்த அவரைப் பிரிந்து பிள்ளைலோகாசார்யர் பெரிதும் கலங்கித் தேற்றத் தேறித் திருத்தம்பியாருக்குச் சரம (இறுதி) கைங்கர்யங்களை யெல்லாம் செய்து முடித்தார்.

எல்லாம் அறிந்தவரான பிள்ளைலோகாசார்யரை அடைந்தவர்களில் கூரகுலோத்தமதாஸர். மணற்பாக்கத்து நம்பி, கொல்லிக்காவலதாஸர், கோயிலண்ணர், திருவாய்மொழிப்பிள்ளை(யின்) தகப்பனுரண்ணர். திருவாய்மொழிப்பிள்ளை,அவருடைய திருத்தாயார், விளாஞ்சோலைப்பிள்ளை என்பவர்கள் முக்யமானவர்கள்.

## ஸ்ரீவசநபூஷணம் தோன்றிய வரலாறு

இவர்களில் மணற்பாக்கத்துநம்பி என்பவர் பேரருளாளருக்கு (காஞ்சீவரதராஜருக்கு)மிகவும் வேண்டப்பாடுடையவராயிருப்பர். அதனுல் பேரருளாளர் அவர் கனவிலே சில அர்த்த விசேஷங்களை (சிறந்த அர்த்தங்களை) அருளிச்செய்து, "நீர் ஸ்ரீரங்கம் சென்று இவ்வர்த்தங்களை அநுசந்தித்துக் கொண்டிரும்; அங்கே இன்னும் விவரமாக அருளிச் செய்கிறேம்' என்றருள, அதன்படி மணற்பாக்கத்து நம்பியும் ஸ்ரீரங்கம் எழுந்தருளிப் பெருமாளைச் சேவித்துக்கொண்டு பெருமாள் கனவின்படி அர்த்தங்களை அநுஸந்தானம் பண்ணிக்கொண்டிருந்தார். அவ்வாறு ஒருநாள் ஒரு கோயிலில் ஏகாந்தமாகப் பேரருளாளன் அருளிய அர்த்தங்களை அநுஸந்தித்துக் கொண்டிருந்தபோது பிள்ளைலோகாசார்யரும் தம்மை யடைந்த பெரியோர்களுடன் ஏகாந்தமாக அதே கோயிலில் எழுந்தருளியிருந்து அப்பெரியோர்களுக்கு பரம ரஹஸ்யமான அர்த்தங்களை உபதேசித்துக் கொண்டிருந்தார். அவ்வர்த்தங்களை அருகிலிருந்த மணற்பாக்கத்து நம்பி கேட்டுப் பேரருளாளன் கனவில் தமக்கு அருளிய அர்த்தங்களும் இவ்வர்த்தங்களும் ஒன்ருயிருந்ததால் வெளிப்போந்து, "அவரோ நீர், என்று சொல்லிக்கொண்டு பிள்ளைலோகாசார்யார் திருவடிகளிலே தண்டன் சமர்ப்பிக்க, அவரை அணைத்தருளி விவரம் என்னவென்று பிள்ளைலோகாசார்யர் கேட்க, நம்பியும் தேவப்பெருமாள் கனவில் நியமித்த

படியை விண்ணப்பம் செய்தார். பிள்ளைலோகாசார்யரும் அவரைத் தமக்கு அந்தரங்கராக்கிக்கொண்டு அவருக்கு ஸகலமான பரம ரஹஸ்யார்த்தங்களை யெல்லாம் அநுக்ரஹித்தார். மறுபடியும் தேவப்பெருமாள் மணற்பாக்கத்து நம்பியின் கனவில் தோன்றி "நம்முடைய நியமனத்தைப் பிள்ளை லோகாசார்யரிடம் தெரிவித்து அவர் அருளிச் செய்யும் அர்த்தங்களை யெல்லாம் நூல் வடிவமாக்கச் சொல்லும்' என்று நியமிக்க. அப்படியே நம்பியும் பெருமாள் நியமனத்தைப் பிள்ளைலோகாசார்யரிடம் விண்ணப்பித்தார். பிள்ளைலோகாசார்யரும் பெருமாள் ஆணையைத் தலைமேல் தாங்கி உபதேசத்தாலே வழி வழியாகவந்த அர்த்தங்களையெல்லாம் நாதமுநி முதலான பூர்வர்கள் (முன்னோர்கள்) வார்த்தைகளைக் கொண்டே நூல் வடிவமாக்கிப் பெரியோர்களின் வசநங்களாலே தொகுக்கப்பட்ட பூஷணம் (ஆபரணம்) போன்ற நூல் என்று "ஸ்ரீவசநபூஷண"மெனப் பெயர் சூட்டினார். இது விஷயமாகவே ஆசார்ய ஹ்ருதயம் எழுந்தது என்பது முன்னமே கூறப்பட்டது.

## நம்பெருமாள் ஸ்ரீரங்கத்தை விட்டு வெளியேறுதல்

இப்படியுள்ள பிள்ளைலோகாசார்யர் நம்பெருமாளுக்கு உயிர் போன்றவராய் வாழ்கின்ற காலத்தில் முகலாயர்கள் தென்னாட்டில் படையெடுத்துக் கொண்டு சமயபுறத்திற்கு அருகில் வருகிறார்கள் என்ற விவரம் தெரிந்தது. அவ்வமயம் பெருமாள் உத்ஸவம் அநுபவித்துக் கொண்டிருந்தனர். பெரியோர்களெல்லாம் குழுமியிருந்தனர். அவர்களை அப்படியே இருத்தித் திரையிட்டுப் பெருமாளைச் சிறுபல்லக்கில் எழுந்தருளப்பண்ணி ஒரு அர்ச்சகரையும் ஒரு பல்லக்குத் தூக்குவாரையும் ரகசியமாக வெளியேபுறப்படச் செய்தனர். அவர்களுடன் பிள்ளைலோகாசார்யரும் பெருமாளைப் பிரிந்து இருக்க மாட்டாமையாலே தம்மவருடன் தொடர்ந்து போனார். பெருமாள் வெளியே போனபின் மூலவருக்கு முன் சுவரெழுப்பி முன்னால்வேறே ஒரு விக்ரஹத்தை வைத்தார்கள். அப்படியே தாயார் ஸந்நிதியிலும் செய்தனர்.

## பிள்ளைலோகாசார்யர் பரமபதம் அடைதல்

இப்படிப் புறப்பட்ட பெருமாள் காட்டு வழியாகப் போம்போது கள்ளர்களாலே மறிக்கப்பட்டு அதைக் கடந்து போகையில் வஞ்சக் கள்வர் சிலர் பெருமாளுக்கு

ஏதோ தருவதாக முயல, பிள்ளைலோகாசார்யரும் அவற்றைப் பெற்ருல் எல்லாவற்றையும் இழக்க நேரிடு மென்று அவ்வஞ்சகரின் கருத்தறிந்து அவற்றை ஏற்காமல் நல்வார்த்தைகளாலேயே அவ்விடத்தை விட்டு அகன்று வேகமாகப் பெருமாளை எழுந்தருள்வித்துக்கொண்டு ஜோதிஷ்குடி என்ற கிராமத்தை யடைந்தனர். அங்கு பிள்ளைலோகாசார்யருக்கு நோயுண்டாயிற்று. அவ்வேளை யில் தம்மவர்களுக்கு வேண்டிய அர்த்தங்களையெல்லாம் உபகரித்தார். பிறகு தம் சீடருள் ஒருவரான **விளாஞ் சோலைப்பிள்ளையை** (தாழ்ந்த வருணத்துப் பிறந்தவரை)ப் பார்த்து, 'நீர் போய் திருவனந்தபுரத்தில் உம்முடைய சரீரம் சழியுந்தனையும் நித்யவாசஞ் செய்யும்' என்று நியமித்தார். பிறகு நம்பிள்ளை திருவடிகளைத் தியானித் துக்கொண்டு ஜோதிஷ்குடியிலேயே திருநாட்டிற்கு எழுந் தருளினுர். பெரியோர்களும் பெருமாளும் துக்கமடைந் தனர். திருவத்யயனமும் செய்து முடித்தனர்.

## நம்பெருமாள் வலசல்

நம்பெருமாளும் பிள்ளைலோகாசார்யர்திருவத்யயனம் முடிந்ததும் ஜோதிஷ்குடியினின்றும் புறப்பட்டுத் திருமா லிருஞ்சோலையில் ஒரு வருஷம் இருந்து, அங்கிருந்து புறப் பட்டுக் கோழிக்கோட்டுக்கு எழுந்தருளி யிருந்தார். அப் போது மற்ற திவ்ய தேசங்களிலிருக்கும் பெருமாள்களும், ஆழ்வார்திருநகரியிலிருந்து நம்மாழ்வாரும் அவ்விடத் திற்கே வந்து சேர்ந்தனர். அங்கு நம்மாழ்வாரை நம்பெரு மாள் தம் ஸிம்ஹாஸனத்திலேயே வைத்துக்கொண்டு ஒரு வருஷம் இருந்தார். பிறகு அவ்விடத்தினின்றும் ஆழ்வாரு டனே நம்பெருமாள் புறப்பட்டு ஸமுத்ரத்திலே ஓடத் திலே புறப்பட, இடையில் அஜாக்ரதையாலே நம்மாழ் வார் ஸமுத்ர ஜலத்தில் விழ, நம்பெருமாள் ஆழ்வாரைப் பிரிந்து போக மனமின்றி மறுபடியும் கரைக்கு வந்தருளி ஆழ்வாரைத் தேட ஓடத்தை அனுப்பிவைத்தார். ஆழ் வார் விழுந்த இடத்தைக் கருடன் வட்டமிட்டுக் கொண் டிருந்தது. அது கண்டு அங்கே மூழ்கி ஆழ்வாரைக் கண் டெடுத்துப் பெருமாளிடம் சேர்க்கப் பெருமாளும் மிகவும் உகந்து ஆழ்வாருடன் **திருக்கணும்பிக்கு** எழுந்தருளி அங்கே அநேக நாள்களிருந்தனர். அங்கு ஆழ்வாருக்குத் தம்முடைய முத்துச்சட்டை முதலியவற்றைத் தந்தருளி, ஆழ்வாரைத் திருக்கணும்பியிலேயே நிறுத்தித் தாம் தம் மவரோடு திருநாராயணபுரம் எழுந்தருளினுர். அங்கே

யும் பலநாள் எழுந்தருளியிருந்து அங்கிருந்தும் புறப் பட்டுத் திருவேங்கடத்துக் கெழுந்தருளிப் பலகாலம் அங் கேயே யிருந்தார். (மணவாள மாமுநிகள் அவதாரத் துக்குப் பிறகு அழகிய மணவாளனுகிற நம்பெருமாள் மறுபடியும் ஸ்ரீரங்கம் சேர்ந்தார் என்று பின் விருத் தாந்தம்.)

ஸ்ரீரங்கத்தில் துலுக்கர்களின் உபத்ரவம் அதிகமா யிருந்தது. தலைவனுவன் மதிலை அழித்து அக்கற்களைக் கொண்டு கண்ணனூரில் தனக்கு மாளிகை கட்டிக்கொண் டான். மேலும் கோபுரம் முதலானவற்றையும் அழிக்க முற்பட அப்போது அவ்வாறு நிகழாமல் கோயிலைக் காப் பதற்காக சிங்கப்பிரான் என்கிறவர் அவர்களிடம் காரி யக்காரராக அமர்ந்து அவர் செயல்களுக்குத் தக்கவாறு மாற்றுபாயங்கள் சொல்லிக்கொண்டு முழுதும் அழிந்து விடாமல் காப்பாற்றிவந்தார். அவருடைய அந்தச் செய லுக்கு மிகவும் உகந்தவர்களான பெரியோர்கள் அவரிடம் கருணையுள்ளங் கொண்டு அவருக்கு நல்லுபதேசங்கள் செய்துவந்தனர்.

## திருவாய்மொழிப்பிள்ளை

திருவாய்மொழிப்பிள்ளை என்கிற திருமலையாழ்வா ருடைய (மணவாள மாமுநிகளின் ஆசார்யர்) தாயார் பிள்ளை லோகாசார்யருடைய திருவடியை அடைந்திருந்த வர். அவர் பிள்ளைலோகா சார்யர் திருநாட்டுக்கு எழுந்தருளியது கேட்டு அவ ரைச் சேவிக்கப் பெருமை யால் தாமும் பரமபத மடைந்தார். அதனுல் திரு மலையாழ்வார் தமது சிற் றன்னையிடம் வளர்ந்து வந் தார். அவர் தமிழில் நல்ல புலமை யுள்ளவர். மேலும் நல்ல பேச்சாளருமா யிருந் தார் ஆனுல் அவர் இந்த் ரியங்களுக்கு வசப்பட்டிருந் தார். அவரிடம் கூரகு லோத்தம தாஸருக்கு அபி மானம் ஏற்பட்டது. கூர



குலோத்தம தாஸர் பிள்ளைலோகாசார்யருடைய சிஷ்ய

ராவார். அவர் பிள்ளைக்குப் பிறகு சமயப் பொறுப்பை யேற்று நடத்தி வந்தார்: தனது அபிமானத்தாலே திருமலையாழ்வாரை நம் தரிசனத்திலே ஊன்றும்படி செய்ய எண்ணினார். அதனால் அவர் திருவிருத்தத்தை (நம்மாழ்வார் அருளியது) திருமலையாழ்வார் செவியில் படும்படி அநுஸந்தித்துக் கொண்டிருந்தார். அதைச் செவியேற்றத் திருமலையாழ்வாரும் அப்பாசுரங்கள் இனிமையும் பொருட் செறிவும் கொண்டதாகையாலே அதன் பொருளை அறிந்துகொள்ள ஆர்வம் கொண்டு கூரகுலோத்தம தாஸரை அணுகி, திருவிருத்தத்துக்குப் பொருள் கேட்டார். அந்த ஸ்வாமி அது உமக்குச் சொல்லக்கூடாது என்று வெறுப்புடன் கூறினார். இவ்விவரத்தைத் திருமலையாழ்வார் தம் சிறிய தாயாரிடம் கூறினார். சிறிய தாயாரும் 'நீரும் நும் சிறுபருவத்தே பிள்ளைலோகாசார்யர் திருவடியை யடைந்திருக்கிறீர்; ஆயினும் நீர் இப்படி கெட்டுத் திரிவதாலே வெறுத்திருப்பர்' என்று நினைவு படுத்தினார். அது நெஞ்சில் பட்டு வருந்தி ஆசார்யரை அடைய விரும்பியிருந்தார்.

அதுசமயம் முன் சொன்ன சிங்கப்பிரானுக்குத் திருமணத்தூண் நம்பி என்று பெயரிட்டுப் பெரியோர்கள் நல்ல அர்த்தங்களையெல்லாம் உபதேசித்து வந்தார்கள். சிங்கப்பிரான் சொன்னார்: 'இத்தனை பேரும் ஒருங்கே சொல்வதால் எனக்கு ஒன்றும் விளங்குவதில்லை; சொல்ல வல்லார் யாரேனும் ஒருவர் சொல்லுங்கள்' என்று. அதனால் அப்பெரியோர்கள் சொல்வதில் வல்லவரான திருமலையாழ்வாரும் அப்படியே சொல்லி வந்தார். அப்படிச் சொல்வதில் நம் ஸம்ப்ரதாய முறைக்கு ஏலாத பொருள்களையும் கூறினார். அது கேட்ட கூரகுலோத்தமதாஸர் திருமலையாழ்வாரை அவரின் ருசியைக் கண்டு மேல் விழுந்து ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்தங்களையும் ஸ்ரீவசந பூஷணம் முதலானவற்றை யெல்லாம் உபதேசித்து வல்லவராகத் திருத்தியருளினார். அதனாலேயே "கூரகுலோத்தம தாஸம் உதாரம்" (உதாரரான கூரகுலோத்தம தாஸர்) என்று உதாரராக மணவாள மாமுநிகளாலே சிறப்பிக்கப்பட்டார். திருமலையாழ்வாரும் அவரை யல்லாதிருந்தார்.

கூரகுலோத்தம தாஸரின் அந்திம தசையில் திருமலையாழ்வாரை விளித்து இன்னும் சில அர்த்த விசேஷங்களை

(சிறந்த பொருள்களை) விளாஞ்சோலைப் பிள்ளையிடமும், திருக்கண்ணங்குடிப் பிள்ளையிடம் திருவாய்மொழி அர்த்தத்தையும் கேளும் என்றருளிப் பிள்ளைலோகாசார்யரை த்யானித்துக்கொண்டு திருநாட்டுக்கு எழுந்தருளினூர். அவருக்குப் பெருக்கத் திருவத்யயனமும் செய்தனர்.

திருமலைநம்பி திருக்கண்ணங்குடிப் பிள்ளையிடம் சென்று தண்டனிட்டுத் திருவாய்மொழிக்குப் பொருள் அருளும்படி வேண்டினர். அவரும் இசைந்து திருவாய்மொழி ஈடு முப்பத்தாறுயிரப் பொருளைத் தாத்பர்யார்த்தங்களை (போந்த பொருள்களை) மட்டும் அருளிச்செய்ய, திருமலையாழ்வாரும் அர்த்தங்களைப் பதங்களில் ஏறிட்டுச் சொல்லும்படி வேண்ட, திருக்கண்ணங்குடிப் பிள்ளையும் அவரைக் குறித்து, 'ஆயின் நீர் திருப்புட்குழி ஜீயரிடம் சென்று கேளும்' என்று பணித்தார். திருமலையாழ்வாரும் அப்படியே என்று திருப்புட்குழி என்னும் ஊருக்கு (காஞ்சிக்கு அருகாமை) சென்றார். அங்கு இவர் போனபோது திருப்புட்குழி ஜீயர் பரமபதம் சார்ந்து அன்றைக்குப் பன்னிரண்டாவது நாளாயிருந்தது. திருமலையாழ்வார் மிகவும் வருந்தினர். அங்கே நம்பிள்ளையின் சிஷ்யரான ஈயுண்ணி மாதவருடைய சிஷ்யர்தம் சிஷ்யரான நாலூராச்சான் பிள்ளை இருந்தார். அவர் திருமலையாழ்வாரை வந்த காரணம் கேட்டார். இவரும் திருவாய்மொழி கேட்க வந்ததாக விவரம் சொல்ல, ஆச்சான்பிள்ளையும் 'ஆகில் நாமே ஈடு முப்பத் தாறுயிர வ்யாக்யானத்தை உமக்குச் சொல்கிறோம்' என்று அருளித் திருவாய்மொழி தொடங்கி ஈடு முப்பத்தாறுயிரத்தை அருளி வந்தார்.

இவ்விவரம் திருநாராயணபுரத்தில் ஆய் முதலானவர்களுக்குத் தெரிந்தது. அவர்கள் திருநாராயணபுரத் தெம்பெருமானுர் நியமன ஓலையனுப்பித் திருநாராயணபுரத்துக்கு எழுந்தருளி ஈடு அருளவேணும் என்று வேண்டினர். அதைத் தலைமேல் தாங்கி நாலூராச்சான்பிள்ளையும் திருமலையாழ்வாரை அழைத்துக்கொண்டு திருநாராயணபுரத்துக்கு எழுந்தருளி, அங்கே ஈடு வ்யாக்யானத்தைப் பதரஸம், அர்த்தரஸம், ஓசைக்குறிப்புப்பொருள், குறிப்புப் பொருள், தெளி பொருள், வெள்ளிடைப் பொருள், உள்ளுறைப்பொருள் முதலானவற்றையெல்லாம் தனித்தனியாக விளக்கி ஐயந்திரிபு இல்லாதவாறு நாலூராச்சான் பிள்ளை அருளிச் செய்தார். இதைக் கேட்டு எல்லோரும் ஆநந்த வெள்ளத்து மூழ்கினர்.

திருவாய்மொழி காலக்ஷேபம் முடிந்த பிறகு நாலூராச்சான் பிள்ளை மீண்டும் திருப்புட்குழிக்கு எழுந்தருளினார். திருமலையாழ்வார் நாலூராச்சான்பிள்ளையிடம் பக்தி பூண்டு பிரியாது மற்றுமுள்ள அருளிச்செயல் பொருள்களை யெல்லாம் அறியப்பெற்றார். அதனால் ஞான பக்தி வைராக்யம் மிக்கிருந்தார். அது கண்டு நாலூராச்சான்பிள்ளை திருமலை யாழ்வாருக்குத் தம் திருவாராதனைப் பெருமாளான கண்ணனை எழுந்தருளப்பண்ணித் தந்தார். சிலநாள் கழித்துத் திருமலையாழ்வார் ஆழ்வார் திருநகரி சென்று நம்மாழ்வாரைச் சேவிக்கவேணுமென்று நாலூராச்சான்பிள்ளையிடம் அநுமதி கொண்டு திருக்குருகூருக்குப் புறப்பட்டார்.

## ஆழ்வார் தோழப்பரின் அரிய த்யாகம்

திருக்கணாம்பியிலிருந்து நம்பெருமாள் புறப்பட்ட பிறகு நம்மாழ்வாரைக் கள்ளர் பயத்தாலே எழுந்தருளப் பண்ணிக்கொண்டு நெடுந்தூரம் போய் வேறு வழியில்லாமல் மிகவுயர்ந்த முந்திரிமலை யுச்சியில் ஒரு சரிவிலே ஆழ்வாரையும் (ஒரு பெட்டகத்திலிட்டு) திருவாபரணப் பெட்டகத்தையும் சங்கிலியின் உதவியால் கீழிறக்கிப் பத்திரம்செய்து மீளும்போது நலிவு பட்டார்கள். பிறகு மலையாள ராஜாவின் உதவி கொண்டு இடர் களைந்து மலைமீது ஏறி ஆழ்வாரை எடுக்க யார் இறங்குவது என்ற நிலையில் உயிருக்கு ஆபத்தான செயல் என்று ஒருவரும் முன் வராமலிருக்கத் தோழப்பர் என்பவர் தாம் இறங்குவதாகச் சொல்ல, அங்கிருந்த பெரியோர்கள், "இனி நடக்கும் ஸந்நிதி வ்யவஹாரங்களில் இவருக்கு "ஆழ்வார் தோழப்பர்" என்று அருளப்பாடிட்டு ஆழ்வார் கொண்டையில் அணியும் பூந்தொடையலைத் தருவது முதலான பஹுமானங்களைச் செய்வதாகச் சொன்னார்கள். பிறகு இரண்டு சங்கிலிகளால் பிணைக்கப்பட்ட ஊஞ்சலில் தோழப்பர் அமர, அச்சங்கிலிகளை மேலிருந்து சரிவில் மெல்லவிட, கீழிறங்கி ஆழ்வார் பெட்டகத்தைக் கண்டு களித்துத் திறந்து பார்த்து ஆழ்வாரைச் சேவித்து மூடி அவ்வூஞ்சலில் ஆழ்வாருள்ள பெட்டகத்தையும் திருவாபரணங்கள் கொண்ட பெட்டகத்தையும் சேர்த்து வைத்துச் சங்கிலியை ஆட்ட, மேலேயுள்ளவர்கள் மேலுக்கிழுத்து ஆழ்வாரையும் பெட்டகத்தையும் எடுத்துக்கொண்டு தோழப்பர் ஏறி வருவதற்காக மறுபடியும் சங்

கிலிப் பலகையைச் சரிவிலிறக்கினர். தோழப்பரும் அதில் ஏறிச் சங்கிலியை இசைக்க மேலிருந்தவர்கள் இழுத்தார்கள். மேலுக்கு வந்து கொண்டிருக்கையில் இடையில் இடுக்குகளில் தட்டுப்பட்டுத் தோழப்பர் கீழே விழுந்து திருநாடலங்கரித்தார். தோழப்பர் குமாரர..ன அப்பன் பிள்ளைக்கு 'ஆழ்வார் விஷயமாகத் தோழப்பர் திருநாட்டுக் கெழுந்தருளினுர்; ஒரு குறையுமில்லை' என்று ஸமாதானம் சொல்லி வருத்தம் போக்கி, "அவருக்குச் சொன்னதெல்லாம் உமக்கும் நடத்துவோமாக' என்று கூறி எல்லோரும் ஆழ்வாரை முன்போலே திருக்கணும்பியில் கொண்டுவந்து ஸம்ப்ரோக்ஷணுதிகளைச் செய்து திருவாராதனம் செய்துகொண்டிருந்தனர்.

ஆழ்வார்திருநகரியில் நம்மாழ்வா ரில்லாததால் திருமலையாழ்வார் திருக்கணும்பிக்குப் போய் ஆழ்வாரைச் சேவித்துவிட்டு ஆழ்வார்திருநகரிக்குத் திரும்பி, அழகழிந்து கிடந்த நகரைக் காடு வெட்டி நாடாக்கி ஸந்நிதி திருத்தித் திருக்கணும்பியிலிருந்து திருநகரிக்கு ஆழ்வாரை மீண்டும் எழுந்தருளப்பண்ணி நித்ய பக்ஷ ஸம்வத்ஸரோத்ஸவங்களெல்லாம் கண்டருளும்படி செய்தார். அதனுல் நம்மாழ்வார் உகந்து திருமலையாழ்வாருக்குச் **சடகோப தாஸர்** என்ற பெயரிட்டருளினுர்.

## விளாஞ்சோலைப்பிள்ளை பரமபத மடைதல்

பிறகு திருமலையாழ்வார் கூரகுலோத்தமதாஸர் கூறியபடி விளாஞ்சோலைப் பிள்ளையைச் சேவிக்கத் திருவநந்தபுரத்துக்குச்சென்ருர். அனந்தபத்மநாபனைச் சேவித்தார். பின் தனியே சோலை நடுவில் எழுந்தருளியிருக்கும் விளாஞ்சோலைப்பிள்ளை தம் ஆசார்யரான பிள்ளைலோகாசார்யரின் திருமேனியை த்யானம் பண்ணிக்கொண்டிருந்தார். அவர் மேல் சிலந்தி கூடு கட்டியிருந்து. அதையும் அறியாதவராயிருந்தார். இப்படி ஆசார்யனைத் தவிர வேறு உணர்வற்றவராய் நான்கைந்து தினங்களாயிருந்தவர் அன்று கண்களைத் திறந்தார். எதிரே திருவடிகளில் வீழ்ந்து வணங்கி நிற்கும் திருமலையாழ்வாரைக் கண்டு, "யார் நீர்; எங்கிருந்து வருகிறீர்; என்ன காரணம்?' என்று வினவினர். திருமலையாழ்வாரும் விவரமாகப் பதில் கூறினுர். பிறகு அவரை அங்கீகரித்து அவருக்குத் தம் ஆசார்ய ரருளிய ஸ்ரீவசநபூஷணத்தை நன்ருக அருளிச்

செய்தார். திருமலையாழ்வார் அவ்வர்த்தத்தைப்பெற்றுத் தெளிந்த சிந்தையராய்ச் சிறிது காலம் இருந்து மறுபடியும் ஆழ்வார் திருநகரிக்குத் திரும்பி ஆழ்வாருக்குக் கைங்கர்யங்கள் செய்து கொண்டிருந்தார். விளாஞ்சோலைப் பிள்ளையும் ஸ்ரீவசநபூஷணத்தின் சாரமான அர்த்தங்களைச் சுருக்கி **சப்தகாதை** என்ற நூலாக அருளிச்செய்து உலகை வாழச் செய்தார். விளாஞ்சோலைப்பிள்ளை இல்வுலகத்தி லிருப்பை வெறுத்து அந்தமில் பேரின்பத்தி லிருப்பை விரும்பிப் பரமபக்தி தலையெடுத்துப் பரமபதத்தை அடைந்தருளினார்.

அன்று ஸந்நிதியில் அநந்தபத்மநாபனை நம்பியார் (போத்தி) திருவாராதனம் செய்துகொண்டிருந்தார். அந்தசமயம் விளாஞ்சோலைப்பிள்ளை விடுவிடென்று ஸந்நிதிக்குள்ளே புகுந்து கர்ப்ப க்ருகத்துக்குள்ளே போய்ப் பெருமாளுக் கருகே நிற்க, இதைத் திருவாராதனம் செய்யும் நம்பியார் கண்டு, 'இதென்ன, புலையன் ஸந்நிதியுள் கருவறையில் நுழைந்துவிட்டானே; புலைய னிருக்குமிடத்தில் நாமிருக்கப் போகாதென்று ஸந்நிதிக் கதவை மூடிக் கொண்டு புறப்பட, பிள்ளையடியார்கள் விளாஞ்சோலைப் பிள்ளை தம் ஆசார்யரான பிள்ளைலோகாசார்யர் திருவடி அடைந்தார் என்று சொல்லிக்கொண்டும் இயல் சேவித்துக்கொண்டும் ஸந்நிதி மாலை, பரியட்டங்களுக்காக ஸந்நிதி வாசலுக்கு வர அது கண்டு நம்பியார் மிகவும் வியந்து, தாம் கண்ட நிலையை எல்லோருக்கும் சொல்லி வெளியிட்டு மாலை, பரியட்டங்கள் கொடுத்தனுப்பினார். சிஷ்யர்களும் திருவத்யயனம் வரை நடத்தியருளினார்கள். இச்செய்தியை அறிந்த திருமலையாழ்வார் விளாஞ்சோலைப் பிள்ளைக்குச் சிஷ்யர்களும் புத்ரர்களும் எப்படி நடப்பார்களோ அப்படியே அனுஷ்டித்தார். அதாவது விளாஞ்சோலைப்பிள்ளையை இழிகுலத்தோராகக் கருதாது ஞான ஸம்பந்தத்தாலே ஆசார்யராகக் கொண்டு அவருக்குச் சடங்குகளைச் செய்தாரென்றபடி.

பின்பு சிறிது நாள் கழிந்ததும் திருமலையாழ்வார் தம் மருமகனாரைப் புத்திரராக அபிமானித்து அவருக்குத் தம் மற்றொரு ஆசார்யரான நாலூராச்சான் பிள்ளையின் மற்றொரு பெயரான தேவப்பெருமாள் என்னும் பெயரை இட்டருளினார்.

ஆழ்வார் திருநகரிக்கு அருகில் பாண்டிய தேசத்தில் சிக்கில்கிடாரம் என்றொரு ஊர். அதில் **கொல்லிகாவல தாஸர்** என்கிற கோட்டூர் **அழகிய மணவாளப் பெருமாள் பிள்ளை** என்கிறவர் வாழ்ந்திருந்தார். அவர் பிள்ளைலோகாசார்யருடைய சிஷ்யர். பிள்ளைலோகாசார்யர் தமக்கு அருளிய அர்த்தங்களை அநுஸந்தானம் பண்ணிக்கொண்டிருந்தார். அவருக்கு **ஸ்ரீரங்கநாச்சியார்** என்றொரு மகளிருந்தார். அந்த மகளை அவ்வூரில் வாழ்பவரான **திகழக்கிடந்தான் திருநாவீறுடையபிரான் தாஸரண்ணர்** என்பவர் திருமணம் புரிந்து கொண்டார். அவர் மாமனாரான கொல்லிகாவல தாஸர் திருமாளிகையிலேயே இருந்து கொண்டு பிள்ளைலோகாசார்யராகவே பாவித்து அவரிடம் எல்லா அர்த்தவிசேஷங்களையும் உபதேசிக்கப் பெற்றார். அதனால் அவர்க்கன்றி வேறொருவர்க்கா யில்லாது அவர்க்கே பணிசெய்து வாழும் காலத்தில் கோட்டூர் அழகிய மணவாளப்பெருமாள் பிள்ளையாகிய கொல்லிகாவல தாஸர் திருநாட்டுக்கு எழுந்தருளினார். அவருக்குத் திருவத்யயனம் நடத்தியருளி திருநாவீறுடையபிரான் தாஸரண்ணர் ஆழ்வார் திருநகரிக்கு எழுந்தருளினார்.

## மணவாள மாமுநிகள் அவதாரம்

எம்பெருமானார் தம் நிலைக்கு எழுந்தருளிய பிறகு நம்மாழ்வார் தொடங்கி வளர்ந்து வந்ததான சரணாகதி (ப்ரபத்தி) மார்கமானது மறுபடியும் சுருங்கி ஓரிருவராக தேய்ந்து வருவதைச் சர்வேசுவரன் திருவுள்ளத்தே கொண்டு மீண்டும் எம்பெருமானார் காலம் போலே, 'பொலிக! பொலிக!' என்னும்படி கலியுகம் நீங்கி க்ருதயுகம் பற்றி ப்ரபத்தி மார்கமானது பெருகுவதற்கு வழியை ஆராய்ந்து திருவநந்தாழ்வானை நோக்கி, "முன் போலே நீர் மறுபடியும் பிறக்கவேண்டும்; முன்னமே இருநூறாண்டு இருமென்ன இடையிலேயே வந்துவிட்டீர்; அதனால் ஆழ்வார்திருநகரியில் திருநாவீறுடையபிரான் தாஸரண்ணரின் பார்யையின் கர்ப்பத்தை யடைந்து அவதரித்து உலகை உய்யச் செய்யும்" என்று நியமிக்க, அவ்வாறே திருவநந்தாழ்வானும் தாஸரண்ணருக்குத் தேவிகளான (பார்யையான) ஸ்ரீரங்கநாச்சியாரின் கர்ப்பத்தை யடைந்து பத்து மாதங்கள் கழித்து, கலியுகத்தில் நாலாயிரத்து நூற்றெழுபத்திரண்டாவதான சாதாரண வருஷம், ஐப்பசி மாதம், 26-ந்தேதி, சுக்லபக்ஷம், வியாழக்

கிழமை, சதுர்த்தி கூடிய மூல நக்ஷத்ரத்தில் அவதாரம் செய்தருளினார். இவர் கால் காண கலியுகம் பறந்தோடிற்று.

இப்படி ஆத்மோஜ்ஜீவனத்தின் பொருட்டு அவதரித்த தம் குமாரருக்கு ஜாதகர்மம் செய்து பத்துநாளுங் கடந்த இரண்டாம் நாள் திருவிலச்சினையும் (திருவாழி, திருச்சங்கின் முத்திரை பதித்தல்) செய்து இவர் திருமேனி அழகைக் கண்டு **அழகியமணவாளர்** என்று திருப்பெயருமிட்டார். பிறகு, சிக்கில்கிடாரத்தில் மாமனகத்தில் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து 'தாம் சேஷாவதாரம்' என்பது தோன்ற நிலவு போல் வெண்ணிற முடையவராய் விளங்கினார். அவருக்குத் தாஸரண்ணரும் அவ்வோ காலங்களில் சௌளம், உபநயனம் முதலான சடங்குகளையும் செய்தருளினார். வேதம் ஓதுதல், சாஸ்த்ரங்களைக் கற்றல் முதலியவற்றையும் அவருக்கு அளித்துக்கொண்டிருந்தார்.

## நம்பெருமாள் (அழகிய மணவாளன்) திருவரங்கம் அடைதல்

அழகியமணவாளர் அவதரித்த பிறகு, செஞ்சியை ஆண்டு வந்த கோபணார்யர் என்ற சிற்றரசர் திருவேங்கடத்தப்பனைச் சேவிக்கச் சென்றவர், சேவித்து மீளுகின்ற போது அங்கு அழகிய மணவாளன் (நம்பெருமாள்) எழுந்தருளியிருப்பதைக் கண்டு சேவித்து அவரை அங்கிருந்தும் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்து செஞ்சியில் இருக்கப்பண்ணி சிலநாள் ஆராதித்துவந்தார். பிறகு ஸ்ரீரங்கம் வந்து அங்கிருந்த துலுக்கர்களையெல்லாம் விரட்டியடித்து வெற்றி கண்டு பின் செஞ்சியிலிருந்து அழகியமணவாளப் பெருமாளை மணவாளரின் அவதாரத்துக்கு மூன்றாவதான பரிதாபி வருஷம் வைகாசி மாதம் பதினேழாவது நாளில் ஸ்ரீரங்கத்தில் சேர்த்து உத்ஸவங்களையெல்லாம் காணும்படி செய்தார். வெளியே ஆங்காங்கே சென்றிருந்த ஸ்ரீவைஷ்ணவர்களெல்லாரும் ஸ்ரீரங்கத்தை யடைந்து நம்பெருமாளைச் சேவித்துக் கொண்டு கைங்கர்யங்களைச் செய்துகொண்டிருந்தனர். பெருமாளும் தென்திசையை நோக்கிக் கொண்டு அழகிய மணவாளரைக் கடாக்ஷித்துக் கொண்டிருந்தார்.

அழகியமணவாளரும் ஸகல கலைகளிலும் வல்லவராய் பதினாறு வயது நிறைந்தவரானார். அவருக்குத் தகப்பனார் திருக்கல்யாணம் செய்வித்து, அவருக்குத் தாமே அருளிச் செயல் நாலாயிரத்தையும் மற்றுமுண்டான ரஹஸ்யங் களையெல்லாம் ஓதுவித்தார். இவற்றையெல்லாம் பெற்று ஞான பக்தி வைராக்யங்கள் நிரம்பப்பெற்று அழகியமண வாளர் வாழ்கின்ற நாளிலே தகப்பனார் திருநாவீறுடைய பிரான் தாஸரண்ணரும் திருநாட்டுக் கெழுந்தருள, அவ ருக்கு ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரம் முதலாக திருவத்யயன மும் பெருக்கச் செய்தருளினார்.

அக்காலத்தில் திருமலையாழ்வார் ஆழ்வார்திருநகரி யில் தரிசனத்தைநடத்திக்கொண்டு 'இனி ஆவார் யார்?' என்று சிந்தித்துக் கொண்டிருந்தார். தொண்டர்க் கமு துண்ண ஆழ்வார் அருளிய திருவாய்மொழியையே எல்லா நேரங்களிலும் அநுஸந்தித்து, அதனுடைய சொல் நயம், உட்பொருள் நயம் முதலானவற்றை நினைந்து நினைந்து நைந்து உருகிப் போதெல்லாம் அதுவேயாக இருந்தார். அதனாலேயே திருவாய்மொழிப்பிள்ளை யெனும் சிறப்புத் திருநாமம் பெற்று வாழ்ந்துகொண் டிருந்தார்.

## அழகிய மணவாளர் திருமலையாழ்வாரை யடைதல்

அழகிய மணவாளப் பெருமாளும் தம் தாய்மாமன் ஊரான சிக்கில்கிடாரத்தை விட்டுத் தாம் அவதரித்த ஊரான ஆழ்வார்திருநகரிக்கு எழுந்தருளித் திருமலையாழ் வார் திருவடிகளை யடைந்து அவரிடம் தமிழ் வேதமான திருவாய்மொழி, அதன் அங்கங்களாயுள்ள மற்ற ப்ரபந் தங்கள், இவற்றின் பொருள்களையெல்லாம் அறிந்தார். மிக்க வேதியர் வேதத்தி னுட்பொருளான ஆசார்யனே எல்லாம் என்கிற நிலையிலே நின்று, தம் ஆசார்யரான திருவாய்மொழிப்பிள்ளைக்கு ஆன அடிமைகள் செய்து கொண்டிருந்தார். அவருடைய தேவு மற்றறியாத நிலை கண்டு திருவாய்மொழிப்பிள்ளை மிகவும் உகந்து அவரை நோக்கி, 'உமக்கு உடையவர் திருவடிகளே உபாயமும் புருஷார்த்தமும் என்று உறுதியாகப் பற்றியிரும்' என்று கூறி எம்பெருமானார் திருவடிகளைக் காட்டித் தரப்பெற்று அழகிய மணவாளப் பெருமாளும் அப்படியேயாக இருந் தார்.

திருவாய்மொழிப் பிள்ளைக்கு நம்மாழ்வார் விஷயத்திலே பக்தியானது அவருடைய அடியாரடியா ரளவும செல்லும்படியாக விஞ்சி, அதனடியாக மாறனடி பணிந்துய்ந்தவரான எதிராஜரிடத்திலே பெருக்கெடுத்து அதனால் உடையவருக்குத் தனிக்கோயில் அமைத்தார்; சுற்றும் சதுர்வேதிமங்கலம் என்னும் ஊரை உண்டாக்கினார். அதில் வைஷ்ணவர்களைக் குடியேற்றி எம்பெருமானாரை அநுபவித்துக்கொண்டிருந்தார்.

அழகிய மணவாளப் பெருமாள் தம் ஆசார்யர் காட்டிக்கொடுத்த எம்பெருமானாரையே தமக்குத் தஞ்சமாகக் கொண்டு அவர் விஷயமாக 'யதிராஜ விம்சதி' என்கிற நூலைச் செய்து அநுஸந்தித்தார். யதீந்த்ரரான உடையவரிடத்தில் அன்பானது விஞ்சிக் கிடந்ததாலே அழகிய மணவாளரை "யதீந்த்ர ப்ரவணர்" என்று வழங்கினர். உடையவரிடம் முறையிடுகிறதாயுள்ள இப்ரபந்தத்தைத் திருமலையாழ்வாரும் கேட்டருளி மிகவும் சந்தோஷப்பட்டு, தாம் முன்பு திருப்புளியாழ்வாரடியில் கண்டு எடுத்து ஆராதித்து வந்த உடையவர் அர்ச்சா திருமேனியை யதீந்த்ர ப்ரவணருக்குத் தந்தார். அதைப் பெற்று அழகிய மணவாளப் பெருமாளும் மிகவும் உகந்து போற்றி வந்தார்.

## ஆசாரியர் கொண்ட சிஷ்யாபிமானம்

ஆழ்வார் கைங்கர்யமும் யதிராஜர் கைங்கர்யமுமே ஜீவனமாகக் கொண்டு வாழும் திருவாய்மொழிப்பிள்ளை, அழகிய மணவாளரின் ஞான பக்தி வைராக்யங்கள் நாளுக்கு நாள் வளர்ந்து, அக்குணங்களை அப்படியே பறித்துக் கொள்ளலாம்படியாக மணவாளரிடம் மிளிர்வதைக் கண்டு பெருமதிப்புக் கொண்டிருந்தார். ஒருநாள் தம் தோட்டத்திலிருந்து கீரையைப் பறித்து அழகிய மணவாளருக்குக் கொடுத்தனுப்பினார். ஆசார்யர் சிஷ்யருக்குச் செய்வதோ என்றெண்ணி அழகிய மணவாளர் திருமலையாழ்வாரிடம், "இப்படிச் செய்கிறது ஏன்?" என்று கேட்டார். அதற்குத் திருமலையாழ்வார், 'உம்மைப் போலே ஒரு விஷயம் காணாமையாலே நாம் அர்ச்சாவதாரத்திலே மண்டினோம்' என்று பதில் கூறினார் (ஞான பக்தி வைராக்யங்கள் நிரம்பப்பெற்று நடையாடும் தெய்வம் போன்று

உள்ளவர்களை ஆராதிக்கை யன்றோ கடமை; பகவானி லும் வேறல்லர் என்றபடி).

திருமலையாழ்வார் அழகிய மணவாளரின் திருமேனி யின் மென்மையையும் மனதின் மென்மையையும் கண்டு, பூவை விரும்புவார் அதன் மென்மை யழியாதபடி காப் பதுபோலே அழகிய மணவாளருடைய எல்லாக் காரியங் களிலும் தம் பரிவைக் காட்டியதும், அவர் தம்மை யடைந்த நாள் முதல் அவரை மிகவும் அபிமானித்துக் கொண்டும் வருவதைக் கண்ட திருமலையாழ்வாரை யடைந்துள்ள மற்ற பெரியோர்கள் அழகிய மணவாள ரிடம் பொறாமையோடு நடந்துகொண்டார்கள். எல்லாம் உணர்ந்தவரான திருமலையாழ்வார் இதை யறிந்து, அவர் கள் அபசாரப்பட்டு (மணவாளரிடம் பிழை செய்து) அனர்த்தப்பட்டுப் போகாமலிருக்க அவர்களுக்குத் திரு வனந்தாழ்வானே (ஆதிசேஷன்) அழகிய மணவாளர் என்று பல காரணங்களை எடுத்துக் காட்டி, (அவரின் சொல்லாலும் செயலாலும் திருமேனியாலும் வெளிப்ப டும் நிலைகளைக் காட்டி) நிரூபித்தார். அதுமுதல் அவர்கள் மணவாளரைப் பெரிதும் மதித்து வந்தனர். அழகிய மண வாளர் திருமலையாழ்வாருக்கு அவர் திருவுள்ளம் (மனம்) உகக்கும்படி எல்லா அடிமைகளையும் செய்து வந்தார். மிகவும் உகந்த திருமலையாழ்வார் ஈடு முப்பத்தாறாயிரத் தையும் மற்றுமுள்ள அருளிச்செயல் வ்யாக்யானங்களை யும் வரிவரியாக விளக்கியருளினார்.

அந்த சமயத்தில் அழகிய மணவாளருக்கு ஒரு குமா ரர் அவதரித்தார் (பிறந்தார்). அவருக்கு என்ன பெயர் வைப்பதென்று திருமலையாழ்வாரைக் கேட்டார். அதற்கு அவர் ஒருக்கால் சொன்னதுபோலே நூற்றெட்டுக்கால் சொல்லிய 'எம்மையன் இராமாநுசன்' என்கிற திருப் பேரை வையும் என்று நியமிக்க, அப்படியே அழகிய மண வாளரும் தம் குமாரருக்கு 'ராமாநுஜன்' என்று பெயரிட் டார்.

ஒருநாள் திருவாதிரை நாளா யிருந்தது. திருவாய் மொழிப்பிள்ளை தம்மை யடைந்தாரோடு அமுது செய்து கொண்டு (சாப்பிட்டுக்கொண்டு) இருந்தார். அப்போது.

"இன்றோ எதிராச ரிவ்வுலகில் தோன்றியநாள்
இன்றோ கலியிருள் நீங்கிய நாள்...... ..............

என்று பல தடவைகள் சொல்லிச் சொல்லி ஈடுபட்டு மேலொன்றும் சொல்லமாட்டாது இருக்க, உடனே அழகிய மணவாளர்,

—இன்றேதான்
வேதியர்கள் வாழ விரைமகிழோன் தானவாழ
வாதியர்கள் வாழ்வடங்கும் நாள்''

என்று அப்பாட்டை நிறைவு செய்தார். இதைக் கேட்டுத் திருவாய்மொழிப்பிள்ளை மிகவும் களித்துக் கொண்டாடித் தாம் அமுது செய்துகொண்டிருக்கும்போதே இடையிலேயே மணவாளர்க்குத் தளிகையை (போனகம் செய்த சேடம்) கொடுத்தார். இதையெல்லாம் அறிந்த அடியார்கள் இந்த சிஷ்ய ஆசார்ய முறையை வியந்து, 'பராங்குச தாஸரான பெரியநம்பியை அடைந்த பெருமை உடையவருக்கு உண்டானாற்போலே, சடகோப தாஸரான திருவாய்மொழிப் பிள்ளையை யடைந்த பெருமை இவர்க்கு (மணவாளர்க்கு) உண்டாயிற்று' என்று கொண்டாடி அவரை உடையவரின் மறுபிறப்பு என்று தங்களில் கூறி அவரை ஆதரித்துக்கொண்டிருந்தார்கள்.

## திருவாய்மொழிப்பிள்ளை பரமபத மடைதல்

திருவாய்மொழிப்பிள்ளை தம் திருவாராதனமான கண்ணனிடம் கொண்ட அன்பினால் அவனுடைய பால சரிதங்களை யெல்லாம் முழுக்கக் காட்டும் பெரியாழ்வார் திருமொழிக்கு ஒருரை அருளினார். பிறகு நெடுநாள் வாழ்ந்திருந்து பெருந்திவத்திற்குச் செல்ல ஆசை விஞ்சி, 'பேற்றுக்குத் தடை சரீர ஸம்பந்தம்' ஆகையாலே அதை அறுத்துத் தரும்படி தம் ஆசார்யரான லோகாசார்யரை வேண்டிக்கொண்டிருக்கையில் நோயுமுண்டாய் உடலும் தளர்ந்து காலத்தை எதிர்நோக்கியிருந்தார். ஒருநாள் மிகவும் பரவசராய் மனதில் குறை யுடையராயிருக்கக் கண்டு மணவாளர் முதலானோர், 'அதற்குக் காரணம் என்ன?' எனக் கேட்க, அதற்கு அவர், ''காலமும் கலியாயிருக்கிறதனால் உலகம் என்னுகுமோ! ஆழ்வார்களின் அருளிச்செயல்களை யெல்லாம் ஆசையோடும் அதில் நம் பிக்கையோடும் வளர்த்துக்கொண்டிருப்பார் ஆர்? என்று கவலையாயிருக்கிறது'' என்ன, மணவாளர், 'அடியேன் அப்படியே அருளிச் செயல்களிலேயே போது போக்கு

கிறேன்' என்ன, 'இப்படிச் சொன்னால் போதாது' என்றதும் மணவாளர் திருமலையாழ்வாரின் திருவடிகளைத் தொட்டுச் சூளுரைத்தார். அது கேட்டு மிகக் களித்தவராய்த் திருமலையாழ்வார் மேலும் 'நீர் ஸம்ஸ்க்ருத (வடமொழி) நூல்களிலே அதிகம் கவனம் செலுத்தாமல் எம்பெருமானார் திருவுள்ளத்துக்கு உகப்பாயிருக்கும்படி ஸ்ரீபாஷ்யத்தை ஒரு தடவை கேட்டுப் பின்பு எம்பெருமானாருக்கும் நமக்கும் உகப்பாக ஆழ்வார்களின் அருளிச் செயல்களிலே ஆழ்ந்து, ஆய்ந்து அதிலேயே காலக்ஷேபம் செய்து கொண்டிரும்; மேலும் நம் முன்னோர்களைப் போலவே நீரும் நம்பெருமாளை மங்களாசாசனம் (பெருமாளின் வாழ்ச்சிக்கு வாழ்த்துகை) செய்துகொண்டு திருவரங்கத் திருப்பதியே வாழுமிடமாகக் கொள்ளும்' என்று பணித்து, தம்மை யடைந்துள்ளோரை யெல்லாம் மணவாளர் கையிலே காட்டிக் கொடுத்து அவர்களை நோக்கி, 'இவரை அவதார விசேஷம் என்று எண்ணுங்கள்; இவரை நம்மைக் கண்டாற் போலே கண்டு கொண்டிருங்கள்!' என்று கூறித் தம் ஆசார்யர் திருவடிகளை த்யானித்துக்கொண்டு திருநாட்டுக் கெழுந்தருளினார். அவருக்கு மணவாளர் முதலானோர் பிரிவிற்குக் கலங்கித் தேறி ப்ரஹ்மமேத விதியாலே பள்ளிப்படுத்திப் பெருக்கத் திருவத்யயனமும் செய்தார்கள்.

அழகிய மணவாளரும் ஆசார்யரான திருவாய்மொழிப்பிள்ளை பரமபத மடைந்த ஐப்பசி மாதத்தில் அமரபக்ஷத்தில் அஷ்டமி திதியில் 'முப்பழங்களு முண்டான மாசமாக வாய்த்ததே' என மிகவுகந்து அத்தினத்தை வருடந்தோறும் அநுட்டித்து வந்தார். இவ்வழகிய மணவாளரின் பெருமைகளை யறிந்து அழகிய வரதர், சேனைமுதலியாரண்ணர் முதலானவர்கள் அவர் திருவடிகளை அடைந்தார்கள். அவர்களுள் அழகியவரதர் என்பவர் வைராக்யசீலராய் துறவிக்கோலம் பூண்டு அழகிய மணவாளருக்கு நிழல் போலே பிரியாதிருந்து கொண்டு அடிமைகள் செய்துகொண்டிருந்தார்.

## அழகிய மணவாளர் ஸ்ரீரங்கம் எழுந்தருளல்

இப்படி வாழ்ந்திருக்கிற மணவாளர் திருமலையாழ்வாரின் ஆணைப்படி திருவரங்கப்பெருமாளை மங்களாசாசனம்

செய்ம அங்கேயே நித்யவாசம் செய்யத் திருவுள்ளமாய்



நம்மாழ்வாரிடம் சென்று வணங்கி, தேவரீரின் மங்களாசாசன பலத்தால் நம்பெருமாள் இடர் நீங்கி நித்ய ஆராதனம் கண்டருளுகிறார். அடியேனும் அங்கு சென்று நித்யவாசம் செய்ய விடைகொள்ளுகிறேன் என்று விண்ணப்பஞ் செய்ய, ஆழ்வாரும் 'அப்படியே!' என்று விடை கொடுக்கத் திருவரங்கந் திருப்பதிக்குத் தம் அடியாருடன் எழுந்தருளினார். வரும் வழியில் ஸ்ரீவில்லிபுத்தூரில் பெருமாளையும ஆழ்வாராண்டாளையும் மங்களாசாசனம் செய்தருளி, திருமாலிருஞ்சோலைப் பெருமாளையும் சேவித்துக்கொண்டு ஸ்ரீரங்கம் சேர்ந்தார்.

திருக்காவேரியில் நீராடிப் பன்னிரு திருமண்காப் பணிந்து நிற்கையில் ஸ்ரீரங்கத்திலுள்ள பெரியோர்கள் எதிர்கொண்டனர். அவர்களோடு ஸ்ரீரங்க நகருக்குள்ளே புகுந்து திருவீதிகளையும் கோபுரங்களையும் சேவித்துக் கொண்டு பிள்ளைலோகாசார்யருடைய சிஷ்யரான கோட்டூரிலண்ணர் (கோடியிலண்ணர் எனவும் படுவர்) திருமாளிகைக்கு எழுந்தருளினர்.

இக்கோட்டூரிலண்ணர் நம்பெருமாள் வலசை போன போது திருமெய்யத்திலிருந்துகொண்டு திருவாய்மொழி இருபத்து நாலாயிரப்படி வ்யாக்யானத்தையும் மற்றுமுண்டான ரஹஸ்யார்த்தங்களையும் அருளிக்கொண்டிருந்தார். இப்போது இடர் தீர்ந்து பெருமாள் எழுந்தருளிய பின்பு அண்ணர் மறுபடியும் திருவரங்கத்துக்கு எழுந்தருளியிருந்தார். அவரை அழகிய மணவாளர் வணங்கியிருக்க, அவரும் மணவாளரை இவரொரு அவதார விசேஷம் என்று எண்ணி அவரைப் பெருமாளைச் சேவிக்கப்

பண்ணுவதாகக் கொண்டு அழைத்துக் கொண்டு, அந் நாளில கோயிலுக்கு நிர்வாஹகரான திருமாலை தந்த பெருமாள் என்கிற பட்டர் திருமாளிகைக்கு எழுந்தருளி னார். யதீந்த்ர ப்ரவணரைக் கண்டு பட்டரும் மிகவும் களித்துச் சேவித்து ஆதரவு பண்ணி ஆசனத்தி லமரச் செய்தார் பிறகு திருவாய்மொழியின் ஒரு பாட்டுக்கு ஈடு முப்பத்தாறாயிரப்படி அர்த்தம் அருளிச் செய்யவேண்டு மென்று கேட்க மணவாளரும் கங்கை வெள்ளம் போலே பரக்க அருளிச்செய்ய, செவிமடுத்திய பட்டரும் **ஈடுமுப்பத் தாறாயிரப் பெருக்கர்** என்று அழகிய மணவாளருக்குப் பெயரிட்டார், பின் தம் குற்றேவல் புரியுமவர்களை உடன் அனுப்பி நம்பெருமாளை மங்களாசாசனம் செய்தருளும் படி அழகிய மணவாளரை மிகவும் உகந்து கூறினார். மணவாளரும் கோடியிலண்ணரோடு கூடி அவர்களுடன் சென்று முறை தப்பாமல் எம்பெருமானார் தொடக்கமாக எல்லோரையும்சேவித்து ஸ்ரீரங்கநாச்சியாரையும் திருவடி தொழுது பெரியபெருமாளையும் மங்களாசாசனம் செய் தருளி மீண்டும் கோடியிலண்ணருடன் அவர் திருமாளி கைக்கு எழுந்தருளினார். திருமாலை தந்த பெருமாளாகிற பட்டரும் அழகிய மணவாளருக்கு அமுதுபடி (அரிசி) பருப்பு, கறியமுது (காய்கறிகள்) முதலிய சமையலுக்கு வேண்டுவனவற்றைக் கொடுத்தருள மணவாளரும் அவற்றை ஏற்றுக் கோடியிலண்ணரோ டுண்டு களித்திருந் தார். கோடியிலண்ணரும் பிள்ளைலோகாசார்யர் முத லான பெரியோர்களின் பெருமைகளையும், ஞானம், அநுஷ் டானம் முதலானவைகளை யெல்லாம் விசதமாகச் சொன் னார். அதுகேட்டு நைந்துருகி அவருடன் புறப்பட்டு அழ கியமணவாளர்பூருவர்கள் வாழ்ந்து சென்ற திருமாளி கைகளை யெல்லாம் சேவித்து மகிழ்ந்தார்.

## நம்பெருமாள் ஆணை

ஒருநாளாகப் பெருமாளைச் சேவிக்கச் சென்றபோது நம்பெருமாள் வாய் திறந்து, 'நம் உடையவரைப்போலே நீரும் நம் ஐசுவர்யங்களை யெல்லாம் திருத்திக்கொண்டும் நம் தரிசனத்தை நடத்திக்கொண்டும் இறுதிக்காலம்வரை இங்கேயே இரும்' என்று பணித்தார். அவ்வாறே அழகிய மணவாளரும் பெருமாளுடைய செல்வங்களை யெல்லாம் பார்வையிட்டுக் கைங்கர்யங்களை யெல்லாம் ஒழுங்கு

படுத்திக்கொண்டு ஸ்ரீரங்கத்திலேயே வாழ்ந்திருந்தார். அப்போது அங்கிருந்த முன்ஞேர்கள் அருளிய நூல்களை யெல்லாம் சேகரித்து அவற்றை முழுக்கப் பார்த்து பழுது பார்த்து அவற்றை வெளிப்படுத்‌ ஞர். பெருமாள் கைங்கர்யங்களையும் திருவாராதனத்தையும் பார்த்து வந்த உத்தம நம்பி அவைகளைக் குறைவுபட நடத்தி வந்ததைக் கண்டு அவரைத் தாமும் பெருமாளிடம் ப்ரார்த்தித்து அவர் மூலமாகவும் திருத்திக் குறைவற நடக்கும்படி செய் தருளிஞர்.

## அழகிய மணவாளர் க்ஷேத்ராடனம்

பிறகு திருவேங்கடத்தப்பனைச் சேவிக்க எண்ணி நம் பெருமாளிடம் விண்ணப்பித்து விடைபெற்றுப் புறப் பட்டுத் திருவெள்ளரை, திருக்கோவலூரையும் சேவித்துக் கொண்டு திருமலைக்கு எழுந்தருளி, திருமலைமே லெந்தை யையும் முறைப்படி சேவித்து மீளும்போது பெருமாள் கோயிலுககு (காஞ்சீ) எழுந்தருளி உடையவரை ஆளவந் தார் "ஆம் முதல்வன்' என்று அபிமானித்த இடம் எது வென்று அறிந்து தண்டனிட்டு முறையாகச் சேவித்துக் கொண்டு பெருந்தேவி தாயாரையும் சேவித்து மேலேறிப் பேரருளாளனையும் சேவித்து அவராலே 'நம் ராமாநுஜ னைப் போலே ஒருவரைப் பெற்ருேமே!' என்று உகந்து கொண்டாடப்பெற்று அங்கு மற்றுமுண்டான சொன்ன வண்ணம் செய்த பெருமாள், அஷ்டபுஜகரத்தான் முத லான பெருமாள்களையும் மங்களாசாசனம் செய்தருளி ஸ்ரீபெரும்பூதூருக்கு எழுந்தருளிஞர். அங்கு அந்தவூரைக் கண்டதும்.

"இதுவ்வா பெரும்பூதூர்! இங்கே பிறந்தோ
எதிராசர் எம்மிடரைத் தீர்த்தார்—இதுவோதான்
தேங்கும் பொருநல் திருநகரிக்கொப்பான
ஓங்கு புகழுடைய வூர்"

என்று சொல்லிக்கொண்டு அந்த ஊருக்குள் நுழைந்து,

"எந்தை எதிராசர் எம்மை எடுத்தளிக்க
வந்தபெரும் பூதூரில் வந்தோமோ!—சிந்தை
மருளோ? தெருளோ? மகிழ்மாலை மார்வன்
அருளோ இவற்றுக் கடி"

ஈதென்றறியோம் யாம் என்று கிடைத்தற்கரிய பேருக அடையும் பொருளின் பெருமையை எண்ணி யுகந்து ஸந்

நிதி யுள்ளே புகுந்து உடையவரைச் சேவித்து, 'சீராரும் எதிராஜர் திருவடிகள் வாழி!' என்று மங்களாசாசனம் செய்து 'ஸ்ரீபாஷ்யம் கேட்டலுக்கு' அவரநுமதி பெற்று மீண்டும் பெருமாள் கோயிலுக்கு எழுந்தருளினார்.

அங்கே கிடாம்பியாச்சான் வம்சத்திலே பிறந்தவரான கிடாம்பி திருமலை நாயனாரை யடைந்து வணங்கி அவரிடம் ஸ்ரீபாஷ்யம் கேட்டுக்கொண்டு சிலகாலம் வாழ்ந்தார். ஸ்ரீபாஷ்யம் கேட்டல் முடிந்ததும் உபய வேதாந்த வித்தகராய் (வடமொழி, தென்மொழி வேதாந்தங்களில் தேர்ந்தவராய்) மேலும் சிலகாலம் சொன்னவண்ணம் செய்த பெருமாளடிவாரத்தி லிருந்து கொண்டு அடியார்களுக்கு இரண்டு வேதாந்தங்களையும் அருளிக் கொண்டிருந்தார். அப்போது அவர் பெருமையை உணர்ந்து பல பெரியோர்கள் யதீந்த்ர ப்ரவணர் திருவடிகளை அடைந்தனர். இப்படி வாழ்ந்து அங்கு பெருமாள் அநுமதியையும் பேரருளாளப்பெருமாள் அநுமதியையும் பெற்றுக்கொண்டு பெரிய கோயிலுக்கு (ஸ்ரீரங்கத்துக்கு) எழுந்தருளி முன்போல நிர்வாகம் செய்துகொண்டு திருவரங்கன் செல்வத்தைச் சீரும் சிறப்புமாக வளர்த்து வந்தார்.

## அழகிய மணவாளர் ஜீயராதல்

அந்த சமயத்திலே தெற்கே யிருந்து வந்த சிலர் பங்காளிகள் சம்பந்தமான தீட்டைப்பற்றிச் சொன்னார்கள். அது கேட்டு எல்லாக் காலங்களிலும் பெருமாளைச் சேவித்து வாழ்பவரான அழகிய மணவாளர், பெருமாள் சேவையை இழக்கவேண்டியதாயிற்றே என்று கலங்கி ஆலோசித்து, பகவானையும் பாகவதர்களையும் பற்றிக் கிடப்பவர்களுக்கு மற்ற எல்லாம் ப்ரதிகூலமாகத்தோற்று மாகையால் இல்லற வாழ்க்கையை விட்டு ஸந்யாசாச்ரமத்தை (துறவறத்தை) ஏற்க முடிவு செய்தார், அதன்படி அக்காலங் கடந்த பிறகு தம் ஆசார்யரான திருமலையாழ்வாரின் மற்றொரு சிஷ்யரான சடகோபஜீயரிடம் சென்று துறவறத்தை ஏற்றுக்கொண்டார். அவர் இவருக்கு "**ஸ்ரீசடகோப ஜீயர்**" என்று திருநாமம் இட்டார். துறவறமேற்று நம்பெருமாளைத் தொழுதுநின்றார். நம்பெருமாள் மிகவுகந்து தம் திருநாமமான அவர்க்கு முன்பேயுள்ளதான பெயரால் **அழகிய மணவாள ஜீயர்** என்று திருப்

பெயரிட்டு உத்தமநம்பி முதலானோரைக் குறித்து, 'இவரைப் பல்லவராயன் மடத்திலே சகல மரியாதைகளோடும் விட்டு வாருங்கோள்' என்று பணிக்க, அவர்களும் அப்படியே செய்ய ஜீயரும் மடத்திலே இருந்துகொண்டு சகல கார்யங்களையும் நடத்தி வந்தார்.

## பெரியஜீயரை யடைந்து பெருமையுற்ற ஞானவான்கள்

பின்பு அழகியமணவாள ஜீயர், ராமாநுஜ ஜீயர் முதலானோரைக் கொண்டு மடத்தைச் செப்பனிட்டுக் காலக்ஷேப மண்டபத்தை யுண்டாக்கி அதற்கு 'ரஹஸ்யம் விளைந்த மண்' என்று பிள்ளைலோகாசார்யர் வாழ்ந்த திருமாளிகையிலிருந்து மண் கொண்டுவந்து மேல்பூச்சுச் செய்வித்து அம் மண்டபத்துக்குத் 'திருமலையாழ்வார்' என்ற பெயர் வைத்து அவ்விடத்தைக் குருகுல வாசமாகவே எண்ணி, தம் ஆசார்யரின் திருவடித் தாமரை மலர்களின் இடையில் தாம் இருப்பதாகக் கொண்டு காலக்ஷேபம் சொல்லிவந்தார். நம்பெருமாளைப் பிரியாது அவர்க்கு நல்லன செய்துகொண்டு மங்களாசாஸனபரராய் ஆசார அநுஷ்டானங்களால் மிகச் சிறப்போடு வாழ்ந்து வந்தார். எல்லோரும் அவரைப் **பெரியஜீயர்** என்று வழங்கினர். இப்படிப்பட்ட பெரியஜீயரைச் சுற்றுப்புறங்களிலும் வெகு தூரத்திலுமிருந்த பல பெரியோர்கள் அடைந்து உஜ்ஜீவனம் பெற்றார்கள். இன்னாளில் தொண்டை மண்டலத்தில் பிறந்து **கோவிந்ததாஸப்பர்** என்னும் பெயரையுடைய பட்டர்பிரான் ஜீயர் என்பவர் ஸ்ரீரங்கம் வந்து பெரியஜீயரை அடைந்து அவரைப்பிரியாது நிழல்போலே அடிமைகள் செய்து கொண்டிருந்தார். பிறகு நம்பெருமாள் ஆணையிட ரங்கராஜரைத் தமக்குத் திருவாராதனப் பெருமாளாக எழுந்தருளப் பண்ணி ஆராதித்துக் கொண்டு ஆசார்ய பீடத்துக்கு எடுத்துக்காட்டாக அமைந்திருந்தார்.

எம்பெருமானாராலே ஏற்கப்பட்டவர்களாயும் உயர் குலத்திலே பிறந்து ஞானம் முதலியவற்றால் உயர்ந்தவர்களாயுமுள்ள **கந்தாடையண்ணன்** முதலானவர்களின் கனவிலே நம்பெருமாள் தோன்றி, "பெரியஜீயரும் நாமும் வேறல்ல; அதனால் நீங்கள் அவரை அடையுங்கோள்!' என அவர்களும் தங்கள் உயர்வையும் பெருமையையும்

பாராமல் வந்து அழகிய மணவாள ஜீயர் திருவடிகளை யடைந்து முன்பிருந்த பெருமையிலும் அதிகப் பெரு மையை அடைந்தார்கள். மேலும் பெரிய ஜீயரின் பெருமைகளை வியந்து பாராட்டி அவர் திருவடிகளை விட்டுப் பிரியாமலிருந்தனர். இதனால் முன்பே ஆசார் யனை அடைந்திருந்தாலும், ஞான வளர்ச்சிக்காக ஞானத் தாலே சிறந்துள்ள பெரியோர்களின் சம்பந்தத்தைப் பெறுதலாலே தவறில்லையென்று காட்டப்படுகிறது.

## வாதம் செய்யவந்த கிருஷ்ணனந்தி வணங்கி ஓடினன்

இவ்வாறு அழகிய மணவாள ஜீயருடைய பெருமை திக்கெங்கும் பரவியிருந்த சமயம் கிருஷ்ணனந்தி என்ற ஏகதண்டி ஸந்யாஸி ஸ்ரீரங்கத்திற்கு வந்து ஜீயரைத் தன் னோடு வாதம் செய்ய அழைத்தான். அவனோடு வாதத் துக்குப் புறப்பட்டால் பெருமாளின் மங்களாசாசனத் துக்கு இடையூறு உண்டாகும்; முக்யமான அதை விடுவ தற்குத் தாம் இசையவில்லை; ஆயினும் தம் மதத்தை நிலை நாட்ட அவனோடு வாதம் செய்யத்தான் வேணும்; என் செய்வது என்று சிந்தித்து முதலியாண்டான் வம்சத்திலே பிறந்தவராய் மிக்க பெருமை உடையவராயிருந்துள்ள **வேடலப்பைக்குப்** பெரியபெருமாள் திருமுகத்தைக் (கடி தத்தை)ப் போகவிட, அதைக் கண்ட சாஸ்த்ரங்களையெல் லாம் கற்றுணர்ந்து பெரிய வித்வானான தாசரதியாச்சா னையும் கூட்டிக்கொண்டு ஸ்ரீரங்கத்துக்கு வந்து பெரிய பெருமாளையும் ஸ்ரீரங்கநாயகியையும் மங்களாசாசனம் செய்து வரும்போது வில்வமரத்தடியில் கிருஷ்ணனந்தி யாகிற ஏகதண்டி ஸந்யாஸி ஜபம் செய்துகொண்டிருந்த வன் வேடலப்பையைக் கண்டதும் எழுந்து வணங்கி நின் றான்; கிருஷ்ணனந்தி ஸகல சாஸ்த்ரங்களையும் அவரிடமே கற்றுப்பின் சகவாஸ தோஷத்தாலே ஏகதண்டியாக மாறி னவனானகையாலே குரு பக்தியாலே வணங்கித் தான் அங் கிருக்கைக்குக் காரணத்தையும் சொன்னான். அதுகேட்டு வேடலப்பையும் தாமும் அதற்காகத்தான்—அதாவது கிருஷ்ணனந்தியோடு வாதம் செய்யத்தான் வந்திருப்ப தாகச் சொல்ல, அவனும் அபசாரப்பட்டேன் என்று வணங்கினான். பிறகு வேடலப்பையும் அண்ணன் திரு மாளிகையில் தாசரதியாச்சானோடு அமுது செய்தருளி

கிருஷ்ணனந்தி வேண்டிக் கொண்டதனாலே அவனுக்குச் சேஷமாகப் பிரசாதத்தைத் தந்தருள, கிருஷ்ணனந்தியும் பெற்றுக்கொண்டு அவர் அநுமதி கொண்டு ஸ்ரீரங்கத்தை விட்டுப் போய்விட்டான்.

பிறகு வேடலப்பையையும் தாசரதியாச்சானையும் கூட்டிக்கொண்டு அண்ணன் பெரியஜீயர் மடத்துக்கு எழுந்தருளித் தண்டன் ஸமர்ப்பித்துக் கிருஷ்ணனந்தி ஓடிவிட்ட செய்தியைத் தெரிவித்தார். அதுகேட்டு ஜீயரும் பெரிதும் உகந்து வேடலப்பையையும் தாசரதியாச்சானையும் கொண்டாடி, முதலியாண்டான் வம்ச விஷயமாக இரண்டு சுலோகங்களை யருளி, இருவரையும் கோயிலிலே நித்யவாசம் பண்ணும்படி நியமிக்க, வேடலப்பையும் வயதானமையாலும் பழைய சாதமும் எருமைத் தயிரு மில்லாதிருக்க முடியாதென்ற நிலையாலும் தாசரதியாச்சானை மட்டும் அங்கேயே நிறுத்தித் தாம் வேடலுக்கு விடை கொண்டார்.

பின்பு தாசரதியாச்சான் சொல்வன்மை மிக்கவராகையாலே புறமதங்களை வென்றுக்கொண்டு பெரியஜீயரைப் பிரியாது அவரிடம் எல்லா ரஹஸ்யங்களின் அர்த்தங்களையும் பெற்று வந்தார். சிறிது காலம் கடந்ததும் தாசரதியாச்சானை விளித்து, "ஆச்சான்! நெடுநாளாயிற்றே: ஆய் அண்ணாவைச் சேவித்து வரவேண்டாமோ" என்ன, நியமனப்படி செய்கிறேன் என்று பதில் கூற, ஜீயரும் உகந்து திருவாராதனம் கண்டருளும் ஸ்ரீரங்கராஜ விக்ரஹத்தை நாச்சிமாருடனே எழுந்தருளப்பண்ணிக் கொடுத்து விடை கொடுத்தனுப்பினார்.

பின்பு பெருமாள் கோயிலில் பிரதிவாதிபயங்கரம் ஹஸ்திகிரிநாதரண்ணா வென்பவர் மிகவும் சொல்வன்மையுடையவராயிருக்கிறார் என்று கேள்விப்பட்டு, அவரை ஸம்ப்ரதாயத்தில் சிறந்தவராக ஆக்கவேண்டுமென்று திருவுள்ளம் கொண்டு பெரியஜீயர் ஓலை கொடுத்து இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்களை அவரிடத்துக்கு அனுப்பி வைத்தார். ஹஸ்திகிரிநாதரண்ணாவும் அதைத் தலைமேலேந்திக் கோயிலுக்கு எழுந்தருளினார். அவர் வந்ததையறிந்து ஜீயரும் பெருமாள்கைங்கர்யபரர்களையும் தம்மையடைந்திருந்த ஸ்ரீவைஷ்ணவர்களையும் அனுப்பி அண்ணாவை எதிர்கொண்டழைத்து வரச் செய்தார். அண்ணா

வும் அவர்களுடனே புறப்பட்டுப் பெரிய பெருமாளை முறை தப்பாமல் சேவித்து மணவாள மாமுநிகளின் மடத்துக்கு வந்து ஜீயரை சாஷ்டாங்கமாக வணங்கி நிற்க, ஜீயரும் அவரை மிகவும் குளிர நோக்கி க்ஷேம சமாசாரங்களை அளவளாவி இருத்தி, அப்போது நடக்கிற தான 'ஒன்றுந் தேவு' என்ற பாசுரத்தின் அவதாரிகையைப் பலபடியாகப் பரக்க உபந்யஸித்தார். அதுகேட்டு ஹஸ்திகிரி நாதரண்ணவும் இதுநாள்வரை இவருக்குத் திருவாய்மொழியிலும் அருளிச் செயல்களிலும் மட்டுமே பாண்டித்யமுண்டு; ஸம்ஸ்க்ருதத்தில் பழக்கமில்லையென்றறிந்திருந்தோம். என்னே இவர்தம் இரண்டு வேதாந்தங்களிலுமுள்ள புலமை என்று வியந்து ஜீயர் திருவடிகளில் விழுந்து அங்கீகரிக்க வேண்டுமென்று வேண்ட, ஜீயரும் "நீர் ப்ரவாதிபயங்கரர்; நாம் ஸாது; இது (நமக்குள்) எப்படிப் பொருந்தும்?" என்று விளையாட்டாகக் கூற, அண்ணவும் 'புற மதத்தினிடையில் ப்ரவாதிபயங்கரர்; அடியார்களிடையில் அவர்களுக்கு அடியார்' என்றன்றோ இருப்பது என்ன, ஜீயரும் உகந்து அவரைஏற்றுத் திருவிலச்சினை சாதித்து அடிமைகொண்டு பிறவியால் வரும் அபிமானம் போக, அந்த வம்சத்தாருக்குள்ளதான "ஸ்ரீவைஷ்ணவதாஸர்" என்ற நாமமிட்டு, 'இதர மதங்களைக் களைந்துகொண்டு ராமாநுஜ ஸித்தாந்தமான விசிஷ்டாத்வைதத்தை ஸ்தாபித்துக்கொண்டு அடியார்க்கு அடிமைப்பட்டிருக்கும் நிலையில் நீங்காது இரும் என்றுபணித்தருள, அண்ணரும் அவ்வாறே இருந்து பெரிய ஜீயருக்கு அந்தரங்கராய், அவர் செய்யும் உரை நூலகளுக்கு உறுதுணையா யிருந்து வந்தார்.

## 'எங்கும் ஜீயர் திருப்பெயரே'

இப்படியுள்ள நேரத்தில் பெரியஜீயரின் குமாரரான ராமாநுஜய்யன் என்பாருக்குக் குமாரர் அவதரிக்க அவருக்கு அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் என்று ஜீயரின் திருநாமத்தை யிட்டார்கள். பிறகு அந்த ராமாநுஜய்யன் ஸ்ரீவில்லிபுத்தூரிலே வாழ்ந்தருளும்போது அவருக்கு மற்றுமொரு குமாரர் அவதரிக்க அவருக்கு என்ன பெயர் இடுவது என்று பெரியஜீயரைக் கேட்டனுப்பினார். ஜீயரும் ஸ்ரீவில்லிபுத்தூரிலே பிறந்தவருக்கு என்ன பெயரிடுவது, பெரியாழ்வார் என்று இடச் சொல்

லுங்கோள் என்று சொல்லி யனுப்ப, அவரும் அது போலே இரண்டாவது குமாரருக்குப் பெரியாழ்வாரய் யன் என்று திருநாமம் சூட்டினர். அவ்விரு குமாரர்களும் வயது வந்ததும் பெரிய ஜீயரின் திருவடிகளை யடைந்து ஸ்ரீரங்கத்திலேயே இருந்தனர். அவர்களில் மூத்தவரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் என்பார் பெரிய ஜீயரிடம் பிரியாது அடிமை செய்துகொண்டு நிழல் போலிருந்தார். அதனால் களிப்படைந்த பெரிய ஜீயரும் அவருக்கு விசேஷ கடாக்ஷம் செய்து அவரை சமய நிர்வா ஹம் செய்பவராக ஆக்கியருளினார். ஜீயரைச் சார்ந்தவர் கள் அத்தனை பேரும் தங்கள் தங்கள் குமாரர்களுக்கு ஜீயர் திருநாமத்தைபே—அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் என்பதையே இடுகையால், அவர்களில் ஜீயரின் திருப்பேரனாரைத் தனியே தெரிந்துகொள்வதற்காக அவருக்கு **ஜீயர்நாயனார்** என்று வழங்கினர். ஜீயர் நாய னாரும் விளக்கிலேற்றின பெருவிளக்குப் போலே பிரகா சித்தனர்.

## ஜீயர் ஆழ்வார்திருநகரிக்குப் போதல்

பிறகு மணவாள மாமுநிகள் தம் அவதார ஸ்தல மான ஆழ்வார்திருநகரிக்கு (குருகூருக்கு)ச் சென்று ஆழ் வாரை மங்களாசாசனம் செய்து வரவேணுமென்று எண்ணி நம்பெருமாளிடம் விடைகொண்டு புறப்பட்டுப் போகும் வழியில் தம் ஆசார்யரான திருவாய்மொழிப் பிள்ளையின் அவதார ஸ்தலமான குந்தீநகரத்திலே மூன்று நாள் தங்கியிருந்து, பிள்ளை தம்மை வாழ்விக்கப் பிறந்த இடமன்றோ என்று ஈடுபட்டு அங்கிருந்து புறப்பட்டு வழி யிலுள்ள திவ்ய தேசங்களையெல்லாம் சேவித்துக்கொண்டு திருக்குருகூரைச் சுற்றியுள்ள திவ்ய தேசங்களையும் மங்க ளாசாசனம் செய்தருளி ஆழ்வார்திருநகரிக் கெழுந்தருளி னார். அதையறிந்த அந்நகரிலுள்ள நல்லார் பலரும் எதிர் கொள்ள அவர்களுடன் கூடிச் சென்று முதன்முன்னர் எதிராஜரைச் சேவித்துப் பின் திருவாய்மொழிப்பிள்ளை வாழ்ந்தருளிய திருமாளிகையினுள்ளே சென்று அவர் திருவாராதனமான இனவாயர் கொழுந்தை மங்களா சாசனம் செய்து பின் வ்யாக்யான மண்டபத்தைத் வணங்கி, தம்மை அங்கீகரித்த இடமன்றோ என்று ஈடுபட்டுப் போந்து ஸந்நிதிக்குள் சென்று நம்மாழ் வாரைச் சேவித்துப் பின் அவர் வணங்கும் தெய்வமான

பொலிந்து நின்ற பிரானையும் சேவித்து மடமே எழுந்தருளிச் சிலகாலம் வாழ்ந்திருந்தார். அக்காலம் பல பெரியோர்கள் மணவாள மாமுநிகளின் பெருமையில் ஈடுபட்டு அடிமையாஞர்கள்.

## ஜீயர் 'ஆசார்ய ஹ்ருதய' விளக்கம் கேட்டல்

அங்கு திருவாய்மொழி முதலான அருளிச்செயல்களுக்கும் ரஹஸ்யங்களுக்கும் அர்த்தம் அருளிக்கொண்டு எழுந்தருளியிருக்கையில் ஆசார்ய ஹ்ருதயத்தில் சில இடங்களில் பொருள் விளங்காதிருக்க, அதைப் 'பெற்ருர்' என்பவரிடத்து ஆசார்ய ஹ்ருதய அர்த்தங்களையெல்லாம் நன்கு அறிந்தவரான திருநாராயணபுரத்துள்ள ஆயிடம் அறியவேண்டுமென்று ஆழ்வாரிடம் விடைகொண்டு திருநாராயணபுரத்துக்குப் பயணமாக எழுந்தருளிஞர். அதே காலத்தில் திருநாராயணபுரத்தினின்றும் ஆய் என்னும் அந்தப் பெரியார் பெரியஜீயரின் பெருமைகளை யெல்லாம் கேட்டு அவரைச் சேவிக்க வேண்டுமென்று ஆழ்வார்திருநகரிக்குப் பயணமாஞர்.

இந்த ஆயிக்கு இயற்பெயர் தேவராஜர். இவர் திருநாரணனுக்கு மாலை சாத்துகை முதலான கைங்கர்யமேயாய் வாழ்ந்ததால் 'ஸ்ரீசாநுதாசர்' என்றும், பெருமாளுக்குப் பாலமுதைக் காய்ச்சி ஊதிஊதி சூட்டை ஆற்றிப் பக்குவமாக்கினமையால், பெருமாள் அவரின் தாய் போன்ற தன்மைக்கு மகிழ்ந்து "ஆய்" என்று கூறியதால் (அடியார்கள் திறத்துத் தாய் போல் பரிவு கொண்டிருந்ததால்) அவருக்கு "ஆய்" என்றும், திருநாராயணபுரத்தைச் சார்ந்தவராதலாலே 'திருநாராயணபுரத்து ஆய்' என்றும் சிறப்பிக்கப்பட்டார். இந்த ஆய் என்ற பெயரை வடமொழியால் 'ஜநந்யாசார்யர்' என்று கூறுவர். இவர் திருப்பாவைக்கும் ஸ்ரீவசநபூஷணத்துக்கும் வ்யாக்யான நூல் செய்தார்.

பின்னர் இருவரும் ஆழ்வார்திருநகரிக்குச் சமீபத்திலேயே சந்தித்துக் கொண்டனர். ஒருவரை ஒருவர் வணங்கி விரும்பிய பலம் நேர்பட்டதே என்று மகிழ்ந்து இருவரும் ஆழ்வார்திருநகரிக்கு எழுந்தருளினர். முதலிகள் இச்சம்பவம் எம்பெருமாஞரும் பெரியநம்பியும் மதுராந்தகத்தில் நேர்பட்டபடியிருப்பதே என்று உகந்தனர்.

பின்பு மணவாள மாமுநிகள் ஆயிடம் ஆசார்ய ஹ்ருதய காலக்ஷேபம் கேட்டு அதற்கு நன்றியறிதலாக ஆய் விஷயமாக,

"ஆசார்ய ஹ்ருதயார்த்தா: ஸகலா யேந தர்சிதா:।
ஸ்ரீசாநுதாஸம் அமலம் தேவராஜம்தம் ஆச்ரயே॥"

(ஆசார்ய ஹ்ருதயத்தின் பொருள்களெல்லாம் எவரால் காட்டப்பட்டதோ, அப்படிப்பட்ட திருநாராயணனுக்குத் திருமாலை கைங்கர்யம் செய்பவராய் நிர்மல ஸ்வபாவராயிருக்கும் ஆயியை அடைகிறேன்) என்ற சுலோகத்தை அருளிச்செய்ய அதைகேட்ட ஆய் அதில் தமக்கு எந்த சம்பந்தமு மில்லையென்று கூறி,

"பூதூரில் வந்துதித்த புண்ணியனோ! பூங்கமழும்
தாதாரும் மகிழ்மார்பன் தானிவனோ!—தூதூர
வந்த நெடு :ாலோ! மணவாள மாமுனிவன்
எந்தை இவர் மூவரிலும் யார்?"

என்று அருளிச்செய்து ஜீயரை அவதார புருஷர் என்றே கொண்டாடி ஆதரித்துக்கொண்டு சிலகாலம் அங்கேயே இருந்தார்.

பிறகு ஆய் ஆழ்வாரிடமும் பெரியஜீயரிடமும் விடை பெற்றுக்கொண்டு திருநாராயணபுரத்துக்கு எழுந்தருளினார். அங்கு ஆயிடம் பொறாமை கொண்டவர்கள் ஆழ்வார்திருநகரிக்குப் போனவர் அதுவரை வராமையால அதைச் சாதகமாக்கி, அவர் இறந்துவிட்டார் என்று வதந்தியை உண்டாக்கி அவருடைய சொத்தையெல்லாம் திருநாராயணனுக்குச் சேர்த்துவிட்டார்கள். அவ்விடத்துக்கு ஆய் எழுந்தருளியபோது இதை யறிந்து, அபிமானத்துக்குரிய இவற்றை அங்கீகரித்து அடியேனிடம் அபிமானம் கொள்ளப் பெருமாள் நினைந்தமை இதனால் நன்கு விளங்குகிறது; என்னே! அவன் திருவுள்ளம் என்று மிகவும் உகந்து திருநாராயணனுக்கு மாலை கட்டிச் சமர்ப்பித்துக் கொண்டிருந்தார்,

## தீயிலிருந்து தப்பிய ஜீயர்

ஆழ்வார்திருநகரியில் மணவாளமாமுநிகள் காலக்ஷேபங்கள் அருளிக்கொண்டிருக்கையில் அநேகர் அவர் திருவடிஸம்பந்தம் பெற்று உய்ந்தனர். இப்பெருமையைப் பொறாத சிலர் ஒருநாள் இரவில் மணவாள மாமுநிகள்

உறங்கும்போது அவரிருந்த குடிசைக்கு தீயிட்டனர். அது கண்டு பெரியோர்களெல்லாம், ஸ்வாமிக்கு என் வருமோ! என்று வயிற்றைப் பிசைந்து கொண்டிருக்கையில் மணவாள மாமுநிகள் தம்முடைய நிஜருபமான பாம்பு வடிவத்தோடு எல்லோரும் காணும்போதே எரிகிற வீட்டிலின்றும வெளியே புறப்பட்டு மற்றவரோடு தாமும் கலந்து நின்றார். எல்லோரும் ஆச்சரியப்பட்டனர். இந்நிலை கண்ட அப்பொறுமையாளர்களில் சிலர் பெரிய ஜீயரை வணங்கிப் பிழை பொறுத்தருள வேண்டி அவரடியை அடைந்துய்ந்து போனார்கள்.

இப்படி நெருப்பிடப்பட்ட செய்தியை அறிந்து அத்தேசாதிபதியான ராஜா அச்செயல் புரிந்தவரைக் கண்டு பிடித்துத் தண்டிக்கப் போக, அதைத் தடுத்து அவர்களை ஜீயர் மன்னித்தருளினர். அப்பொறுமையாளரும் அக்குணத்துக்கு அடிமைப்பட்டு ஜீயரிடம் பிழை பொறுப்பித்துக்கொண்டனர்.

பிறகு அத்தேசத்தை நிர்வகிக்கும் ஒருவர் ஜீயரின் பெருமைகளையறிந்து அவர் திருவடிகளை யடைய, ஜீயரும் அவரை அங்கீகரித்துத் திருவிலச்சினை முதலானவைகளை அளித்து அடிமையாக்கிக்கொண்டு அவருக்கு 'சடகோப தாஸர், என்று பேரிட்டு, 'மேல் நிலைக்காக மூன்று பங்கும் இங்கு நிலவ ஒரு பங்குமாக (பாரமார்த்திக விஷயமாக மூன்று பங்கும் லௌகீகத்திற்காக ஒரு பங்கும்) செயல்பட்டு வாழ்ந்திரும்' என்று அருளி அவரைக்கொண்டு காளமேகன் திருமண்டபம், அழகிய மணவாளன் திருமண்டபம் முதலான கைங்கர்யங்களைச் செய்தார்,

பிறகு திருநகரியினின்றும் புறப்பட்டுத் திருக்குறுங்குடிக்கு எழுந்தருளி, அங்கே திருவேங்கடமுடையான் என்கிற ப்ராம்மணரைச் சிஷ்யராக்கி அவருக்குத் திருவேங்கட தாஸர் என்ற திருப்பெயரிட்டுக் கோயில் கைங்கர்யங்களிலே பணித்துப் பின் நின்றநம்பி, இருந்த நம்பி, கிடந்த நம்பி, திருப்பாற்கடல் நம்பி, மலைமேல்நின்ற நம்பி என்ற ஐந்து நம்பிகளுக்கும் கர்ப்பக்ருஹம், மண்டபம் முதலான கைங்கர்யங்களைச் செய்தருளிச் சேவித்துக் கொண்டிருந்தார், பிறகு அங்கிருந்தும் புறப்பட்டுத் திருவரங்கம் சேர்ந்து அழகிய மணவாளப்பெருமாளைச் சேவித்துக்கொண்டு முன்புபோல வாழ்ந்திருந்தார்.

## பாகவதாபசாரம் பகவத் விரோதம்

அக்காலத்தில் எறும்பியப்பா என்கிற பெரியவித்வான் திருவரங்கத்துக்கு வந்து பெரிய பெருமாளைத் திருவடி தொழுது, அவ்வூரில் தம் பந்துவான கோயிலண்ணரை அழைத்துக்கொண்டு மணவாளமாமுநிகளைச் சேவித்து ஒருவரையொருவர் வணங்கியிருக்கிறபோது மணவாள மாமுநிகள் திருவாய்மொழியில் 'உயர்வற உயர்நலம்' என்ற பதிகத்தில் இப்பாரசுரத்தில் பரத்வத்தைப் பலபடியாக உபந்யஸித்தருளினார். அது கேட்டு எறும்பியப்பா, "இவர் தமிழில் மட்டும் சிறந்தவர் என்றிருந்தோம்; இருமொழிகளிலும் சிறந்து இரண்டுவேதாந்தங்களிலும் மிகச் சிறந்தவரா யிராநின்றார்" என்று கொண்டாடினார்; என்றாலும் ஜீயர் திருவடிகளை அடையாமல் தம்மூருக்குத் திரும்பினார். தம் திருவாராதனப் பெருமாளான சக்ரவர்த்தித் திருமகனாரை ஆராதிக்க வேண்டித் திருக்காப்பை (காப்பாக இருக்கும் கதவை) நீக்கப்புகத் திறக்கக் முடியவில்லை. பல உபாயங்களாலே முயன்றும் திறக்கமுடியவில்லை. அதனால் வேதனைப்பட்டு ஒன்றும் செய்யமாட்டாமல் பட்டினியோடு உறங்க, அவர் கனவில் பெருமாள், "நீர் வரவரமுநிகளிடம் சாமான்யரென்று அபசாரப்பட்டீர் (பிழை செய்தீர்); அவர் திருவநந்தாழ்வான்; நமக்கு (சக்ரவர்த்தித் திருமகனான நமக்கு)ப் பூர்வத்தில் தம்பி இளையபெருமாளாக அவதரித்தார்; பிறகு எம்பெருமானாராக அவதரித்தவர்; இப்போதே சென்று மணவாள மாமுநிகளை அடைந்துய்ந்தாலொழிய உம் கையால் நாம் ஆராதனம் கொள்வதில்லை" என்று நியமிக்க, விழித்தெழுந்த எறும்பியப்பா உடனே புறப்பட்டு ஸ்ரீரங்கத்தையடைந்தார். கோயிலண்ணரை முன்னிட்டுக்கொண்டு பெரிய ஜீயர் மடத்தை யடைய, அப்போது ஜீயரும் பெருமாளைச் சேவிப்பதற்காகப் புறப்பட எதிரே எறும்பியப்பாவைக் கண்டு அவரை அங்கீகரிக்கவேணும் என்று எண்ணி மறுபடியும் மடத்துக்குள்எழுந்தருளினார். எறும்பியப்பாவும் உள்ளேசென்று வணங்கி அங்கீகரிக்கவேணும் என்று வேண்டி நின்றார். மாமுநிகளும் மற்றுமுண்டானவர்களைப் பெருமாளை சேவித்து வாருங்கோள் என்று அனுப்பி, அவர்கள் சேவித்து வந்தவுடன் அவர்களோடு, "பெருமாள் இந்த இந்தஆபரணங்களை அணிந்திருந்தார்; இந்த இந்த தளிகைகளை அமுது செய்தருளினார்" என்று

தெரிவிக்க, அது கேட்டு எல்லோரும் மாமுநிகளின் ஸர்வஜ்ஞதையை (எல்லாவற்றையும் அறியும் தன்மையை) வியந்து அடி வணங்கினர். எறும்பியப்பாவும் வியந்து தம் பிழைக்கு வருந்தி நிற்க, ஜீயரும் அவரை அங்கீகரித்து அடிமை கொண்டு அவருக்கு எல்லா அர்த்தங்களையும் அருளிச்செய்தார். அப்பாவும் ஆசார்யரான வரவரமுநிகளைப் பிரியா திருந்தமையே காரணமாக வரவரமுநி தாஸர்' என்று பெயருடையராயிருந்து பெரிய ஜீயரின் நித்யாநுஷ்டாநங்களை யெல்லாம் அநுபவித்து அதற்கு மங்களாசாசனம் செய்து ஜீயர் விடை கொடுக்க அப்பாவும் தம் ஊருக்கு எழுந்தருளினார்.

## உத்தமநம்பியின் அறியாமை

ஒரு சமயம் மாமுநிகள் நம்பெருமாளைத் தனிமையில் சேவித்துக்கொண்டிருந்தார். அப்போது உத்தமநம்பி (அர்ச்சகர்) திருவாலவட்டம் (விசிறி) வீசிக்கொண்டிருந்தார். மணவாளமாமுநிகள் நெடுநேரமாகப் பெருமாளைச் சேவித்து நிற்க ஸஹியாமல் உத்தமநம்பி முநிகளைப் பார்த்து, அவருடைய திருமேனியின் வெண்மை நிறத்தை வேறுவிதமாக (நோயாக) எண்ணிக்கொண்டு, 'நெடுநேரமாயிற்றே; திரும்பலாகாதோ!' என்று கூற, அவருடைய தவறான எண்ணத்தை அறிந்துகொண்ட பெரியஜீயர்சடக்கெனப் புறப்பட்டு மடத்துக்கு எழுந்தருளினார். ஜீயர் சென்ற கொஞ்ச நேரத்துக்கெல்லாம் உத்தமநம்பி நின்று கொண்டே தூங்கிப்போய் விசிறியும் கையுமாக ஜன்னல் கதவின்மேல் சாய்ந்திருக்க, அவ்வளவில் பெருமாள் அவர் கனவில் தோன்றித் தம் பவளவாய் திறந்து தம் திருக்கையால் அரவணையைத் தொட்டுக் காட்டி, ""நம்பீ! இவர் காணும் நம் பெரியஜீயர்; இவருடைய நிறம் காணும் அவருக்குள்ளது; வேறாக நினையாதிரும்!'' என்று அருளினார். சடக்கென விழித்து உத்தமநம்பியும் தாம் செய்த செயலுக்கு வருந்தி உடனே புறப்பட்டு ஜீயர்மடத்துக்குப் போய் ஜீயருக்குத் தண்டனிட்டுப் பிழை பொறுக்கும்படி வேண்டினார். ஜீயரும் அவரை அபிமானித்தார். உத்தமநம்பியும் அதுமுதல் ஜீயரிடம் பெருமதிப்பு வைத்தார்.

## மணவாள மாமுநிகளின் சேஷாம்சு விசேஷம்

மற்றொரு நாள் திருமலையாழ்வார் மண்டபத்தில் வரவரமுநிகள் காலக்ஷேபம் செய்து முடித்து எல்லோரும் போயின பின்பு கதவை மூடித் தம் சுய உருவத்தோடு

ஆயிரம் பணங்களோடு (தலைகளோடு) பெருமாள் மேல் சென்ற சிந்தையராய் அநுபவித்துக் கொண்டிருந்தார். இதைச்சடகோபக்கொற்றி என்றபேரையுடைய அம்மையார் ஒரு த்வாரத்திலே பார்த்து வியந்து பயமும் பக்தியும் ஒருங்கு சேர நிற்கையில் இதை யறிந்துகொண்ட மாமுநிகள் கதவைத் திறந்துகொண்டு, 'என்ன அம்மையாரே!' என்று கேட்டதும், அம்மையார் திடுக்கிட்டுத் தான் கண்டதை விண்ணப்பம் செய்ய, ''யாருக்கும் சொல்லாதே யிரும்;'' என்று பணித்தார்.

ஆக இப்படித் திருமேனி நிறத்தாலும் பெருமாளுக்கு எல்லா அடிமைகளும் செய்கையாலும், கங்கையில் பெருக்குப் போலே யிருக்கிற உபந்யாஸ வைபவத்தாலும், திருநகரியிலே நெருப்பிட்ட வீட்டினின்றும் சேஷன் உருக்கொண்டு எல்லோருங் காண வெளிப்போந்தமையாலும், சக்ரவர்த்தித் திருமகன் எறும்பியப்பாவுக்குக் கனவில் சொன்னமையாலும், உத்தமநம்பிக்குக் கனவில் பெரிய பெருமாள் சொன்னமையாலும். கொற்றியம்மையார் பகலில் ப்ரத்யக்ஷமாகக் கண்டமையாலும் பெரியஜீயர் சேஷாவதாரமென்பது உலகமெங்கும் பரந்தது.

## மணவாள மாமுநிகளுக்கு நம்பெருமாள் விண்ணப்பம்

ஒருசமயம் பெருமாளுக்குப் பவித்ரோத்ஸவம் நடந்து கொண்டிருந்தது. பெருமாளும் குழுவோடு எழுந்தருளி யிருந்தார். எல்லா வடியார்களும் சேவித்துக்கொண்டிருந்தனர். அச்சமயம் தம்மடியார்கள் சூழ வரவர முநிகள் பெருமாளுக்கு மங்களாசாஸனம் செய்ய எழுந்தருளினார். எம்பெருமானாரின் பெருமையைத் திருக்குறுங்குடி நம்பி வெளியிட்டாப்போலே தாமும் பெரியஜீயரின் பெருமையைத் தாம் அவருக்குச் சிஷ்யனாகி வெளியிட வேண்டுமென்று பெருமாள் திருவுள்ளங்கொண்டு ஜீயருக்குஅருள் பாடிட்டு (அர்ச்சகர்மூலம் கூவிஅழைத்து)ஸ்ரீசடகோபனை சாதித்து, ''நாளைமுதல் பெரியதிருமண்டபத்தே நம்மாழ்வாரின திருவாய்மொழியை ஈடு முப்பத்தாறுயிரம் முதலான ஐந்து உரைகளையும் நாம் கேட்கும்படி உரையும்'' என்று பணிக்க, ஜீயரும் பேரருள் என்றுசிரமேற்கொண்டு "இப்படி அடியேனையும் பொருளாய்ப் பணிப்பதே' என்று அவனருளை எண்ணி அற்றை மறுநாள் ஈடு தொடங்கி

ஐந்து வ்யாக்யானங்களுடன் திருவாய்மொழியைத் தொடங்கிப்பெருக்கமாக உபந்யஸித்தருளா நிற்க, அதை நம்பெருமாள் நாச்சியாருடனே திவ்யஸிம்ஹாஸநத்திலே எழுந்தருளி திருவநந்தாழ்வான், பெரிய திருவடி, சேனை முதலியார் ஆகிய நித்யசூரிகளும் வைகுந்தத்துமுநிவரான நம்மாழ்வார் முதலான ஆழ்வார் பதின்மரும், நிலத் தேவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களும் புடைசூழ மண்டபத்திலே எழுந்தருளியிருந்து திருச்செவி யேற்றருளினர்.

இப்படி ஒரு ஸம்வத்ஸரம் இடையூன்றித் திருவாய்மொழியை உரையுடன் ஜீயர் உபந்யஸித்தருளினர். பெருமாளும் பெருங் குழுவுடன் நிதமும் திருச்செவி ஏற்றருளினர். ஜீயருடைய உபந்யாஸப் பெருக்கைப் பெருமாள் மிகவும் உகந்தார்.

## மாமுநிகளுக்கு ரங்கராஜர் சிஷ்யராதல்

அன்று திருவாய்மொழி காலக்ஷேபம் முடிவு பெறும் நாள். நம்பெருமாள் நிதமும் போலே நாச்சியாருடனும் நித்யசூரிகளுடனும் ஆழ்வார் பதின்மருடன் கூடிப் பெருங் குழுவாகப் பெரிய மண்டபத்தே எழுந்தருளியிருந்து சாற்றுமறை நடக்க நியமித்தார். மணவாளமாமுநிகளும் திருவாய்மொழி வ்யாக்யானத்தை முடித்தருளினர். பெருமாளும் திருப்பரியட்டம் (வஸ்த்ரம்), பழங்கள் முதலானவற்றைக் கொண்டுவரச் செய்து காணிக்கையாக வைத்தார். அப்பொழுது ஒரு ஐந்து வயது குழந்தை காணிக்கைகளுக்கும் பெருமாளுக்கும் நடுவே வந்து நின்றது. அக்குழந்தை ரங்கராஜன் என்னும் பேருடையதாய் அர்ச்சகரொருவரின் குழந்தையா யிருந்தது. எனினும் அழகு மிளிர்ந்திருந்தது. அதைக்கண்ட பெரியோர்கள் குழந்தை இடையிலே நிற்கிறதே என்று அப்பாற் கொண்டுவிட்டனர். அக்குழந்தை மறுபடியும் அங்கேயே வந்து நின்றது. எல்லோரும் வியந்து அக்குழந்தையைப் பார்த்து, "என்ன செய்யப்போகிறாய்?" என்று கேட்டனர். உடனே அக்குழந்தை மணவாள மாமுநிகள் பக்கமாகக் கை கூப்பிக் கொண்டு,

"ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்
யதீந்த்ர ப்ரணவம் வந்தே ரம்ய ஜாமாதரம் முநிம்"

(திருமலையாழ்வாரின் தயைக்குப் பாத்ரபூதராயும், ஞாநம், பக்தி முதலான குணங்களுக்குக் கடலாயும்,

யதீந்த்ரரான எம்பெருமானாரிடத்தில் அன்பு மிக்கவராயு மிருக்கிற அழகிய மணவாள மாமுநிகளை வணங்குகி றேன்) என்கிற சுலோகத்தைச் சொல்லிவிட்டு குடுகுடு வென்று ஓடி மறைந்து விட்டது. இதைக் கண்டும் கேட் டும் எல்லோரும் வியந்து போயினர். அக்குழந்தையைத் தேடியும் காணவில்லை. ரங்கராஜனேதான் இப்படிச் செய் தான் என்று ஒருமிடறாக எல்லோரும் கருதினர். கந்தா டையண்ணனும் வானமாமலை ஜீயரும் பட்டர்பிரான் ஜீயரும் தங்களுள் தாங்கள் ரகஸ்யமாக அமைத்திருந்த இந்த சுலோகத்தை இக்குழந்தை வெளியிட்டதென்றால் இக்குழந்தை நிச்சயமாக ஸர்வாந்தர்யாமியான (எல்லா வற்றிலும் கரைந்துறைகின்றவனான) ஸ்ரீரங்கநாதனே என்று வெளியிட்டனர். பிறகு நம்பெருமாள் **அப்பிள்ளைக்கு** அருளப்பாடிட்டு, 'ஜீயர் விஷயமாக வாழித் திருநாமம் சொல்லும்' என்று பணிக்க **அப்பிள்ளையும்**

""வாழி திருவாய்மொழிப்பிள்ளை மாதகவால்
வாழும் மணவாள மாமுநிவன்—வாழியவன்
மாறன் திருவாய் மொழிப்பொருளை மாநிலத்தோர்
தேறும் படியுரைக்கும் சீர்''

என்று அருளினார். இதைப் பெருமாள் கேட்டு உகந்து, இனி எல்லா திவ்ய தேசங்களிலும் திவ்ய ப்ரபந்த ஆரம் பத்தில் 'ஸ்ரீசைலேச' என்ற சுலோகத்தையும், முடிவில் 'வாழி திருவாய்மொழிப்பிள்ளை' என்ற பாட்டையும் அநு ஸந்திக்க வேணுமென்று ஆணையிட்டார். பிறகு பெரு மாள் பெரிய ஜீயரை ""முப்பத்தாறாயிரப் பெருக்கர்'' என்னும் பெயரை நேரே கண்டோம் என்று கொண்டாடி னார். பிறகு பெருமாள் அனைத்துப் பேரும் எல்லா வரிசை களோடும் பெரிய ஜீயரை மடத்தில் விட்டு வாருங்கோள் என்று பணிக்க அப்படியே செய்தனர். இப்படி அழகிய மணவாளப்பெருமாளும் சிஷ்யரான பெருமை பெரிய ஜீயருக்கே உள்ளதொன்றாம்.

மேலும் இந்த ஸ்ரீசைலேஸ தனியனை ஸ்ரீபதரியில் சேவித்துக்கொண்டு நித்யவாசம் செய்துகொண்டிருந்த யாத்திரைவாசி அயோத்தி ராமாநுஜய்யங்கார் என்கிற வருக்கு ஸ்வப்நத்திலே பத்ரிநாராயணன் உபதேசிக்க அதை அப்படியே அநுசந்தானம் செய்துகொண்டிருந் தார். சிறிது நாள் அங்கிருந்து விட்டுப் புறப்பட்டுத் திவ்ய தேசங்களைச் சேவித்துக்கொண்டே திருமலை வந்து திரு

மலேமே லெந்தையைச் சேவிக்க அங்கும் இந்தத் தனியனைச் சேவிக்கக் கேட்டு வியப்பெய்தி காரணம் கேட்டுத் தெரிந்து ஆச்சரியமும் ஆநந்தமுமடைந்தார். உடனே அங்கிருந்து புறப்பட்டு ஸ்ரீரங்கம் வந்து பெரியஜீயர் திருவடிகளை அடைந்து நடந்த விருத்தாந்தங்களைச் சொல்லிச் சேவித்து நிற்க, 'உமக்கு வேண்டுவதென்?' என்று ஜீயர் கேட்க, 'தேவரீரைத் தஞ்சமாகப் பெற்ற அடியேனுக்கு வேறொன்றும் வேண்டுவதோ!' என்று பதில் கூற, ஜீயரும் அவரை ஏற்றுத் திருவிலச்சினை முன்னாக அடிமை கொண்டு "திருவேங்கட ராமாநுஜதாஸர்" என்று திருநாமமிட்டார்.

## பெருமாள்கள் யாவரும் உகந்தருளிய தனியன்

திருமாலிருஞ்சோலையில் அழகருக்கு எல்லா விதத் தொண்டுகளையும் செய்துகொண்டு ஒரு ஜீயரிருந்தார். அவர் பெரிய ஜீயர் திருவடி சம்பந்தம் பெற்றவர். எப்போதும் மாமுநிகளின் திருமேனியையும் அவர் குணங்களையும் அநுஸந்தானம் பண்ணிக்கொண்டிருப்பர். ஒருநாள் குணாநுஸந்தானம் பண்ணும்போது தம் ஆசார்ய விஷயமாக ஒரு தனியனும் இல்லையே; இருந்தால் நித்யம் அநுஸந்தேயமாக விருக்குமே என்று எண்ணிக்கொண்டு அழகரைச் சேவிக்கப் புறப்பட்டார். அப்போது பெரிய ஜீயரின் திருவடி சம்பந்தம் பெற்ற சேனைமுதலியார் அழகரைச் சேவிக்க வேணுமென்று வர, அவரை அங்கிருந்த ஜீயர் கண்டு, அழைத்துக்கொண்டு பெருமாளைச் சேவிக்கச் செய்ய, பெருமாள் அச் சேனைமுதலியாருக்குத் தீர்த்தம், ப்ரசாதங்களை அநுக்ரஹித்து, "நாம் நாவிலிருந்து நம் ஆசார்யரான மணவாள மாமுநிகளின் விஷயமாக ஒரு தனியனைச் சொல்லப் போகிறோம்; அதை இந்த ஜீயருக்குச் சொல்லும்" என்று நியமித்து அவர் திருமுடியிலே ஸ்ரீசடகோபனைச் சேர்க்க, அவரும் 'ஸ்ரீசைலேச' என்ற தனியனைச் சொல்ல அதை அப்படியே நெஞ்சில் வாங்கி அர்ச்சகர் முதலில் குறிப்பிட்ட ஜீயருக்குச் சொன்னார். அந்த ஜீயரும் அத்தனியனைப் பெற்றுப் பேறு பெற்றவரானார். சற்று நேரத்துக்கெல்லாம் சேனை முதலியாரும் அர்ச்சகரும் அந்த ஜீயரிடம் வந்து தாங்கள் சொல்லிய அந்த சுலோகத்தைத் தங்களுக்குச் சொல்லும்படி கேட்டனர். 'இதென்ன, தாங்கள்தாமே சொன்னீர்கள்!' என்ன, 'எங்களுக்கு ஒன்றுமே தெரியாது' என்று

அவ்விருவரும் தாங்க ளறியாமல் பெருமாள்தாமே அருளினபடியைத் தெரிவித்தனர். பிறகு அத்தனியனைப் பெற்றுச் சேனைமுதலியார் இப்பெருமையை அனைவருக்கும் தெரிவிக்க வேண்டுமென்று அவசரமாக ஸ்ரீரங்கத்துக்கும் வந்து அங்குள்ள பெரியோர்களுக்கெல்லாம் ஸ்ரீசைலேசத் தனியனின் பெருமையை அழகர் நிகழ்த்தியபடியைத் தெரிவித்தார். எல்லோரும் கேட்டு அழகிய மணவாளனோடு திருவேங்கட முடையானும் அழகனும் இத்தனியனை உகந்தருளியதால் மணவாள மாமுநிகளின் பெருமை அளவிட முடியாததென்று உகந்திருந்தனர்.

## பூர்வர்களின் அருளிச்செயலுக்கு உரை காணல்

இப்படிப் பெரும் பெருமையாளரான மாமுநிகளும், ஓராண்வழியாய் வந்து எம்பெருமானார் காலந்தொட்டுப் பூர்வாசார்யர்களெல்லாம் தங்களுள் அருளி வந்தவைகளான ரஹஸ்யார்த்தங்களை யெல்லாம் பின்னுள்ளாரும் அறிந்து உஜ்ஜீவிக்கவேண்டுமென்று பிள்ளைலோகாசார்யரும் அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரும் அருளிச் செய்த க்ரந்தங்களில் முமுக்ஷுப்படி என்கிற ரஹஸ்யத்துக்கும், ஸ்ரீவசநபூஷணத்துக்கும் தத்வத்ரயத்துக்கும் ஆசார்ய ஹ்ருதயத்துக்கும் வ்யாக்யானம் இட்டருளி, பின் ராமாநுச நூற்றந்தாதி, ஞானசாரம், ப்ரமேய சாரம், ஸப்தகாதை முதலிய ப்ரபந்தங்களுக்கும் உரையருளினார். பிறகு கீதைக்குத் தாத்பர்ய தீபம் என்ற உரையை அருளி, ஈட்டு(க்கு) ப்ரமாணத் திரட்டு, தத்வத்ரய(த்துக்கு) ப்ரமாணத்திரட்டு இவைகளையும் சேர்த்தருளி, உடையவரின் நித்யம் என்னும் க்ரந்தத்தைச் சுருக்கி ஜீயர்படி என்ற திருவாராதன விளக்கத்தையும் அருளினார். மேலும் உபதேச பரம்பரையாய் வந்த ஆழ்வா ராசார்யர்களின் பெருமைகளைக் காட்டும் உபதேச ரத்நமாலை என்னும் நூலையும் திருவாய்மொழியின் முக்கியப் பொருள்களை விளக்கும் திருவாய்மொழி நூற்றந்தாதி என்னும் நூலையும் அருளிச்செய்தார். முன்பே யதிராஜ விம்சதியை அருளியிருந்தது சொல்லப்பட்டது. மற்றும் இயல் சாற்றும் விடுதிச் சுலோகங்களும் பாசுரங்களும் அருளினார்.

ஜீயர் திருவடிகளை அடைவதற்காக வரந்தரும் பெருமாள்பிள்ளை யென்பவர் தனியே வந்து (பாகவத புருஷா

காரமில்லாமல்) வணங்கி நிற்க, அதுவே காரணமாக அவரை ஏற்காமல் வெறுத்துப் பின் ஆறு மாதங்கள் பணிவிடை கொண்டு அங்கீகரித்து அடிமை கொண்டார். அவர் தீக்ஷையோடிருந்தார். (க்ஷவரம் செய்துகொள்ளாமலிருந்தார்.) இதைப் பார்த்து ஜீயர் காரணம் வினவினார். அவரும் காரணத்தைச் சொன்னார். ஜீயரும் கேட்டு ஆயின் இன்றைக்கு க்ஷவரம் செய்துகொள்ளும் என்று பணிக்க அவரும் ஆணைப்படியே செய்துகொண்டார். அதே சமயம் அவர் ஊரிலிருந்து அவருடைய தேவிகள் (பார்யை) குழந்தையைப் பெற்று அன்றைக்குப் பத்தாவது நாளென்று சதி வந்தது. இதை உணர்ந்த பெரியோர்கள் பெரியஜீயரின் ஸர்வஜ்ஞதைக்கு (எல்லாமறியும் தன்மைக்கு) ஆச்சர்யமடைந்தனர்.

## பெரியஜீயர் திவ்யதேச யாத்திரை

பிறகு பெரியஜீயர் திவ்ய தேசங்களைச் சேவிக்கவேணுமென்று அண்ணன் முதலான பெரியோர்களோடு புறப்பட்டுப் பெருமாள் கோயிலுக்கு எழுந்தருளித் தேவப்பெருமாளை மங்களாசாசனம் பண்ணி நாலாறு நாளிருக்க பெருமாளுக்கு வைகாசி உத்ஸவம் நேர்பட, பெரிய திருவடி உத்ஸவத்தையும் சேவித்துக் கொண்டிருந்தார். அப்போது பெருமாள் கங்கைகொண்டான் மண்டபத்துக்கு எழுந்தருள அங்கு எறும்பியிலப்பா பெருமாளைச் சேவிக்க வந்து பெரியஜீயரைக் கண்டு தன்னை மறந்து அவரைச் சேவித்து மூர்ச்சையானார். பிறகு தெளிந்து எழுந்து ஜீயரைத் தண்டனிட்டு அவரை முன்னிட்டுக்கொண்டு பெருமாளைச் சேவித்தார். பின் உத்ஸவம் முழுவதும் சேவித்துக்கொண்டு எறும்பியிலப்பாவையும் அழைத்துக்கொண்டு ஜீயர் திருப்புட்குழி, கடிகாசலம் (சோளசிங்கபுரம்) பெருமாள்களையும் சேவித்து அப்பாவின் ஊரான எறும்பிக்கு வடதிருவரங்கம் என்றும்; குளத்துக்குத் திருக்காவேரி என்றும் பெயர் சூட்டி, எறும்பியிலப்பாவுக்கு அழகிய மணவாளதாசர் என்றும் பெயரிட்டு அபிமானித்தார். அங்கிருந்து திருமலைக்குப் புறப்பட்டுப் போய் உடையவரையும் கோவிந்தராஜனையும் சேவித்துத் திருமலை யேறி, அங்குள்ள 'கோயில் கேள்வி ஜீயர்' முதலானவர்களால் எதிர்கொள்ளப்பட்டு, அடைவே சேவித்துக்கொண்டு உள்ளே புக்குத் திருமலைமேலெந்தையைச் சேவித்து, அங்கு கோயில் நிர்வாகத்துக்கு இளங்கேள்வி எம்பெரு

மாறுர் ஜீயரை ஏற்படுத்தி வைத்து, அங்கிருந்து திருவெவ்வுளூர், திருநின்றவூர், திருமழிசை, முதலியாண்டான் அவதார ஸ்தலம் (பேட்டை), திருக்கச்சிநம்பி அவதார ஸ்தலம் (பூவிருந்தவல்லி), திருவல்லிக்கேணி, திருநீர்மலை, ஸ்ரீபெரும்பூதூர் முதலான திவ்ய தேசங்களைச் சேவித்துக்கொண்டு பெருமாள் கோயிலுக்கு எழுந்தருளினார். அங்கு பேரருளாளப் பெருமாளைச் சேவித்து அவரநுமதி கொண்டு அங்கிருந்து புறப்பட்டு மதுராந்தகத்துக்குச் சென்று ஏரிகாத்த பெருமாளான சக்ரவர்த்தித் திருமகனையும், எதிராஜரைப் பெரியநம்பி அநுக்ரஹித்த மகிழமரத்தையும் சேவித்துக்கொண்டு அன்று அங்கே தங்கியிருந்து மறுநாள் புறப்பட்டுத் திருவஹீந்த்ரபுரம் சென்று தெய்வநாயகனையும் திருவடிதொழுது அங்கிருந்து சோழமண்டலத்துள்ள பெருமாள்களை மங்களாசாசனம் செய்துகொண்டு திருவாலி திருநகரிக்கு எழுந்தருளினார்.

அங்கு திருமங்கையாழ்வாரைத் திருவடி முதல் திருமுடிவரை சேவித்து அவரழகில் ஈடுபட்டு,

"உறைகழித்த வாளையொத்த விழிமடந்தை மாதர்மேல்
  உருகவைத்த மனமொழித்து (அவ்)உலகளந்த
  நம்பிமேல்
குறையை வைத்து மடலெடுத்த குறையலாளி திருமணங்
  கொல்லைதன்னில் வழிபறித்த குற்றமற்ற செங்கையான்
மறையுரைத்த மந்திரத்தை மாலுரைக்க அவன்முனே
  மடியொதுக்கி மனமடக்கி வாய்பதைத்து (அவ்)
  ஒன்னலார்
கறைகுளித்த வேலணைத்து நின்றஇந்த நிலைமையன்
  கண்ணைவிட் டகன்றிடாது கலியன்ஆணை ஆணையே''

என்றும், அணைத்த வேலும் தொழுத கையும் அழுந்திய திருநாமமும் 'ஓ'மென்ற வாயும் உயர்ந்த மூக்கும் குளிர்ந்த முகமும் பரந்த விழியும் இருண்ட குழலும் சுருண்ட வளையமும் வடித்த காதும் மலர்ந்த காதுகாப்பும் தாழ்ந்த செவியும் செறிந்த கழுத்தும் அகன்ற மார்பும் திரண்ட தோளும் வெளித்த முதுகும் குவிந்த இடையும் அல்லிக் கயறும் அழுந்திய சீராவும் தூக்கிய கருங்கோவையும் தொங்கலும் தனிமாலையும் சாத்திய திருத்தண்டையும் சதிரான வீரக்கழலும் குந்தியிட்ட கணைக்காலும் குளிரவைத்த திருவடி மலரும் மருவலர்தம் உடல்

துணிய வாள்வீசும் பரகாலன மங்கை மன்னரான வடிவே என்றும் அருளிச்செய்து மங்களாசாசனம்செய் தருளி, ஆழ்வாரை அடிமைகொண்ட வயலாலி மணவாள னையும் மங்களாசாசனம் செய்து, பின் திருமணங்கொல் லைக்கு எழுந்தருளி,

"இதுவோ திருவரசு! இதுவோ மணங்கொல்லை!
இதுவோ எழிலாலி யென்னுமூர்!—இதுவோதான்
வெட்டுங் கலியன் வேல்நீட்டி நெடுமாலை
எட்டெழுத்தும் பறித்த இடம்"

என்று பற்பலவாறு ஈடுபட்டுச் சேவித்துப் புறப்பட்டு வழியிலுண்டான திவ்ய தேசங்களை யெல்லாம் சேவித்துக் கொண்டு திருக்கண்ணபுரம் அடைந்தார். அங்கு சௌரிராஜனையும் மங்களாசாசனம்செய்து அச்சந்நிதியில் திருமங்கையாழ்வாரையும் அர்ச்சா திருமேனியில் ஏறியரு ளப் பண்ணி, அங்கிருந்து புறப்பட்டுத் தென்துவரையில் மன்னனாரைச் சேவித்து அவர்க்குத் திருவாய்மொழியில் மூன்றாம் பத்தில் மூன்றாவதான "மாசறு சோதியை" என்னும் பதிகத்தை நித்யாநுஸந்தாநமாகச் சமர்ப்பித்து அங்கிருந்து திருநரையூர், திருக்குடந்தை முதலான திவ்ய தேசங்களைச் சேவித்துக் கொண்டு மீண்டும் திரு வரங்கமடைந்து எம்பெருமானார் முன்னாகப் பெரியபெரு மாளைச் சேவித்துத் தாம் கொண்டுவந்த சத்ர சாமரங் கள், ஆலவட்டங்கள், திண்டுகள் முதலானவற்றைப் பெருமாளுக்குச் சமர்ப்பித்துத் தம் மடத்திற்கு எழுந் தருளி முன்போல காலக்ஷேபம் அருளிக்கொண்டிருந்தார்.

ஆழ்வார்களின் அருளிச் செயல்களையும் ஸ்ரீவசநபூஷ ணாதி ரஹஸ்யங்களையும், விசதவாக்சிகாமணி' என்னும் பட்டத்துக்கேற்ப உபந்யஸித்துக்கொண்டு ஞானத்தை வளர்த்துக்கொண்டு மாமுநிகள் வாழ்ந்தருளும் காலத் தில் ஸ்ரீவசநபூஷணத்தின் பொருள்களைக் கேட்டறிந் திருந்த இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் விருப்பு வெறுப்பு காரணமாகத் தங்களுக்குள் சச்சரவு செய்துகொண்டிருந் தார்கள். அச்சமயம் இரண்டு நாய்கள் ஒன்றோடொன்று சண்டையிட்டன. அந்த நாய்களைக் குறித்து மாமுநிகள், "நீங்களும் இவர்களைப்போலே ஸ்ரீவசநபூஷண அதிகாரி களோ? அஹங்காரத்தால் சச்சரவு செய்ய' என்று கூற, அதுகேட்டு அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் வெட்கித் தலை குனிந்து விட்டுக் கொடுத்து வாதத்தை விட்டார்கள்.

## பெரிய ஜீயரின் பற்றற்ற வாழ்வு

ஒரு சமயம் வடநாட்டிலிருந்து ஞானநுஷ்டானமில்லாதவர்கள் சிறிது பொருள் அனுப்பியிருந்தார்கள். அதை நன்கு விசாரித்து ஜீயர் அது அநுகூலமான பொருளாயில்லாமையாலே அதைக் கழித்துவிட்டார். இதனால் அறவழியால் வந்த பொருளே வைஷ்ணவனால் கொள்ளத் தகுந்தது என்பது தெளிவு.

மடத்துக்குச் சிறிது நிலமிருந்தது. அதன் காரணமாக அதைப் பயிரிடுவார் சிலர் வந்து மடத்தில் சாப்பிட்டுப் போக அந்த இடம் சாணத்தாலே சுத்தி பண்ணியதனால் ஈரம் கசிந்தது; யதேச்சையாக வெளியே வந்த ஜீயர் இதைக் கண்டு காரணம் கேட்டறிந்து, உடனே அந்த நிலத்தைப் பெரிய பெருமாளுக்கு ஆக்கி அந்த பத்திரத்தையும் ஸந்நிதி பண்டாரத்திலே சேர்த்தருளினார். இதனால் பரமைகாந்தியாய் (பகவானுக்காகவே வாழ்ந்திருக்கும் ஸ்ரீவைஷ்ணவனாய்) இருப்பவனுக்கு ஸம்ஸாரிகள் சம்பந்தம் சிறிதும் கூடாதென்பதாம்.

ஒரு சமயம் மிக முதிர்ந்த வயதுடைய அம்மையார் ஒருவர் வேறோரிடத்துக்குப் போகமுடியாமல் மடத்திலேயே தூங்க, அது கண்டு ஜீயர் அவரை மடத்தினின்றும் வெளியே போகும்படி செய்ய, அங்கிருந்த பெரியோர்கள் "வயதானவளாயிற்றே; இவளிடத்தில் சந்தேஹப்படவொண்ணுமோ' என்று கேட்க, ஜீயர், "கிழட்டு அணிலானாலும் மரம் ஏறமாட்டாதோ; நம்மை விரும்பாதார் அபவாதம் சொல்ல இது போதும்' என்றருளினார். இப்படி தகுதியில்லையானாலும் 'பிணம் எழுந்து கடிக்கிறதோ' என்று சந்தேஹித்துக்கொண்டு இப்படியான விஷயங்களைப் பயப்பட்டுப் பெரியோர் வாழ்ந்தருள்வர்.

## ஸ்ரீவைஷ்ணவன் அநுஷ்டிக்கவேண்டிய தர்மம் எது?

ஜீயருடைய உபதேசங்களையும் அநுஷ்டானங்களையும் அறிந்த ஒருவர் வைஷ்ணவராய் ப்ரபுவாயிருப்பவர் வடதேசத்திலிருந்தார். அவர் ஜீயருக்கு ஒருவர் மூலமாக, 'அடியேனுடைய உஜ்ஜீவனத்துக்காக ஸகல சாஸ்திரங்களையும் சுருக்கமாக அநுஷ்டிக்கும்படியா யிருக்கும் ஒரு அர்த்தத்தை அருளிச்செய்து அடியேனுக்கு அனுப்பி

யருளவேணும் என்று' ஆசையோடு சேதி யனுப்பினர். ஜீயரும் அதை யறிந்து அதற்கு, "பகவானுக்கு அடிமை யாயிருக்கும் ரஸந்தான் புருஷார்த்தம் என்று தெளிந் திருக்கும் அதிகாரிக்குத் தனிப்பட்டதாக பகவானிடத்து அன்பு கொண்டிருப்பது மட்டும் போதாது; தனிப்பட்ட தாக பகவானை ஆராதிப்பதில் ஊன்றியிருந்தால் மட்டும் போதாது; தனிப்பட்ட முறையில் ஆசார்யனுக்குப் பர தந்த்ரனாயிருக்கும் அதிகாரியிருத்தல் மட்டும் போதாது; தனிப்பட்டதாக பாகவதர்களோடு அநுசரித்துப்போவது மட்டும் போதாது; பின்னை, முடிந்த கைங்கர்யங்களைச் செய்துகொண்டும் தன்னுடைய வீட்டிலே பாகவதர்கள் தயங்காமல் நுழைந்து அவர்களுடைய சொந்த வீட்டிலே வாழ்வாரைப்போலே வாழும்படியாகத் தன்னுடைய நிலைமை உண்டாகியிருக்கவேணும்; 'அடியார்க்கு என்னை ஆட்படுத்த' என்றும் 'எந்தம்மை விற்கவும் பெறுவார் களே' என்றும் உள்ள ப்ரமாணங்களின்படி வாழாமற் போனால் சாஸ்த்ரநம்பிக்கை முதலானவைகைக்கூடாதவை.

"ந்யக்ரோத பீஜேவடவத்ப்ரணவே சப்தஜாலவத் |
ஸித்தே ததீயசேஷத்வே ஸர்வார்த்தா: ஸம்பவந்
திஹி ‖"

(முளைக்கிறதான ஆலம் விதையில் பணைக்கிறதான ஆலமரம் இருப்பது போலவும், ப்ரவணத்திலே சப்த ராசி கள் (ஒலிக் கூட்டங்கள்) அடங்கியிருப்பது போலவும் பாகவத சேஷத்வம் (அடியார்க்கு அடிமை செய்வது) கைபுகுந்தால் பகவத் ரஹஸ்யங்கள் முதலான எல்லா அர்த்தங்களும் தன்னிடையே உண்டாகிவிடும்) என்கிற படி பாகவத சேஷத்வம் உண்டானால் பலவகைப்பட்டவை களாய் அதிசயங்களாய் அநேகங்களாயுள்ள பகவானைப் பற்றிய ரஹஸ்யச் சிறப்புகளையெல்லாம் அறியவேண்டு மென்னும் கட்டாயமில்லை. இந்த பாகவத சேஷத்வ (பாகவதத் தொண்டு) மில்லாமல் சொல்லுகிற ஞானம், அநுஷ்டானம் இவைகளின் விளக்கங்களும் பகவானைப் பற்றிய ரஹஸ்ய அர்த்தங்களும் வேச்யை சொல்லுகிற பதிவ்ரதா தர்மம் போலே வீணாகும் என்று, "உற்றது முன்னடியார்க்கு அடிமை, மற்றெல்லாம் பேசிலும் நின் திருவெட்டெழுத்தும் கற்று" என்கிறபடி திருமந்த்ரத்தின் தேர்ந்த பொருளை எழுதி யனுப்பினர். அதைப் பெற்றுக் கொண்டு அந்த வைஷ்ணவரும் ததீயர்களை ஆராதித்துக்

கொண்டு ஜீயர் மடத்துக்குத் தன் நிலைக்கேற்ப விறகு முதலியவற்றை யனுப்பிக்கொண்டு வாழ்ந்திருந்தார்.

கோயிலிலே இருக்கிற பட்டர், பெருமாளின் பெருங் குழுவில் சேவிக்கச் சென்ற ஜீயரிடம் 'தேவரீரின் சிஷ்யர்கள் நம்மை வணங்காமல் அவமதி பண்ணிப் போகிறார்கள் என்று விண்ணப்பம் செய்தார். ஜீயரும் சிஷ்யர்களை அழைத்துக் காரணம் கேட்க, அவர்களும் பட்டருடைய நிலையைக் கூறி, 'அவரை வணங்க எங்கள் மனம் இசையாது' என்றனர். உடனே மாமுநிகள், 'அது உங்களுடைய, ஸதா மற்றவர்களிடம் தோஷங்களைக் காண்கையாகிற குணத்தாலே வந்ததாயிருக்கும்; பெருமாளும் பெரிய பிராட்டியாருமாக எண்ணிக்கொண்டு அந்த பட்டரை வணங்கிச் செல்லுங்கள்' என்று பணித்தார். இதனால் வைஷ்ணவன் பிறர் தோஷங்களில் கண் வைக்கலாகாது என்றபடி, மணவாள மாமுநிகள் முன்னோர் மொழிந்த முறை தப்பாமற் கேட்டுப் பின் ஓர்ந்து தாம் அதனையே அநுஷ்டித்துக் கொண்டிருந்தார்.

## எறும்பியப்பாவின் ஆசார்ய நிஷ்டை

முன்பு எறும்பியில் தங்கிவிட்ட எறும்பியப்பாவும்வரவரமுநிகளின் பிரிவாற்றாமையாலே அவரின் நித்ய நடப்புக்களை ஸதா நினைந்துகொண்டு அதன் காரணமாக "தினசர்யை' என்கிற நூலையாக்கி அதைஜீயரிடம்அனுப்ப, அதை நோக்கிய ஜீயரும் ஆசார்யனுடைய அபிமானத்திலேயொதுங்குவார் இப்படியன்றோ இருக்கவேண்டும் என்று உகந்து உடனே புறப்பட்டு வரும்படி ஓலையனுப்பினார். அதைச் சிரமேற்கொண்டு எறும்பியப்பாவும் ஆசை விஞ்சி உடனே புறப்பட்டுத் திருவரங்கமடைந்து, ஜீயர் மடத்தில் பெரிய ஜீயரைக் கண்டதும் விடாயெல்லாம் ஆறும்படியாக அவர் திருவடிகளில் விழுந்து வணங்கி ஜீயரின் திருமேனியைக் கண்ணால் பருகி அவரை விட்டுப் பிரியாது ஜீயரின் கோஷ்டியிலே தாமும் ஒருவராகி அநுபவித்துக் கொண்டிருந்தார்.

அக்காலத்தில் கந்தாடையண்ணன் ஜீயர் விரும்பி அமுது செய்யும் கீரையை நிதமும் கொடுத்து வந்தார். ஆனால் அவருடைய பெருமாளுக்கு உஞ்சவ்ருத்தி செய்து அதனால் வருமவற்றைக் கொண்டு ஆராதனை செய்து வந்தார். அவர்க்குண்டான இந்நிலையைக் கண்டு பெரிய

ஜீயர் தமக்கு வரும் காணிக்கைகளை அவருக்குத் தந்து இவ்வுலக வாழ்வுக்கும் அவ்வுலக வாழ்வுக்கும் ஒருகுறைவு வராதபடி நடத்தி வந்தார்.

வாதுசெய வென்றுசில வாதியர்கள் வந்துமன(ம்)
முறியவே நிற்ப ரொருபால்
வாழியென வேபெரிய சாபமற வென்றுசிலர்
வந்தனைகள் செய்வ ரொருபால்
போதுமினி வாதமுன பாதமரு ளென்றுநிதம்
புகழ்ந்து சிலர் நிற்ப ரொருபால்
பொங்கிவரு மெங்கள்வினை மங்கவரு வென்றுசிலர்
போற்றிசெய நிற்ப ரொருபால்
ஈதிவை கிடக்கமறை நூல்தமிழ் தெரிந்துசிலர்
ஏதமற வாழ்வ ரொருபால்
ஏதமற வாதுலர்கள் பேதையர்கள் தாமயங்கி
நிறைந்திறைஞ்சி நிற்ப ரொருபால்
மாதகவி ஞாலுலக மேழையு மளிக்கவென
வந்தஎதி ராச னடிசேர்
மாமுநிவர் தீபமரு ளாளர்மண வாளமுநி
மன்னுமடம் வாழும் வளமே''

என்று புகழ்கின்றபடி பெரியஜீயர் வாழ்கின்றபோது எறும்பியப்பாவை ஊருக்கு வரும்படி அவருடைய தகப்பனார் ஓலை யனுப்பினார். அதுகண்டும் அப்பாவும் மாமுநிகளின் பிரிவிற்குப்பயந்து போகமாட்டாமலிருக்க, அதை யுணர்ந்த ஜீயரும் அவரை நிர்பந்தித்தும் போகமுடியாதபடி யிருக்க, அவருடைய ஆசார்ய நிஷ்டையைக் கண்டு அவருக்குத் தஞ்சமாகத் தம்திருமேனியை யொத்த அர்ச்சா விக்ரஹத்தையும் திருவடி நிலைகளையும் திருவுத்தரீயத்தையும் கொடுத்து அவரை எறும்பிக்கு அனுப்பி வைத்தார். முன்பு திருநகரியில் ஜீயர் இல்லத்திலிருந்த போது துறவறத்தை ஏற்றுக்கொண்டு பிரியா அடிமை செய்துவருபவரான அழகிய வரதரென்கிற ராமாநுஜ ஜீயரும் (வானமாமலையில் கைங்கர்யங்களை நடத்தி வருவதால் வானமாமலை ஜீயர் என்றே சொல்லப்படுமவர்) வான மாமலைக்குக் கைங்கர்யத்துக்காகப் புறப்பட்டார்.

ஒருநாள் பெருங் குழுவாகக் கூடியிருந்தபோது பெரிய ஜீயர் எல்லோரையும் நோக்கி, 'தேவுமற்றறியேன்' என்றிருக்குமது; அதாவது நம்மையொழிய யறியாதபடி யிருக்குமது கோவிந்ததாஸப்பருக்கே யுள்ளது'

என்று விசேஷமாகக் கோவிந்ததாஸப்பரைக் கடாக்ஷித்தருளி, அவருக்குத் தம் பெயரால் அழகிய மணவாளப் பெருமாளையும் திருவாராதனமாகக் கொடுத்து ஆசார்ய நிஷ்டை உடையவராகச் செய்தார். அவரும் ஜீயரின் சேஷமான மோர் பிரசாதத்தை முன்னாகக் கண்டு பின் மற்றவற்றை யுண்கையை முப்பது வருஷங்கள் அநுஷ்டித்தார். அவருக்கு ஜீயரும் எல்லா அர்த்தங்களையும் அருளினார்; பெற்றுச் செயல் முற்றினவரானார். கோவிந்த தாஸப்பரும் ஆசார்யனைப் பிரியாமலிருப்பாராய், அதனாலே ஓரிராத் தங்கும்படியான ஊருக்குக்கூடப் போகாமல் வரவரமுநித் தாள் நிழலாய் வாழ்ந்து வந்தார்.

ஒரு சமயம் திருவாடிப்பூரத்தில் ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து ஆண்டாள் தீர்த்த ப்ரஸாதங்களைப் பக்தி சிரத்தையோடும் எடுத்துக்கொண்டு வந்து மணவாள மாமுநிகளுக்குச் சமர்ப்பிக்க, அதை ஜீயர் மிகவும் உகந்து ஏற்று அவருக்கு ஆண்டாளுகக்கும்படி பட்டர்பிரான் தாஸர் என்ற பெயரிட்டார். பின்பு பட்டர்பிரான் தாஸர் மிகவும் விரக்தராய் (மற்ற விஷயங்களில் பற்றில்லாதவராய்) துறவற மேற்றபின் அவருக்குப் பட்டர்பிரான் ஜீயர் என்று பெயருண்டாயிற்று. (இவரேதான் மணவாள மாமுநிகளாகி மடத்திலே காலக்ஷேபங்கள் அருளுகிற காலத்திலே வந்து அடைந்தவரும்). இவர் ஆளவந்தாரிடத்துத் தெய்வவாரியாண்டானைப் போலவும் எம்பெருமானாருக்கு வடுகநம்பியைப்போலவும் மணவாள மாமுநிகளிடத்து பக்தி கொண்டிருந்தார்.

## பெரியஜீயர் பல்லக்கைத் தூக்கிய அரசன்

இவ்வாறு ஆசார்யனே எல்லா மென்றிருக்கும் அதிகாரிகளாலே (தக்கவர்கள்)சேவிக்கப்பெற்று வாழ்ந்திருக்கும் மணவாள மாமுநிகள் நம்மாழ்வாரைச் சேவித்து நெடுநாளாகி விட்டதால் மறுபடியும் ஆழ்வாரைச் சேவிக்க அவாவிஞ்சி ஆழ்வார்திருநகரிக்குச்செல்லவேணுமென்று திருவுள்ளம் கொண்டு நம்பெருமாளிடம் அநுமதி கொண்டு அடியார்களுடன் புறப்பட்டார். இடையிலுள்ள திவ்ய தேசங்களை யெல்லாம் சேவித்துக்கொண்டு போவதாக எண்ணி முதலில் மதுரையை அடைந்தார். அங்கு மல்லாண்ட திண்டோளரான கூடலழகரைச் சேவித்து மங்களாசாசனம் செய்தருளி அன்று அங்கேயே

தங்கியிருந்தார். அப்போது அத்தேசாதிபனான மஹாபலி வாணராயன் மணவாள மாமுநிகளின் பெருமையை அறிந்திருந்தமையால், அவரிடத்துக்கு வந்து அடிவணங்கி அடிமை கொள்ளவேணுமென்று நிற்க, மாமுநிகளும் அவனுடைய ஆர்த்தி கண்டு அவனுக்குத் திருவிலச்சினை முன்னாக மந்த்ரோபதேசம் முதலான பஞ்சஸம்ஸ்காரங்களையும் செய்து அடிமைகொண்டார். அவனும் அவரிடம் ப்ரேமபரவசனாய் இருந்து விடைகொண்டு போனான்.

மாமுநிகள் அன்றைய பின்னிரவு சிறந்த பல்லக்கில் அமர்ந்து கொள்ளப் பனி மேலே படாமலிருக்கத் திரையை மூடி, வாத்யங்கள் முழங்கப் பல்லக்குப் புறப்பட்டது. இரண்டு காத தூரம் சென்ற பிறகு காலைக் கடன்களுக்காக வைகை யாற்றங்கரையில் பல்லக்கை இறக்கினர். பல்லக்கிலிருந்து மணவாள மாமுநிகள் இறங்கியருள, அரசனான மஹாபலி வாணராயனும் பல்லக்குச் சுமக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களில் ஒருவனாய் வியர்வையைத் துடைத்துக் கொண்டு அவசர அவசரமாக ஆடை திருத்திக் கொள்வதைக் கண்டு ஜீயர் வியந்து நிற்க அவ்வளவில் அரசனும் வந்து அடி பணிந்தான். "இதென்ன! இப்படியும் செய்வதே!" என்று மிகவும் பணங் கணிந்தருளினார். இறங்கியிருந்த 'முத்தரசனந்தல்' என்ற கிராமத்தை அரசன் ஜீயருக்குத் தானமாக்கி 'அங்கீகரிக்கவேணும்' என்று மிகவும் வேண்ட, ஜீயரும் தள்ள மாட்டாமையாலே அங்கீகரித்து அதற்கு 'அழகிய மணவாளநல்லூர்' எனப் பெயரிட்டு, அரசனையும் மிகவும் அருள் கூர்ந்து அரச கார்யத்தையும் பார்க்கவேணுமென்று திருப்பி யனுப்பினர்.

## பெரியஜீயர் கைபட்ட புளியமரம் மோக்ஷமடைந்தது

பின் அங்கிருந்து புறப்பட்டுத் திருப்புல்லாணி, திருவணை வழியாக வரும்போது நிழல் தேடி அங்கே வழியில் நன்றாகப் பணைத்து நின்ற ஒரு புளிய மரத்தின் அடியில் தங்கினர். இளைப்பாறி அங்கு நின்றும் புறப்படுகையில் நிழல் தந்து உதவிய அந்தப் புளியமரத்தை அநுக்ரஹிக்க வேணுமென்று அடியார்கள் வேண்ட, அப்படியே ஜீயரும் தம் திருக்கரங்களால் அந்த மரத்தைத் தொட்டுத் தடவி "மோக்ஷத்தைப் பெறக் கடவாய்' என்று

சொல்லிக் கடாக்ஷிக்க, அந்த மரமும் உடனே உலர்ந்து விட்டது. அதனைக் கண்ட பெரியோர்கள், 'ஸ்தாவராண்யபி முச்யந்தே' (மரங்களும் மோக்ஷத்தைப் பெறுகின்றன!) என்ற கீதையின் பொருளை நேரே கண்டார்கள். அங்கிருந்து ஆழ்வார் திருநகரிக்கு எழுந்தருளி ராமாநுஜர், ஆழ்வார், பொலிந்து நின்ற பெருமாள், திருப்புளியாழ்வார் (புளியமரம்) இவர்களைச் சேவித்துக்கொண்டு சில நாள்கள் தங்கி அங்குள்ளாரையும் வந்து அடியை அடைந்தவர்களையும் குளிர நோக்கிக்கொண்டும் திருவாய்மொழி ரஹஸ்யங்கள் முதலியவற்றின் அர்த்தங்களை அருளிக்கொண்டும் நிதமும் ஆழ்வார் திருமஞ்சனம் முதலான ஸந்நிதி சேவைகளையும் சேவித்துக்கொண்டும் வந்தார்,

அச்சமயம் மார்கழி மாதம் வர, 'ஐயோ! எம்பெருமானார் திருப்பாவைச் சிறப்பைப் பெற்றிலமே' என்றும் அவ்வோ காலங்களில் திருவரங்கத்தில் நிகழும் உத்ஸவங்களை நினைந்து உருகிக்கொண்டும் வாழ்ந்திருந்து, ஆழ்வார் அநுமதியுடன் புறப்பட்டு ஸ்ரீவில்லிபுத்தூருக்கு எழுந்தருளினார். அங்கு பெரியாழ்வாரையும் அவருகந்த வடபெருங் கோயிலுடையானையும் அவனுகந்தவளான ஆழ்வார் திருமகளாரான ஆண்டாளையும் சேவித்து. ஆண்டாளாலே 'நம் கோயிலண்ணரைப் போலே யிருந்தீர்!' என்று அபிமானிக்கப்பட்டுத் திருமாலிருஞ்சோலைக்கு எழுந்தருளினார். அங்கு உத்ஸவமூர்த்தியான அழகராய சுந்தரராஜன் வலசலாகத் திருக்குறுங்குடிக்கு எழுந்தருளியிருந்ததால் "இல்லம் வெறியோடிற்றாலோ' என்கிறபடி அழகழிந்திருக்கும் ஸந்நிதியைக்கண்டு துக்கப்பட்டு உள்ளே சென்று மூலவமூர்த்தியான பரமஸ்வாமியைச் சேவித்து அங்கே தளிகை பண்ணி அப்பெருமானுக்குக் கண்டருளப் பண்ணி, "உன் பொன்னடி வாழ்க!' வென்று மங்களாசாஸனம் செய்து, ""நங்கள் குன்றம் கைவிடான்'' என்ற நம்மாழ்வாரின் பொய்யில் பாடலைப் பொருளுடையதாக்கவேணும்(விரைவில் சுந்தரராஜனும் மூலவரோடு சேர்ந்தருளவேணும்) என்று வேண்டிக்கொண்டு அங்கிருந்தும் மீண்டும் கோயிலுக்கு எழுந்தருளினார்

முன்புபோலே அர்த்தங்களை அருளிக்கொண்டு வாழ்ந்திருக்கும்போது திருக்குறுங்குடியினின்றும் அழகர் தம்

முடைய குன்றமான திருமாலிருஞ்சோலைக்குத் திரும்பி ஆழ்வார் வார்த்தையையும் மணவாள மாமுநிகளின் வேண்டுகோளையும் நிறைவேற்றித் தம் ஸந்நிதி கைங்கர்யங்களையெல்லாம் குறைவற நடத்தும் ஒருவரை அனுப்பும்படி மணவாள மாமுநிகளுக்குச் சேதி யனுப்பினர். மாமுநிகளும் தம்மிடத்தில் பிரியாது வாழ்ந்திருக்கும் வைராக்கியசீலரான எதிராஜஜீயர் என்பவரைத் திருமாலிருஞ்சோலைக்குக் கைங்கர்யங்களைக் குறைவின்றி நடத்தும்படி அனுப்பினர். அந்த ஜீயரும் ஆசார்யரின் ஆணையின்படி அழகர் கோயிலுக்குச் சென்று அனைத்துக் கார்யங்களையும் திருத்திப் பணி செய்துவந்தார். மேலும் மாமுநிகள் முன்பு தம்மை அடைந்த அரசனை மஹாபலி வாணராயனுக்குத் திருமாலிருஞ்சோலையில் திருமதிள், மண்டபம் முதலான கைங்கர்யங்களைச் செய்யும்படி சேதியனுப்ப அவ்வரசனும் மிகவும் உகந்து அவ்வாறே ஸந்நிதிக்குக் கோபுர மண்டப ப்ராகாரங்கள் முதலானவைகளையெல்லாம் அமைத்தான். அதை யறிந்து மாமுநிகளும் மிகவும் களித்தார்.

பின்பு ஊரெல்லாம் சுற்றித் திரியுமவரான சிறு பிள்ளை யொருவர் ஜீயரின் திருவடிகளை யடைய, மாமுநிகளும் இவர் கோயில, திருமலை, பெருமாள்கோயில் முதலான கோயில்களிலெல்லாம் கைங்கர்யங்களைச் செய்யப் போகிறார் என்று அவரை அங்கீகரித்துத் திருவிலச்சினை முதலானவைகளை அருளி ராமாநுஜதாஸர் என்று பெயரிட்டார். அத்தாஸரும் அநேகம் ஸந்நிதிகளுக்கு அநேக கைங்கர்யங்களையும் செய்தார்.

## பெரியாழ்வார் திருமொழிக்கு உரை

பின்பு பெரியாழ்வார் திருமொழிக்குப் பெரியவாச்சான் பிள்ளை யருளிய உரை நூல் நானூறு பாட்டுகளுக்குப் பழுதுபட்டு மேல் நாற்பது பாசுரங்களுக்கு மட்டும் காண்கையாலே அந்த நானூறு பாசுரங்களுக்கும் உரை எழுதவேண்டுமென்று எண்ணி, அதற்கு உறுதுணையாகத் திருப்பாணாழ்வார் தாதர்நாயனாரைக் கூட்டிக்கொள்ள வேணும் என்று கருதி அவருக்குத் திருக்குருகூருக்கு பெரிய ஜீயர் ஓலை யனுப்பினார், தமிழ் விரகரான திருப்பாணாழ்வார் தாதர்நாயனார் ஆழ்வார் திருநகரியில் திருநந்தவனத்தில் வாழ்ந்திருந்தார். இத்திருமுகத்தை(ஓலையை)க் கண்டதும் தலை மேற்கொண்டு அங்கிருந்து புறப்பட்டு

ஸ்ரீவில்லிபுத்தூர் வழியாகத் திருவரங்கம் வந்து சேர்ந்து மாமுநிகளின் திருவடிகளில் சாஷ்டாங்கமாக வணங்கி நின்றார். அவருடைய மேனி வாட்டமும் பிரிவினாலுண்டான மனவாட்டமும் எல்லாம் தீரும்படியாகக் குளிர நோக்கி, "மிகவும் இளைத்தீரே!' என்று க்ஷேம சமாசாரங்களை விசாரித்தருளினார்.

மறுநாள் தொடங்கி அவரைக் கூட்டிக்கொண்டு மாமுநிகள் பெரியாழ்வார் திருமொழி நானூறு பாசுரங்களுக்கும் (நான்கு பத்துக்களுக்கும் ஐந்தாம் பத்து ஆரம்பமான "வாக்குத் தூய்மையிலாமையினாலே' என்ற பதிகத்துக்கு அவதாரிகை (முன்னுரை)யும் வாக்குத்தூய்மை என்றபதத்தின் அர்த்தத்தளவும்) உரையெழுதிபெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானத்தோடு சேரவைத்தார். அச்சமயம் கோயில் கந்தாடையண்ணன் (பெரியஜீயர் சிஷ்யர்) திருக்குமாரரராய் சிறுபருவத்தினரான கந்தாடைநாயன் பெரியஜீயரைச் சேவித்துப் பின் பெரியாழ்வார் திருமொழியின் உரையை முழுக்கப் படித்தார். பெரியவாச்சான்பிள்ளை உரையை (நாற்பது பாட்டுக்குள்ளதை)யும் பார்த்து அதை ஒரு பீடத்தில வைத்துப்பின் பெரிய ஜீயர் உரையையும் பார்த்து வேறுபாடு கண்டு வ்யாக்யான சக்ரவர்த்தியின் (பெரியவாச்சான்பிள்ளை) உரையைக் காட்டிலும் விசதவாக் சிகாமணியின் (மணவாள மாமுநிகள்) உரை அர்த்தஜாலங்களோடு கூடியிருந்து ரஸமாயிருக்கிறதே! அதனால் மீதமுள்ள நாற்பது பாசுரங்களுக்கும் தேவரீரே உரையிட வொண்ணாதோ என்று கேட்க, கேட்ட மாமுநிகள் வ்யாக்யானத்தின் வேறுபாடு அறியும்படியான அறிவின் கூர்மையை இளமையிலேயே பெற்றிருக்கும் தன்மைக்குக் கந்தாடைநாயனை வியந்து, "இவரும் ஓர் அவதார விசேஷம்' என்று அவரைத் தழுவிக்கொண்டார். இப்படித் தம் ஆசார்யரான திருவாய்மொழிப்பிள்ளை யருளிய உரையினும் பலபடியாலும் சிறந்ததாய ஒருரையை அருளிய பிறகு திருப்பாணாழ்வார் தாஸர்நாயனாருக்குப் பிள்ளைலோகாசார்யரின் திருவாராதனத்தில் இருந்தவராய், தமக்கு வழித்துணைவனாக இருந்த ரங்கராஜனையும் கொடுத்தருளிக் கொண்டாடி, அவரை ஆழ்வார் திருநகரிக்கு அனுப்பி வைத்தார்.

## ஆசார்ய ஹ்ருதயத்திற்கு உரை

பிறகு மணவாள மாமுநிகளும மிகவும் தளர்ந்த நிலையிலிருந்துகொண்டு ஆசார்ய ஹ்ருதயம் என்னும் க்ரந்தத்

துக்கு உரை யெழுதிக் கொண்டிருந்தார். முடியாமை யாலே அணையிலே சாய்ந்தும் நிமிர்ந்தும் கழுத்து நோவ எழுதிக்கொண்டிருந்தார். இந்த நிலையைக் கண்ட கந்தா டையண்ணன் ஜீயரைப் பார்த்து, 'எதற்காக இவ்வளவு சிரமப்பட்டு எழுதவேணும்?' என்று விண்ணப்பிக்க, ஜீய ரும் 'உம்முடைய பிள்ளை, பேரன் முதலானவர்களுக் காகத்தான் எழுதுகிறேன்' என்று பதில் கூறினார்.

ஸ்வாமி மணவாள மாமுநிகள் ஆசார்ய ஹ்ருதயத் துக்கு வ்யாக்யாநம் செய்யாது போயிருந்தால் பின்புள் ளார் அந்நூலுக்கு உரை காண்பது அரிதினும் அரிதே யாம். ஆசார்ய ஹ்ருதயத்தைப் போலே நூல் செய்ய வல்லாருமில்லை; மாமுநிகளைப் போலே உண்மைப் பொரு ளுரைக்க வல்லாருமில்லை. இவ்வாறாக ரஹஸ்யங்களுக்கும் அருளிச் செயல்களுக்கும் உரை செய்து தம்முடைய மதத்தை நிலைநிறுத்தினார். அதன் வழியாக இதர மதங்க ளைக் களைந்தாராயிற்று

அக்காலத்திலே பெரிய திருமலைநம்பி வம்சத்திலே பிறந்தவர் ஏட்டூர் சிங்கராசார்யர் என்பவர். இவர் பிறந்த குடிப் பெருமையும் தனத்தாலும் ஏதும் குறையின் மையும் உடையவர். இவர் மணவாள மாமுநிகளின் வைபவங்களை யெல்லாம் கேட்டுத் தம் பெருமையும் நாணும் தவிர்ந்து வந்துபெரியஜீயரின் திருவடி ஸம்பந்தத் தைப் பெற்றார். மேலும் ஜீயரைத் தவிர வேறு கதியில்லா மல் வாழ்ந்திருந்தார். பெரியஜீயரும் அவரை மிகவும் கடாக்ஷித்து அவர் மூலமாக வந்த செல்வங்களை யெல் லாம் ஆழ்வார் திருநகரி கோபுர கைங்கர்யத்துக்கு அனுப்பி யருளினார். அதனாலேயும் கோபுரம் பூர்த்தி பெறா மையால்அந்த கைங்கர்யத்தைப் பின்பு சிகரம் வரை பூர ணமாக ஜீயர்நாயனார் (பெரியஜீயரின் இல்லறத்துப் பேர னார்) நிறைவேற்றினார்.

இதுபோலவே திருக்குறுங்குடி முதல் வடதிருவேங்க டம் வரை திருப்பதிகளிலே விமான கோபுர ப்ராகார மண்டபங்கள் முதலான திருப்பணிகளும் கைங்கர்ய கட் டுப்பாடுகளும் பெரியஜீயரால் செய்யப்பட்டன.

## அஷ்ட திக்கஜங்கள் நியமனம்

இப்படிச் சொல்லுக்கு எட்டாத பெருமைகளை யுடைய பெரியஜீயரை அடைந்தவர்கள் எண்ணிறந்தவர்

கள். அவர்களுள் ஸத்வகுண ஸம்பந்நராய், நல்ல ஆசார்ய அநுஷ்டானங்களை யுடையவராய், உண்மைப் பொருளை யுணர்ந்தவராய். சிறந்த பொருளை யெல்லாம் அடைந்தவராயுள்ள பெரியோர்களெல்லாம் எல்லாக் காலமும் மணவாள மாமுநிகளையே சேவித்துக் கொண் டிருந்தார்கள்.

"பாராருமண்ணைக திருவேங்கடமுநி பட்டர்பிரான்
ஆராமம்சூழ் கோயில் கந்தாடையண்ணன் எறும்பியப்பா
ஏராருமப்பிள்ளை அப்பிள்ளார் ப்ரவாதிபயங்கரர்
அண்ணனென்றும்
பேரார்ந்த திக்கயம்சூழ் வரயோகியைச் சிந்தியுமே"

என்கிறபடி (1) வானமாமலை ஜீயர், (2) திருமலை(யிலே) எம்பெருமானார் ஜீயர், (3) பட்டர்பிரான் ஜீயர், (4) கோயில் கந்தாடையண்ணன், (5) எறும்பியப்பா, (6) அப்பிள்ளை, (7) அப்பிள்ளான், (8) பிரதிவாதிபயங் கரர் அண்ணா ஆகியவர்கள் அஷ்ட திக்கஜங்கள் எனப் போற்றப்படுபவர் ஸம்ப்ரதாயத்தை வளர்ப்பவர்களாக நியமிக்கப்பட்டவர்கள். இவர்களில் கோயில் கந்தாடை யண்ணனையும் ப்ரதிவாதி பயங்கர மண்ணாவையும் தம் திருப்பேரனாரான ஜீயர்நாயனாருக்கு ஈடு முப்பத்தாறாயிர மும் ஸ்ரீபாஷ்யமும் சொல்லும்படி நியமித்தார்.

ஜீயரை அடைந்தவர்களில் வானமாமலை ஜீயர், பெரிய ஜீயரை அடிமை அடைந்த நாளிலிருந்து எல்லாக் காலங் களிலும் தொடர்ந்து அடிமை செய்பவராயிருப்பர். கந் தாடையண்ணன் ஸதா ஜீயரைச் சேவித்துக்கொண்டு உடையவருக்கு முதலியாண்டானைப் போலே மிகவும் அன்புக்குப் பாத்திரமாயிருப்பர். ப்ரதிவாதி பயங்கர மண்ணா உடையவருக்குக் கூரத்தாழ்வானைப் போலே ஜீய ருக்கு உகப்பாக எதிர்வாதிகளை வென்றுகொண்டு ஸ்ரீபாஷ்யத்தை எடுத்துக் கூறுவதற்கு உறுதுணையா யிருப் பர். சேனைமுதலியாரண்ணன், சடகோபதாசன், அப் பிள்ளை, திருப்பாணாழ்வார் தாஸர்நாயனார் முதலானார் திருவாய்மொழி முதலான அருளிச்செயல்களுக்கு உறு துணையா யிருப்பார்கள். இவர்களில் சிறப்பாக அப்பிள்ளை ஜீயரின் ஆணைப்படி ஐந்து திருவந்தாதிகளுக்கும் உரை நூல் செய்து யதிராஜ விம்சதிக்கும் விசதமாக வ்யாக்யா னம் செய்து ஸ்வாமியான ஜீயருகப்புக்குப் பாத்திரமா யிருப்பர். அப்பிள்ளான் மடத்தில் எல்லாக் கார்யங்களை

யும் கவனித்துக்கொண்டு தளிகைக்குப் பாங்காக நடத்திக் கொண்டிருப்பர். பட்டர்பிரான் ஜீயர் உடையவருக்கு எம்பாரைப்போல ஜீயருக்கு நிழல்போல் பிரியாதும் பிரிந்தால் தரிக்கமாட்டாதும் அடிமை செய்துகொண்டிருப்பர். ஜீயர் நாயனார் இளவரசராய்,எல்லோராலும் வேண்டப்படுகிறவராய், திருக்குருகைப்பிரான் பிள்ளானைப் போலக் கொண்டாடத் தக்கவராயிருப்பர்.

## அவதார லக்ஷியம் அடைந்த ஜீயர்

இப்படி எல்லோராலும் சேவிக்கப்பெற்றுப் பெரும் புகழாளராக வாழ்ந்தருளும் மணவாள மாமுநிகள் உலகத்திலுண்டான சேதனர்களெல்லாம் (மக்களெல்லாம்) அர்த்த பஞ்சகத்திலே, (ஆத்ம நிலையான அடிமையில், ஈசுவரன் ரக்ஷகன் என்னும் நிலையில், தேஹ ஸம்பந்தம் தடை என்கிற நிலையில், ஈசுவரனே உபாயம் (நெறி) என்கிற நிலையில், ஈசுவரனே உபேயம் (புருஷார்த்தம்—பேறு என்கிற நிலையில்) ஊன்றி நிற்கின்றவர்களாய், சரமோபாய மென்றும் (முடிவான நெறி யென்றும்,) பஞ்சமோபாய மென்றும் (கருமம், ஞானம், பக்தி, ப்ரபக்தி (சரணாகதி) ஆகிற நான்கைக் காட்டிலும் ஐந்தாவது நெறியென்றும்) சொல்லப்படுகிற ஆசார்யனே உபாயம் (நெறி) என்பதில் ஊன்றி நிற்கின்றவர்களாய் உயர்ந்த வாழ்வைப் பெற்று உய்யும்படி அவர்களைத் திருத்தி வாழ்வித்தருளி,

"தென்னரங்கன் சீரருளுக் கிலக்காகப் பெற்றோம்
திருவரங்கந் திருப்பதியே இருப்பாகப் பெற்றோம்
மன்னியசீர் மாறன்கலை உணவாகப் பெற்றோம்
மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்
முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம்
முழுவதும் நமக்கிவையே பொழுதுபோக்காகப் பெற்றோம்
பின்னை யொன்றுதனில் நெஞ்சம் பேராமற் பெற்றோம்
பிறர் மினுக்கம் பொறாமையில்லாப் பெருமையும் பெற்றோமே"

என்று தம் வாயாலேயே சொல்லும்படி சிறப்புடனே வாழ்ந்தருளும் பெரியஜீயர், தம்முடைய திருவடிகளை அடைந்தும், தம்மிடம் உபதேசம் பெற்றும், தம்முடைய கடாக்ஷத்திற் கிலக்காகியும், தம்முடைய திருமேனியைச்

சேவித்தும், தம்முடைய தீர்த்த ப்ரஸாதங்களை ஏற்றும், தம்முடைய திருவடிகளிலே ஆத்ம ஸமர்ப்பணம் (ஆத்மாவை அடைக்கலப்படுத்தல்) பண்ணியும், தம்முடைய திருநாமத்தைப் பாடியும், தம்முடைய கல்யாண குணங்களைக் கேட்டும் தாமிருந்த திக்கை நோக்கித் தண்டனிட்டும் தம்முடைய வைபவங்களை நினைத்தும், தம்மடியார்க்கடியாரோடு ஸம்பந்தப்பட்டும், தம்முடைய பாததூளி பட்ட பூதலத்திலே பிறந்தும், நெருங்கினவர், தூரத்திலுள்ளவர்கள், இனிமேலுண்டாகுமவர்கள் ஆகியஎல்லா மக்களும், மற்ற செடி, கொடி, மரங்களும் ஸம்ஸாரத்தினின்றும் விடுபட்டு உய்யும் வகை செய்து சம்சாரமென்றும் பரமபதமென்றும் வேறுபாடின்றி உலகமெங்கும் பொன்னுலகமாக்கி, இனி தேடித் திருத்துதற்கு ஆளில்லாமற் செய்து, தம்மை அவதரிப்பித்த (பிறப்பித்த) திருமாலின் எண்ணத்தை நிறைவேற்றிச் செய்தவேள்வியரானார்.

## தென்னரங்கர் தேவியருடன் தரிசனம்

பிறகு ஜீயர் அயர்வறு மமரர்கள் அதிபதியான பரமபத நிலையினை இமையா நாட்டத்தவராயிருந்து சேவித்து அவ்வநுபவத்தாலுண்டான அன்பு உள்ளடங்காமல் எல்லா அடிமைகளையும் செய்யவேண்டுமென்னும் அவாவிஞ்சியிருக்கையில் தம் மேனியில் நோயை ஏற்று எழுந்து நடையாடுதல் ஒழிந்திருந்தார். அப்போது, ‘பெருமாளுக்கும் திருநாளாய் வீதியார வருவானை அந்த வடிவழகை இந்த வுடம்போடு இனி ஒருநாளுங் காணேனே’ என்று மிகவும் ஆசையோடே பெருமாள் சேவையை விரும்பியிருக்க, பெருமாளும் உடுத்து முடித்து அலங்கரித்துக் கொண்டு திருத்தேரிலே புறப்பட்டு ஜீயர் மடத்து வாசலிலே வந்து சேவை தந்தருள, பெரிய ஜீயரும் வாடிய பயிருக்கு மழை போலே ‘நீடுபுகழ் தென்னரங்கர் தேவியரும் தாமுமாக வந்து என்னிடர் தீர்த்தாரிப்போது’ என்று தம் ஆசை தீரப் பெருமாளை அநுபவித்தார். மறுபடியும் ஜீயர் இட்டகால் இட்ட கையராய் பரவசராய் மேனி மிகத் தளர்ந்திருக்க, மீண்டும் பெருமாளும் புறப்பட்டுச் சேவைசாதிக்க, ஜீயரும் கைத்தலத்திலே வெளியே வந்து பெருமாளைச் சேவித்து ஆநந்தபரவசரானார். பிறகு வானமாமலை ஜீயர் முதலானார்க்குக் கடுக வரும்படி ஓலை விட அவர்களும் வந்து ஜீயரைச் சேவித்துக்

கொண்டிருந்தார்கள். ஜீயருக்கும் நோய் குணமாயிற்று. அதனால் வானமாமலை ஜீயர், ஜீயரிடம் 'வானமாமலை கைங்கர்யம் கார்யமாக அடியேன் விடை கொள்கிறேன்; விரைவில் திரும்பி வருகிறேன்' என்று கூறி அநுமதி பெற்று வடதேசத்துக்கு எழுந்தருளினார்.

## ஆர்த்தி ப்ரபந்தம் அருளல்

பிறகு சிலநாள கழிந்தவாறே ஜீயரும் முன்பு போல முடியாதவராய், அடையவேண்டிய தேசத்திலே (பரம பதத்திலே) விருப்பும், விடவேண்டிய தேசத்திலே (லீலா விபூதியில்) வெறுப்பும், அதன்மேல் தமக்கு வகுத்த ஸ்வாமியான உடையவர் திருவடிகளில் ப்ரேமையும் பெருகி வர, அந்த அநுபவத்தைப் பெறமாட்டாமையால் ஆர்த்தி பெருகி, அதன் காரணமாகப் பிரிந்தால் தரிக்க மாட்டாத பரமபக்தி தலையெடுத்து, அதனடியாக நாள் தோறும் தமக்குண்டாகும் நிலைகளை உடையவரிடம் நேரே விண்ணப்பம் செய்வாராய், "ஆர்த்தி ப்ரபந்தம்" என்கிற அறுபது பாசுரங்களையும் அருளிச்செய்தார்.

பேற்றுக்கு விரைவாக ப்ரபந்தம் செய்ததோடு நில்லாமல் "எம்பெருமானார் தம்பிரா னென்னுமவரை நம் பெருமாள் தாமுகந்து நாடோறும் தம்பரமா ஏறிட்டுக் கொண்டளிப்பர் என்று மவர்தம்மை வேறிட்டுத் தாம் கைவிடார் என்று தேறுவதும்,

"பொல்லா னிவனென்று போதிடென்று நங்குரவர்
எல்லாரு மென்னை இகழ்ந்தாரே—நல்லார்கள்
வாழ்வான வைகுந்த வான்சபையில் வன்கூரத்
தாழ்வா னிருந்திலரோ அங்கு"

என்று கலங்குவதும்,

"ஆரியர்காள்! ஆழ்வீர்காள்! அங்குள்ள முத்தர்!
காள்!
சூரியர்காள்! தேவியர்காள்! சொல்லீரோ!—
நாரணற்கு
எங்களடியான் இவனென் றீடேறவேணுமென்
றுங்களடி யாருமுள(ன்)"

என்று சேர்ப்பார் பலரையும் கால்கட்டிக் கூவுவதும்,

"தென்னரங் கன்தேவி சீரங்க நாயகியே!
மன்னுயிர் கட்கெல்லாம் மாதாவே!—என்னை யினி
இவ்வுலகந் தன்னில் இருந்து நலங்காமல்
அவ்வுலகில் வாங்கி அருள்"

என்றும்,

"'ஸ்ரீரங்க நாயகியே! தென்னரங் கன்தேவி!
நாரங்க ளுக்கெல்லா நற்றாயே!—மாருதிக்கு
வந்தவிடாய் தன்னையொரு வாசகத்தாற்
என்தனிடர் தீராத தென்'' (போக்கினநீ
என்றும் தாயுறவைச் சொல்லி மடி பிடிப்பதும்,
''இந்த வுடம்போ டினியிருக்கப் போகாதுன்
செங்கமலத் தாள்தன்னைத் தந்தருள் நீ—அந்தோஓ!
மையார் கருங்கண்ணி மணவாளா! தென்னரங்கா!
வைகா திருப்பாயே யிங்கு''

என்று கூப்பீடு கேட்கின்றவர் முன்னே தம்முடைய ஆர்த்தியைச் சொல்லுவதுமாகத் தம் நிலைமையை அந்தரங்கரை முன்னிட்டுக்கொண்டு இரக்கத்தை இரந்து ஒரு தேச விசேஷத்திலே (பரமபதத்திலே) சென்றாலொழியத் தரித்திருக்க முடியாத நிலையை அடைந்து மணவாள மாமுநிகள் எழுந்தருளியிருந்தார்.

அந்த சமயத்தில் வேறுநாட்டவரான மேல் நாட்டுத் தோழப்பர் என்பவரும் அவர் தமயனாரான அழகிய மணவாளப்பெருமாள்நாயனார் என்பாருமானஇருவரும் பெருமாளைச் சேவிக்கவேணுமென்று ஸ்ரீரங்கத்துக்கு வந்தார்கள். அவர்களைப் பட்டர்பிரான் ஜீயர் கண்டு, 'நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்? நீங்கள் எங்குப் போகிறீர்கள்?' என்று விசாரித்தார். அவர்களும் வினயமாகக் கீழே விழுந்து வணங்கி எழுந்துவந்த கார்யத்தை(பெருமாளைச் சேவிக்க) உள்ளவாறு சொன்னார்கள். 'அதுகேட்டுப் பட்டர்பிரான்ஜீயர், "உங்களைப் பார்க்கும்போதே ஞான பக்தி வைராக்யங்கள் தெற்றெனத் தோன்றுகின்றனவே. இப்படி அநுகூலராயிருக்கிற நீங்கள் எம்பெருமானாரின் மறு அவதாரமான நம்முடைய பெரியஜீயரைச் சேவிக்க வேண்டாமோ' என்று,கூறஅவர்களும் இசைந்து அவரை முன்னிட்டுக்கொண்டு மடத்துக்கு வந்து மணவாளயோகி கஞ்சமலர்த் தாளிணைகளை தஞ்சமாகப் பட்டர்பிரான் ஜீயர் காட்ட, வந்தவரில் மூத்தவரான நாயனாரும்,

"போரச் சிவந்து பரிமளம் விஞ்சிப் புதுக்கணித்த
சீதக் கமலத்தை நீரேற வோட்டிச் சிறந்து அடியேன்
ஏதத்தை மாற்றும் மணவாளயோகி யினிமைதரும்
பாதக் கமலங்கள் கண்டேன் எனக்குப் பயமில்லையே!

என்று வாயார சொல்லிக்கொண்டே தம்பியுடன் கீழே விழுந்து தண்டன் ஸமர்ப்பித்தார்கள். பெரிய ஜீயரும்

அவர்கள்விரும்பியபடியே அவர்களைக் குளிரக்கடாக்ஷித்து 'இவர்கள்' என்றார். உடனே அவர் திருவுள்ளம் எம்பெருமானாரிடம் சென்றது.

## திருநாராயணபுரத்தில் நித்யவாசஞ் செய்ய நியமனம்

எம்பெருமானாருடைய விசேஷ அபிமாநமா யிருந்துள்ள திருநாராயணபுரத்தை நினைத்து, "அவர் அந்திம தசையில் அருளியபடி திருநாராயணபுரத்தில் நித்யவாசம் செய்வார் நம்மைச் சார்ந்தாரில் யாருமில்லையே' என்று அருளினார். அதுகேட்டதும் தோழப்பர், "இந்த கைங்கர்யம் அடியேற்காக வேணும்' என்று வேண்ட, ஜீயரும் "எம்பெருமானார்க்கும் நமக்கும் ப்ரியமாகும்படி கைங்கர்யத்தை முன்னிட்டுக்கொண்டு யதிராஜ ஸம்பத்குமாரரைச் சேவித்து மங்களாசாசனம் செய்துகொண்டு நித்யவாசம் பண்ணியிரும்' என்று பணித்தார். அப்படியே என்று அத்தோழப்பரும் அவர் தமயனார் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் ஜீயர்கட்டளைப்படி பட்டர்பிரான் திருவடி ஸம்பந்தம் பெற்றுச் செயல் முடிந்தவராய்த் திருநாராயணபுரம் சென்று செல்வப்பிள்ளை, திருநாராயண பெருமாள்களுக்கு அணுக்கராய்க் கைங்கர்யங்கள் செய்து கொண்டு வாழ்ந்து வந்தனர்.

## பெரியஜீயரின் முடங்கிய திருவடிகள் நிமிர்ந்தன

பிறகு, அக்காலத்திலே எம்பெருமானாராலே அபிமானிக்கப்பட்ட திருமலைநல்லான் வம்சத்தில் பிறந்தவராய், இடங்கொள் சமயத்தை யெல்லாம் எடுத்துக்களைந்து தன் மதத்தை நிறுவியிருப்பவரான அண்ணராய சக்ரவர்த்தி என்பார் திருமலையில் ஸந்நிதியில்கார்யம் பார்ப்பவர் தம் குடும்பத்தோடு நம்பெருமாளைச் சேவிப்பதற்காக ஸ்ரீரங்கத்தை யடைந்து பெருமாளைச் சேவித்திருந்தார்கள். அப்போது நோயேற்றிருந்த பெரிய ஜீயரை அவ்வூரிலுள்ளாரும் வெளியூர்களிலிருந்து வந்தாருமாக எல்லோரும் கூட்டம் கூட்டமாக மடத்திற் சென்று சேவித்து விட்டு வருவாரும் போவாருமாக இருந்தார்கள். இதனைக்கண்ட அண்ணராய சக்ரவர்த்தியின் தாயார் காரணம் அறிந்து தம் குமாரரைப் பார்த்து, அண்ணராயரே! நாம் மணவாள மாமுநிகளைச் செவிக்கவேண்டாமா?' என்று கேட்டார். ராயரும் இசைந்து தம் குடும்பத்தாரெல்லோரையும் அழைத்துக் கொண்டு மடத்துக்குச்

சென்று பட்டர்பிரான் ஜீயரை முன்னிட்டுக்கொண்டு பெரியஜீயர் திருவடிகளை எல்லோரும் வணங்கினர்.

இதுவரை பெரியஜீயர் திருவடிகள் அங்கீகரிக்க ஆளில்லாமையாலே நோய்த் தன்மையாலே போலே முடங்கியிருந்தன. அந்தத்திருவடிகள் அப்போது அண்ணராய சக்ரவர்த்தியைக் கண்டதும் நிமிர்ந்தன. பெரிய ஜீயரும் தம் திருவடிகளை அவர் திருமுடியில் வைத்து அலங்கரித்தார். இதைக் கண்டு அங்கிருந்த எல்லோரும் வியந்தனர். 'இவருடைய (அண்ணராயருடைய) புருஷார்த்தம் இருந்தபடியே' என்று கொண்டாடினர். பிறகு பெரிய ஜீயரும் அண்ணராயசக்ரவர்த்தியை நோக்கி, 'திருவேங்கடத்தில் எம்பெருமானார் ஜியரை வேங்கட த்ரோஹிகள் நலியாதபடி காத்து ரக்ஷித்தும் நம் தரிசன விஷயமாக அநேக கைங்கர்யங்களைச் செய்தும் வாழ்பவரன்றோ நீர்!' என்று கூறி மிகவும் உகந்து, 'சற்று முன்னாக வந்து சேரப் பெற்றிலீரே' (நாம் நன்றாயிருக்குங் காலத்தில் வந்திலீரே) என்றுசொல்லிபட்டர்பிரான் ஜீயரை,யட்டிவாரீர் கோவிந்ததாஸப்பரே!' ராமபிரானுக்கு இளையபெருமாள் வலதுபுஜம் போன்றவர்' என்பதுபோல நீர் நமக்கு வலது புஜமாயிருப்பவர். ஆகையால் நம் கையாலேயே செய்வதாக நினைத்து, நம்முடைய உறவை விரும்பும் இவர்களுக்குப் பஞ்ச ஸம்ஸ்காரம் முதலானவைகளைச் செய்யும்' என்று பணித்தருளி அண்ணராய சக்ரவர்த்தியையும் அவர் குடும்பத்தாரையும் தோழப்பர், அழகிய மணவாள நாயனார் முதலானாரையும் அவர் கையிலே காட்டிக் கொடுத்து மேலும் "இவர்களை மேல்விழுந்தாகிலும் நம் தரிசனத்தை நடத்திப் போகும்படி திருத்தும்' என்று அருளிச்செய்தார். பட்டர்பிரான் ஜீயரும் அப்படியே அவர்களைக் கைக்கொண்டு விசேஷ கடாக்ஷம் செய்தருளினார்.

பிறகு அப்பிள்ளானும் ஜீயர் நாயனாரும் மணவாள மாமுநிகளைச் சேவித்து, 'அடியோங்களுக்குத் தஞ்சமாகத் தேவரீருடைய அர்ச்சாரூபமான விக்ரஹம் வேணும்' என்று வேண்டிக்கொண்டனர். ஜீயரும் அதற்கு அநுமதி கொடுத்து அந்தத் திருமேனியை ஆக்குவதற்கு மூலப் பொருளாகத் தம்முடைய கைச்செம்பை (நித்யமாக உபயோகத்துக்குள்ள செம்பு) தந்தருளினார். அதைக்கொண்டு பெரியஜீயரின் அர்ச்சா திருமேனிகள் (விக்ரஹம்) இரண்டை எழுந்தருளப்பண்ணி இருவரும் உகந்தனர்.

# திருநாட்டுக் கேகத் தீவிரப்படுதல்

பின்பு மாமுநிகள் தம்மைச் சார்ந்தவர்களுக் கெல்லாம் தனித்தனியே வேண்டிய ஹிதங்களை உபதேசம் செய்தருளி, கலங்காப் பெருநகரான பரமபதத்தில் சென்று இமையா நாட்டமுடையவராய்த் தொடர்ந்து வழுவிலா அடிமை செய்யவேண்டுமென்று எண்ணித் தாம் இவ்வுலக வாழ்வைத் துறக்க நான்கு நாள்கள் முன்னதாகத் தம் அடியார்களை அருளிச்செயல் நாலாயிரத்தையும் சேவிக்கும்படி பணித்தார். அவர்களும் அப்படியே சேவித்தனர். அவற்றையெல்லாம் திருச்செவி சாய்த்து ஆநந்தக்கண்ணீருகுத்து 'வளர்த்ததனால் பயன் பெற்றேன்' என்று உகந்து கைகூப்பி வணங்கினார். பிறகு பெரியஜீயர் திருவாய்மொழியின் வ்யாக்யானமான ஈடு முப்பத்தாறுயிரத்தை மனதினால் அநுபவித்துக் கொண்டிருந்தார். அதில் அர்த்த ரஸத்தின் அநுபவத்தாலுண்டான ஈடுபாட்டில் தம்மை மறந்து கண்களை மூடிக்கொண்டிருந்தார். இதைப் பார்த்துக் கந்தாடையண்ணன் ஜீயரை நோக்கி, "இப்போது திருவுள்ளத்தில் ஓடுகிறது என்ன?' என்றுகேட்க, ஈட்டின் அர்த்த ரஸங்களிலே ஆழ்ந்து போனேன்!' என்று ஜீயர் பதில் கூறினார்.

பின் 'மருள் ஒழிநீ மடநெஞ்சே!' எனஇடையீடில்லாத கைங்கர்யத்துக்குப் பரமபத ப்ராப்தியைப் பகவான் தருகிறபோது திவ்யதேச அர்ச்சாவதாரங்களில் ஈடுபடுவதாகிற ப்ரமையை (மருட்சியை) ஒழி என்கிற தசை பிறந்து, ஏகாதசி கழிந்த மறுநாள் த்வாதசியன்று ஸந்நிதியிலுள்ள உத்தமநம்பி முதலான கைங்கர்யபரர்களையெல்லாம் அழைத்து அவர்களிடம் "தம் பிழையைப் பொருத்தருள வேணும்' என்று வேண்டிக்கொள்ள, அவர்களும் 'உமக்கும் ஒரு அபசாரமுண்டோ!' என்று விண்ணப்பஞ் செய்ய, ஜீயர் மறுபடியும் அவர்களைக் குறித்து "'நம்பெருமாளுடைய கைங்கர்யங்களைக் குறைவில்லாமல் நடத்திக்கொண்டு வாருங்கள்; வெளியூர்களிலிருந்து வரும் ஸ்ரீவைஷ்ணவர்களையும் இங்குள்ளாரையும் அரவணைத்துக் கொள்ளுங்கள்'' என்று அருளி அவர்களை அனுப்பி வைத்தார். பிறகு தம்முடைய திருவாராதனைப் பெருமாள்களாகிய உடையவர், ஸ்ரீரங்கராஜர் இவர்களையும் ஸ்ரீகோசங்களையும் மற்றுமுண்டான வஸ்துக்களையும் மடத்தையும் நம்பெருமாளுக்குச் சமர்ப்பித்துப் பின்னர்

ஸ்ரீவைஷ்ணவர்களை அமுது செய்தருளப்பண்ணி (சாப்பிடச் செய்து) அவர்களின் தீர்த்தத்தையும் பெற்றுக் கொண்டு அவர்களிடமும் பிழை பொறுத்தருளும்படி வேண்டிக்கொண்டு அமர்ந்திருக்க, பழுத்தமரத்தைப் பறவைகள் சூழ்ந்திருப்பதைப் போல ஜீயரை அடியார்கள் அனைவரும் கைகளைக் கூப்பிக்கொண்டு பரிவோடு சூழ்ந்திருந்தார்கள்.

## பெரியஜீயராம் பாஸ்கரன் பிரிந்தார்!

மாலை சூரியன் மறைந்ததும் அக்காலத்துக்குரிய தம் காலக் கடமையைச் செய்தருளி "திருவாய்மொழிப்பிள்ளை திருவடிகளே சரணம்' என்றும், 'வாழி யுலகாசிரியன்' என்றும் அநுசந்தித்துத் திருவாய்மொழிப்பிள்ளையை த்யானம் செய்துகொண்டே தம் வசமிழந்து அணையிலே சாய்ந்திருந்தார். அனைவரும் கைகூப்பி வணங்கிக்கொண்டு, "ப்ரஹ்மவல்லி, ப்ருகுவல்லி, சூழ்விசும்பணிமுகில், அர்ச்சிராதிகதி, இராமாநுச நூற்றந்தாதி இவைகளைப் பேராரவாரத்துடனே சேவித்தார்கள். அப்படிச் சேவிக்கையில் 'அங்கயல் பாய்வயல் தென்னரங்கன்' என்ற பாட்டை அநுசந்திக்கும்போது ஜீயரும் கைகளைக் கூப்பிக் கொண்டு "எம்பெருமானார் திருவடிகளே சரணம்' என்று சொல்லிஎம்பெருமானார் விஷயத்தில் நெஞ்சு குடிபோய்ச் சாய்ந்திருந்தார். பிறகு 'கனககிரி மேல் கரியமுகில் போல் வினதை சிறுவன் மேற்கொண்டு' என்றும், 'எந்தை திருவரங்கர் ஏரார் கருடன் மேல் வந்து முகங் காட்டி வழி நடத்த' என்றும் இவர் முன் அபேக்ஷித்த படியே திருவரங்கப்பெருமான் பெரிய திருவடி மேல் வந்து தன் வடிவழகைக் காட்டி அநுபவிக்க, ஜீயரும் முற்றும் அநுபவித்து, "இனியுன் சரணம் தந்து என் சன்மம் களையாய்' என்று பிரார்த்தித்துப் பெருமாளும் அதன்படி அவரை வழி நடத்த, அவரும் சுஷும்நை என்னும் நாடி வழியாகக் கபாலம் பேதித்துத் திருநாட்டுக்கு எழுந்தருளினார்.

பிறகு, இளையபெருமாளைப் பிரிந்த சக்ரவர்த்தித் திருமகனைப் போலே பெரியபெருமாளும் இளையபெருமாளின் அவதாரமான மணவாள மாமுநிகளின் பிரிவுக்கு மிகவும் கலங்கினார். அவரடியை அடைந்து உய்ந்தவர்களான பெரியோர்களெல்லாம் வேரற்ற மரம் போல விழுந்து

கடல் கொந்தளித்தது போலக் கலங்கினர்கள், 'ஐயோ கண்ணபிரான்!', 'முறையோ அரவணைமேல் பள்ளி கொள்ளும் முகில்வண்ணனே!' என்று இப்படிப் பல சொல்லி புலம்பி மயங்கி விழுந்தனர். அங்கிருந்தவர்கள் தேற்றத் தேறிச் சுற்றுமுள்ள இடங்களிலுள்ள பெரியோர்களுக்கெல்லாம் மணவாள மாமுநிகள் திருநாட்டுக்கு எழுந்தருளினர் என்ற செய்தியை அனுப்பினர்கள். இதையறிந்து ஆங்காங்குள்ள அனைவரும் மடத்தையடைந்து இறுதித் திருமேனியைக் கண்ணிலும் நெஞ்சிலும் தேக்கிக்கொண்டு துக்கித்திருந்தனர். ஐப்பசியில் திருமூலத்தில் அவதரித்து எழுபத்துமூன்று வருஷங்கள் உலகத்துயிர்களை யெல்லாம் வாழ்வித்து, மாசிமாதத்துச் சுக்ல பக்ஷத்து துவாதசியில் திருநாட்டுக்கு எழுந்தருளிய வைபவங்களை யெல்லாம் ஒருவருக்கொருவர் சொல்லிப் பிரிவுக் காற்றாது கலங்கியிருந்தனர்.

## பெரியஜீயரைத் திருப்பள்ளி படுத்துதல்

ஜீயருக்கு இறுதிச் சடங்கைச் செய்யக் கோவிப் பெரியோர்களுடன் கூடி ஜீயர் நாயனர் (பெரிய ஜீயரின் திருப்பேரனர்) திருக்காவேரியில் தீர்த்தமாடித் திருமண்காப் பணிந்து) வந்து ஜீயர் திருமேனியைத் திருமஞ்சனம் (ஸ்நாநம்) செய்விக்க வேணுமென்று வேதிகையில் எழுந்தருளப்பண்ணி, புருஷ சூக்தத்தையும் த்வயத்தையும் இதமுதலாக வேண்டியவைவற்றை யெல்லாம் எல்லோரும் அநுஸந்தித்துக் கொண்டிருக்க மஞ்சன மாட்டிவைத்துத் திருப்பரியட்டமும் சாத்திப் பன்னிரு திருமண்களையும் தரிக்கச் செய்தார். அப்போது ஜீயரின் ஸ்ரீபாதச் சாயையைப் பெறுதல், தீர்த்தத்தை ஏற்றல் முதலானவற்றைத் தங்களுக்கு ஆபத்துக்கு உதவும் பொருளாகப் பெரியோர்கள் கொண்டனர். பிறகு அத்திருமேனியை திவ்ய ஆசனத்திலே வைத்து அவர் திருவடிகளை அங்கிருந்த பெரியோர்களனைவரும் தம்தம் கண்ணிலும் நெஞ்சிலும் திருமுடியிலும் (தலை) ஒற்றிக்கொண்டு அப்போதைய அத்திருமேனியழகைத் தங்கள் நெஞ்சிலே தேக்கிக் கொண்டிருந்தனர்.

திருவரங்கப்பெருமாளும் அரைச் சிவந்த ஆடையையும் திருமுடித் திருத்துழாய் மாலையையும் ஜீயருக்கு அனுப்பியருள, உத்தமநம்பியும் அவற்றைத் தலைமேல்

தாங்கிக்கொண்டு ஸகல வாத்யங்களும் முழங்க ஜீயர் மடத்து வாசலிலே வர, ஜீயர் நாயனார் முதலானவர்கள் எதிரே சென்று அவற்றை ஏற்று ஜீயரின் திருமேனியை அவற்றால் அலங்கரித்தனர். குழுமியிருந்த பெரியோர்களனைவரும் எம்பெருமானாரைச் சேவியாத குறை தீர இவரைச் சேவித்துக் கொண்டிருந்தோம். இவரும் தீர்த்தம் ப்ரசாதித்ததே (திருநாட்டுக்கு எழுந்தருளினாரே) என்று ஏங்கி நின்றனர். இவ்வாறாக ஜீயருக்கு ஸ்ரீசூர்ண பரிபாலனமும் செய்து அப்ரசாதத்தை எல்லோரும் ஏற்றனர்.

மதிமுக மடந்தையர் திருவிளக்கேந்த, வாத்யங்கள் கடல்போல் முழங்க, ஜீயர் திருமேனியைப் புஷ்பப் பல்லக்கிலே வைத்துக் கொண்டு புறப்பட்டனர். முன்னே பொறிகள், புஷ்பங்களைச் சிதறினர்; கமுகுத் தோரணம் நாட்டினர்; வீதிகளை அலங்கரித்தனர்; ஒற்றைச் சின்னம் ஊதினர்; "தரிசனத்தை வளர்த்தருளிய தக்கோர் மணவாளமாமுநிகள் திருநாட்டுக்கெழுந்தருளினார்; விசதவாக் சிகாமணியான ஈட்டுப் பெருக்கர் திருநாட்டுக் கெழுந்தருளினார்" என்று முழங்க வீதியிலுள்ளார் அனைவரும் ஜீயரை வணங்கி நின்றனர். இப்படியாக எழுந்தருளுவித்துக்கொண்டு போய் ஆதிகேசவப்பெருமாள் திருவடி நிழலிலே அவனடி பிரியாவண்ணம் தவராசர்படுகையிலே யதி ஸம்ஸ்கார முன்னாகப் பள்ளிப்படுத்தினர். பூமிப்பிராட்டியும் பிராட்டியை (சீதையை)த் தன்னுள் அணைத்துக் கொண்டாற் போல கிடைத்தற்கரிய பெரிய ஜீயரின் திருமேனியையும் தன்னுள் மறைத்துக்கொண்டாள். பெரியோர்களனைவரும் சிஷ்யனுடையவும் புத்ரனுடையவுமான திருமுடி விளக்கம் (க்ஷௌரம்) முதலானவற்றைச் செய்துகொண்டு யாகத்துக் குறுப்பான ஸ்நாநத்தையும் செய்தனர். திருவடி யடைந்து உய்ந்தவர்களனைவரும் மடத்துக்குத் திரும்பினர். மடம், 'இல்லம் வெறியோடிற்றாலோ' என்றும், 'அழகழிந்தால் ஒத்ததாலோ' என்றும் சொல்லுகிறபடி வெறிச்சோடிக் கிடந்தது. அது கண்டு மீளவும் துக்கக்கடலில் மூழ்கினர். பிறகு தேறி ஜீயருக்குத் திருவத்யயனத்தையும் பெருக்க நடத்தினர். பிறகு முதலிகள் தம் தமக்குப் பணித்தபடி கைங்கர்யங்களைச் செய்துகொண்டிருந்தனர்.

## ஜீயர் நாயனார் தரிசன நிர்வாகியாதல்

பிறகு ஜீயர் நாயனாரைப் பெருமாள் அருளப்பாடிட்டுக் குலதனமாக ஸ்ரீரங்கராஜ விக்ரஹத்தையும் (ஜீயர் ஆராதித்து வந்தது) ஜீயர் மடத்தையும் அவரிடம் ஒப்படைத்து, "பெரிய ஜீயரைப் போலவே தர்சனத்தையும் ஸ்ரீரங்க ஸ்ரீயையும் நிர்வகித்துக்கொண்டிரும்!' என்று நியமித்தார். அதுபோலவே எல்லா முதலிகளும் பெரிய ஜீயரைப் பார்ப்பது போலவே ஜீயர் நாயனாரையும் சேவித்துக்கொண்டு வாழ்ந்திருந்தார்கள்.

பிறகு கந்தாடையண்ணனும் தம் ஆசார்யரான மணவாள மாமுநிகள் பணித்தபடியே ஜீயர் நாயனாருக்குத் திருவாய்மொழியின் ஈடுமுப்பத்தாறாயிரத்தையும் குறைவற உபதேசித்தருளினார். அதேபோல ப்ரதிவாதிபயங்கர அண்ணாவும் ஆசார்யரின் கட்டளைப்படி ஸ்ரீபாஷ்யத்தையும் ஜீயர் நாயனாருக்கும் கந்தாடை நாயனுக்கும் அநுக்ரஹித்தார் (உபதேசித்தார்).

வடநாட்டுக்கு எழுந்தருளியிருந்த வானமாமலை ஜீயர் திருமலைக்கு வந்தபோது ஜீயர் திருநாட்டுக்கு எழுந்தருளி சகல கார்யங்களும் நிறைவேறின என்ற சேதி கேட்டு மிகவும் துக்கமடைந்து ஸ்ரீரங்கத்துக்கு வராமலேயே வானமாமலைக்கு எழுந்தருளி ஸ்ரீகார்யங்களைச் செய்துகொண்டிருந்தார்.

பின்பழகிய மணவாளதாஸர் என்று மறுபெயரையுடைய எறும்பியப்பா ஜீயர் பரமபதித்தமையைக் கேட்டு மிகவும் கலங்கிப் பிரிவாற்றாமையாலே "கூவிக் கொள்ளுங் காலம் இன்னம் குறுகாதோ!' என்ற எண்ணத்துடனே வாழ்ந்து வந்தார். இவர் மணவாளமாமுநிகள் தினசர்யைகளை (தினசரி நடத்தும் செயல்களை) உள்ளீடாக வைத்துப் பூர்வ தினசர்யை, உத்தர தினசர்யை முதலான நூல்களை அருளி, அந்த தினசர்யைகளையே தமக்குக் காலக்ஷேபமாகக் கொண்டு ஆசார்ய நிஷ்டையுடையவராக வாழ்ந்து வந்தார்.

இப்படியாக ஜீயர் பரந்த கருணையுள்ளத்தாராய், மானிடராய்ப் பிறந்தாரைத் தம் அடியெனும் நிழலைக் காட்டி ஸம்சாரமாகிற கானலில் அழுந்தாவகை செய்து பேற்றைப் பெறுவித்து, அதிலும் ஆசார்யனே எல்லாம்

என்னும் நிஷ்டையை வளர்த்தார். நம்பெருமாளுக்கு ஈடு உரைத்து, பெருமாளால் பெரியஜீயர் என்று கொண்டாடப்பட்டார்; சாற்றுமறை யன்று நம்பெருமாளே சிஷ்யனுகித் தனியனை அருளிச்செய்து ஜீயரைத் தனக்கு ஆசார்யனுக ஏற்றுக்கொண்டார். அதனுலே இப்போதுவரை ஜீயரின் தீர்த்தநாளை (திவசத்தை) நம்பெருமாள் நடத்தி வருகிருர். இப்படிப் பல பெருமைகளையுடைய மணவாளமாமுநிகளைப்பற்றி எழுதுவது யார்க்கும் எளிதல்ல. இன்னும் பல பெருமைகளை வல்லார் வாய்க் கேட்டுத் தெரிந்துகொள்ளவேணும்.

இதுவரை ஆழ்வார்களைப் பற்றிச் சுருக்கமாயும், ஆசார்யர்களைப் பற்றிச் சுருக்கியும் பெருக்கியும் எழுதி வந்து பூர்வாசார்யர்களுள் இறுதியில் எண்ணப்படுகிற மணவாளமாமுநிகளைப் பற்றிப் பெருக்கமும் சுருக்கமுமில்லாமல் எழுதி முடிக்கலாயிற்று.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாதுமில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரும்
உய்ய அவர்களுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ
சடகோபன் தண்தமிழ் நூல்வாழ—கடல் சூழ்ந்த
மண்ணுலகம் வாழ மணவாள மாமுநியே!
இன்னும் ஒரு நூற்றாண்டிரும்.

ஆழ்வார் எம்பெருமானுர் சீயர் திருவடிகளே சரணம்.

**குரு பரம்பரை வைபவம் முற்றுப்பெற்றது.**

முற்றும்